ய்க்கொண்டுதோற்றி. எம்பெருமான் - எனக்குநாதனானவனாய். யாரும் - எத்தனையேனும் ஜ்ஞாநாதிகளாலதிகராகிலுமநாஸ்ரிதரால். ஓர்நிலைமையன் - ஒருபடியையுடையன். என - என்று. அறிவரிய - அறியவரியனாம்படியைக்காட்டி. எம்பெருமான் - என்னையடிமைகொண்டநாதனாய். யாரும் - எத்தனையேனு மறிவிலிகளாகிலுமாஸ்ரிதர்க்கு. ஓர்நிலைமையன் - வ்யவஸ்த்திதஸ்வபாவன். என - என்று. அறிவெளிய - அறியவெளியனாம்படியைக்காட்டி. எம்பெருமான் - என்னையடிமைகொண்டநாதனானவனுக்கு. ஓர்பேரும் - ஒருபேரும். ஓருருவமும் - ஒருரூபமும். உளதில்லை - உண்டாயிருப்பதில்லையென்று ப்ரதிகூலர்க்கும். இலதில்லை-ஒருபேருமொருரூபமுமில்லையாயிருப்பதில்லையென் றநுகூலர்க்கும். பிணக்கு - நித்யப்பிணக்காயிருக்கும்.

இங்குபலவிடத்திலும் "எம்பெருமான்" என்றது - அந்தவந்தவுபகாரங்களாலுண்டானவுகப்பாலே.........................................................*

---

## ௩ - நான்காம்பாட்டு.

இப்படியிருக்கிற அவதாரஸௌலப்ய மொருவர்க்கு மறிய நிலமன்றேயென்னில், ஆஸ்ரிதர்க் கத்யந்தஸுலபனா யநாஸ்ரிதர்க்கத்யந்த துர்லபனாயிருக்குமென்கிறார்.

(யாரும்) எத்தனையேனு மதிஶயிதஜ்ஞாநராயிருக்குமவர்களேயாகிலும் ஸ்வயத்நத்தாலே காணுமன்று "இன்னபடிப் பட்டிருப்பதொரு ஸ்வபாவத்தை யுடையவன்" என்றறியவொண்ணாத என்ஸ்வாமியானவன்.

(யாரும்) இந்தயச்சப்தம் தாழ்ச்சிக்கெல்லையிலே நிற்கிறது. ஜந்மவ்ருத்தஜ்ஞாநங்களாலோ ரளவுமில்லையேயாகிலும் தானேகாட்டக்காணுமவர்களுக்குத் தன்படிகளெல்லாமறியலாயிருக்கும். எங்கேகண்டோமென்னில், ஒருகுரங்கு, வேடச்சி, இடைச்சி, இவர்களுக்கெளியனாயிருக்கக்கண்டோமிறே. (எம்பெருமான்) ஆஸ்ரிதர்க்கெளியனாய் அநாஸ்ரிதர்க்கரியனானவென்னை யன்னாயிருந்தபடி யென்னென்றெழுதிக்கொடுக்கிறார், "நமோ நமோ வாங்மநஸாதிபூமயே நமோ நமோ வாங்மநஸைகபூமயே" (நமோநமோவாங்மநஸாதிபூமயே நமோநமோவாங்மநஸைகபூமயே) என்றாற்போலே.

(பேருமோராயிரம்) அநுபவிதாக்களுக் கிழிந்தவிடமெல்லாந் துறையாம்படி யநேகந்திருநாமங்களை யுடையனாயிருக்கை. குணத்துக்கு வாசகமாயும் ஸ்வரூபத்துக்கு வாசகமாயும் வருமவற்றுக்கோரெல்லையில்லையிறே, "தேவோ நாமஸஹஸ்ரவாந்" (தேவோநாமஸஹஸ்ரவாந்) என்கிறபடியே.

(பிறபலவுடைய) அந்நாமத்வாரா காணு மநேகந் திருமேனி களையுடையனுயிருக்கை. "பிற" என்ன - திருமேனியைக் காட்டுமோ வென்னில் "𑌨𑌾𑌮𑌰𑍂𑌪𑌂 𑌚 𑌭𑍂𑌤𑌾𑌨𑌾𑌂" (நாமரூபஞ்ச பூதாநாம்) "𑌨𑌾𑌮𑌰𑍂𑌪𑍇 𑌵𑍍𑌯𑌾𑌕𑌰𑌵𑌾𑌣𑌿" (நாமரூபேவ்யாகரவாணி) என்று நாமத்தோடேசேர ரூபத்தையுஞ்சொல்லக்கடவது. அவ்வளவேயல்ல, இவர் தாமுமித்தை யநுபாஷிக்கிற விடத்திலே "பேருமோருருவமும்" என்றருளிச்செய்து வைத்தார்.

(பேருமோருருவமும்) இவற்றிலே யொருதிருநாமமும், ஒரு விக்ரஹமும். (உளதில்லை) அநாஸ்ரிதர்க்கு ஸ்த்தூலப்ரதிபத்தியுமரிதாயிருக்கும். (இலதில்லை) ஆஸ்ரிதர்க்கெல்லாங் காணலாமாகையாலேயில தில்லை. (பிணக்கே) ஆஸ்ரிதர்க்கெல்லாங் காண்கையாலே மங்களாஸா ஸநம்பண்ணி நிற்பர்கள், அநாஸ்ரிதரிவை யில்லையென் றிருக்கையாலே முதலிலே கிட்டார்கள், இரண்டுக்கும் நடுவே வஸ்துநித்யமாகப் பெற் றோமே! என்றுதாமினியராகிறார். அன்றியே, (பேருமோருருவமுமு ளது) திருநாமமும் திருநாமத்துக்கு வாச்யமான திருமேனியும்நித்யம். இலதில்லை. (இல்லைபிணக்கே) இவ்விடையாட்டத்தில் விவாதம் வே ண்டாவென்கிறார்.)......................................................*

---

## ஜீயர் அரும்பதம்.

நான்காம்பாட்டு. (யாருமோரித்யாதி) கீழ் "மாயை" என்ற வவதார ரஹஸ்யமாவது - அவதாரஸௌலப்யம்.

முந்தினயச்சப்தம் - உத்கர்ஷபரம். பிந்தினயச்சப்தம் - நிகர்ஷபரம். அவதாரிகையிற்சொன்ன வாஸ்ரிதாநாஸ்ரிதராகிறார் - ஸ்வயத்நபரரும் நிவ்ருத்திபரருமென்னுதல். யத்வா, அர்த்தத்வயமாதல். நிலைமை - ஸ்வபாவம்.

யாரும் - யார்க்கும். ஸப்தார்த்தம் (ஜந்மவ்ருத்தேத்யாதி) குரங்கு-ஸுக்ரீவமஹாராஜர். வேடச்சி-ஸபரி. இடைச்சி-யஸோதையாதல், சிந்தயந்தியாதல்.

(எம்பெருமானென்று) பதத்வயோபாதாநம். அப்படி யாஸ்ரிதர்க்கெளி யனு யநாஸ்ரிதர்க்கரியனு யிருக்கிறவிருப்பிலே யீடுபட்டெழுதிக்கொடுத்த பேரு ண்டோவென்ன (நமோநமஇத்யாதி) (பூமயே என்றாற்போலே) இருக்கிறதெ ன்று கூட்டிக்கொள்வது.

ஆயிரமென்று - ஆநந்த்யத்தைச்சொல்லுகிறது, "𑌶𑌤𑌂 𑌸𑌹𑌸𑍍𑌰𑌮𑌯𑍁𑌤𑌂 𑌸𑌰𑍍𑌵𑌮𑌾𑌨𑌨𑍍𑌤𑍍𑌯𑌵𑌾𑌚𑌕𑌂" (ஶதம்ஸஹஸ்ரமயுதம் ஸர்வமாநந்த்யவாசகம்) என்னக்கடவதிறே. உபபாதநம் (குணத்துக்கித்யாதி) "𑌸𑌹𑌸𑍍𑌰𑌾𑌸𑍍𑌯𑌃 𑌸𑌹𑌸𑍍𑌰𑌾𑌕𑍍𑌷𑌃 𑌸𑌹𑌸𑍍𑌰𑌚𑌰𑌣𑍋 𑌵𑌿𑌭𑍁𑌃 । 𑌸𑌹𑌸𑍍𑌰𑌬𑌾𑌹𑍁𑌃 𑌸𑌰𑍍𑌵𑌜𑍍𑌞𑍋 𑌦𑍇𑌵𑍋 𑌨𑌾𑌮𑌸𑌹𑌸𑍍𑌰𑌵𑌾𑌨𑍍" (ஸஹஸ்ராஸ்யஸ்ஸஹஸ்ராக்ஷ ஸ்ஸஹஸ்ரசரணோவி

புஃ । ஸஹஸ்ரபாஹுஸ்ஸர்வஜ்ஞோ தேவோநாமஸஹஸ்ரவாந் ) இதிமஹாபாரதே பீஷ்மஃ. ஸ்வரூபத்துக்கு - ஸ்வாஸாதாரணவிக்ரஹங்களுக்கு.

பிற - மற்றவை. திருநாமங்களுக் கந்யமாயிருக்கிற திருமேனிக ளென்றபடி. ( நாமத்வாராகாணும் ) நாமத்வாரா வறியப்படுகிற. " பேரும் " என்ற வநந்தரம் " பிற " என்கிறவிது - ரூபவாசியென்னுமதுக்கு நியாமகம் ( பிறவென்னவித்யாதி ) " [illegible] । [illegible] " ( நாமரூபஞ்சபூதாநாம் க்ருத்யாநாஞ்சப்ரபஞ்சநம் । வேதசப்தேப்யஏவாதௌதேவாதிநாஞ்சகாரஸஃ ) இதிப்ரதமேம்சேபஞ்சமே. சாந்தோக்யே, " [illegible] " ( அநேநஜீவேநாத்மநாநு ப்ரவிஶ்யநாமரூபேவ்யாகரவாணி ) தேவாதீநாம்பூதாநாம் நாமதேயம்ரூபஞ்ச க்ருத்யாநாம்ப்ரபஞ்சநஞ்ச. க்ருத்யங்கள் - செயல்கள். ப்ரபஞ்சநம் - வெளியிடுகை. நியாமகாந்தரம் ( அவ்வளவேயித்யாதி )

ஓர்பேருமோருருவமுமென்றந்வயம். ஸ்த்தூலப்ரதிபத்த்யபாவஃ-சர்மிஞ்ஞபிஜ்ஞாநாபாவஃ. பிணக்கே - பிணக்குண்டோ. இல்லையென்றுசப்தார்த்தம். ஏகாரம் - பிரிநிலையேகாரம். பிணக்கில்லையென்றுகக்கிறு ரென்கிறுர் ( ஆஶ்ரிதரெல்லாமித்யாதி ) பிணக்கு - விவாதம். அன்றிக்கே, பிணக்கே - பிணக்காயிருக்கும். இப்படியாஶ்ரிதர்க்கு மநாஶ்ரிதர்க்கும் நித்யவிவாதமா யிருக்குமென்றமாம். நித்யமாக - நிரவத்யமாக. க்ரமேணாந்வயஃ..................................................*

---

# ஐந்தாம்பாட்டு.

---

பிணக்கறவறுவகைச்சமயமுநெறியுள்ளியுரைத்த
கணக்கறுநலத்தனனந்தமிலாதியம்பகவன்
வணக்குடைத்தவநெறிவழிநின்றுபுறநெறிகளைகட்
டுணக்குமின்பசையறவவனுடையுணர்வுகொண்டுணர்ந்தே.

## ஆறுயிரப்படி.

( பிணக்கற ) இப்படி விப்ரதிபத்தி யுண்டாயிருந்தவிடத்தி லிவனுடைய வுண்மையை நிஶ்சயிக்கும்படி யெங்ஙனேயென்னில்.

அந்த ப்ரதிகூல ஷட்ஸமயங்களுக்கு மநுகூலரான வைதிகர்க்குமிப்படியுள்ள விப்ரதிபத்தி தீரும்படி வேதமார்க்கத்தை யுள்ளபடியே யநுஸந்தித்து, ஸாங்கமான ஸகலவேதங்களுக்குந் தானே ப்ரதிபாத்யனென்னுமிடத்தையும், அபௌருஷேயமாகையாலே நிர்த்தோஷமான வேதத்தோடே விரோதிக்கையாலே இதரஸமயங்கள் ப்ரமாணமன்றென்று

மிடத்தையும், ஸ்வாபாவிக ஸார்வஜ்ஞ்யாதி ஸகலகல்யாண குணோபேதனை தானே ஸ்ரீகீதையிலே யருளிச்செய்தருளினன். இப்படி வேதார்த்தத்தை யுள்ளபடியே வ்யக்தமாக்கின விம்மஹாகுணத்தையுடையனை யெம்பெருமான்றிறமான பக்தியோகத்திலே நின்று, ப்ராக்ருதவிஷயங்களாகிற களையைக்கடிந்து, அவற்றின் ஸங்கத்தையும் விடுங்கோள். எங்ஙனேவிடும்படியென்னில்; அவனருளிச்செய்தருளின ஸ்ரீகீதையாலே ஸமஸ்தகல்யாண குணாத்மகனானவவனை யுணர்ந்து, வ்யதிரிக்தஸங்கத்தை விடுவதென்கிறார்...............................................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், இப்படி ஸுலபனானவனை யாஸ்ரயிப்பதவனருளிச்செய்த கீதோபநிஷத்ப்ரமாணஸித்தமான பஜநத்தாலேயென்கிறார்.

அறுவகைச்சமயமும்பிணக்கற - அறுவகைச்சமயமுந் தன்னிற்றனும் வைதிகரோடும் பிணக்கறும்படி. நெறி - வேதமார்க்கத்தை. உள்ளி-ஆராய்ந்து. உரைத்த - அருளிச்செய்த. கணக்கறு - எண்ணிறந்த. நலத்தனன் - ஔதார்யாஸ்ரித வாத்ஸல்யாதிகல்யாணகுணங்களையுடையனாய். அந்தமில் - முடிவில்லாத. ஆதி - முதலாகையாலே. நித்யனாய். அம் - ஹேயப்ரதிபடனாய். பகவன் - கல்யாணரூபமான ஜ்ஞாநஸக்த்யாதிகுணவிஸிஷ்டனை பகவானுடைய. வணக்கு - நமஸ்யாதிகளை. உடை - உடைத்தான. தவநெறிவழி - பக்திமார்க்கத்திலே. நின்று-நிலைநின்று. புறநெறி - "அந்யாவாவொவிஶுஜ" (அங்யாவாசோவிமுஞ்சத) என்கிற அல்லாதவழிகளாகிற. களை - களையை. கட்டு - அறுத்து. அவனுடை - அவனுடையவிஷயமான. உணர்வுகொண்டு - பக்திரூபஜ்ஞாநத்தைக்கொண்டு. உணர்ந்து - தர்ஸித்து. பசை - வாஸநாரூபமானபசை. அற - அறும்படி. உணக்குமின்-உலர்த்திவிடுங்கோள்.....................................................*

---

## ஈடு - ஐந்தாம்பாட்டு.

பலகாலும் பஜியுங்கோளென்றுநின்றீர், பஜநோபாயமிருக்கும்படியை யருளிச்செய்திரோன்ன; இன்று நானுபதேஸிக்கவேணுமோ; அவன்றான் ஸ்ரீகீதையிலே யருளிச்செய்த பக்திமார்க்கத்தாலே யவனை யாஸ்ரயியுங்கோளென்கிறார்.

(பிணக்கற வறுவகைச்சமயமும்) வைதிகஸமயத்துக்கும் பாஹ்யஷட்ஸமயங்களுக்குந் தன்னிற்றனுண்டான பிணக்கறும்படியாக (நெறியுள்ளியுரைத்த) தான்சொல்லிற்றடைய வேதார்த்தமாயிருக்கச்செய்தே, தந்தாமுக்கென்னவோரர்த்தம் போதியாதார் ஆராய்ந்துசொல்லுமாபோலே விசாரித்தருளிச்செய்தான். அதுக்குநினைவென்னென்னில்;

அஹ்ருதயமாகச்சொல்லிலும் நன்றாயிருக்கச்செய்தே, ப்ரஜைகளுடைய ஹிதத்திலுண்டான வாதராதிஸய்த்தாலே, சடக்கெனச்சொன்னால் "வாய்வந்தபடி சொன்னான் நிருபியாதே" என்பர்களென்று ஆராய்ந்துசொன்னானாகச்சொன்னபடி.

(கணக்கறுநலத்தனன்) எல்லையில்லாதகுணத்தையுடையவனென்னுதல், எல்லையில்லாத ஸ்நேஹத்தையுடையவனென்னுதல்; ஆரிரக்கச்செய்தான், தன் வாத்ஸல்யத்தாலே யருளிச்செய்தானித்தனையிறே. வாத்ஸல்யத்தாலே சொல்லிற்றெல்லா மர்த்தமாயித்தனையோவென்னில் (அந்தமிலாதி) ஆப்ததமன்; எல்லார்க்கு முத்பத்தி விநாஸங்களாலேயிறே ஜ்ஞாநஸங்கோசம்பிறப்பது, இவனுக்கவையில்லாமையாலே அகர்மவஸ்யனென்கிறது. (அம்பகவன்) ஜ்ஞாநாதிகளாலல்பமுத்கர்ஷமுடையவன்பக்கலிலே பகவச்சப்தம் வர்த்தியாநின்றதிறே; "அந்யத்ர ஹ்யுபசாரதஃ" (அந்யத்ரஹ்யுபசாரதஃ) பகவச்சப்தம் முக்யமாகவிருப்ப திவன்பக்கலிலே, அல்லாதார்பக்க லௌபசாரிகம்.

(அம்பகவன்வணக்குடைத்தவநெறிவழிநின்று) "நமஸ்யந்தஸ்ச மாம் பக்த்யா" (நமஸ்யந்தஸ்சமாம்பக்த்யா) என்று பக்திஸாஸ்த்ரத்திலே நின்றருளிச்செய்தானிறே. அங்காபரிஷ்வங்கம்போலே போகரூபமாயிறேயிதுதானிருப்பது. (வணக்குடைத்தவநெறிவழிநின்று) வணக்கத்தையுடைய பக்திமார்க்கமாகிற வழியிலேநின்று. பக்திஸாஸ்த்ரத்திலே "மாம் நமஸ்குரு" (மாம்நமஸ்குரு) என்கையாலே "வணக்குடை" என்கிறது. தபஸ்ஸப்தத்தாலே-பக்தியைச்சொல்லிற்று, பக்தி, ஜ்ஞாநவிஸேஷமாகையாலே. "யஸ்ய ஜ்ஞாநமயம் தபஃ" (யஸ்யஜ்ஞாநமயம்தபஃ) என்கிற ந்யாயத்தாலேயென்னுதல், இவனுடைய ப்ரேமமாத்ரத்தையேகுவாலாகநினைத்திருக்கும் பகவதபிப்ராயத்தாலேயாதல்.

(புறநெறிகளைகட்டு) புறநெறியாகிற களையைக்கடிந்து-பறித்து. கட்டல் - களைதல். பக்திவிஷயமானபோது, பலாந்தரத்திலேபோம் விலக்கடிகளைத்தள்ளி என்றாகிறது, ப்ரபத்திவிஷயமானபோது, இதரஸாதநங்களைத்தள்ளி என்றாகிறது. (உணக்குமின்பசையற) "ரஸவர்ஜம்" (ரஸவர்ஜம்) என்கிறபடியே பாஹ்யவிஷய ப்ராவண்யத்தை ருசிவாஸநைகளோடே விடுங்கோள். இதெல்லாமென்கொண்டுதானென்னில் (அவனுடையுணர்வுகொண்டுணர்ந்து) தத்விஷயஜ்ஞாநத்தைக்கொண்டென்னுதல், தது்க்தஜ்ஞாநத்தைக்கொண்டென்னுதல்; பக்திமார்க்கத்தைக்கொண்டென்னுதல், அவனருளிச்செய்த சரமஸ்லோகத்திற்படியைப்பற்றிநின்றென்னுதல்.............................................................*

## ஜீயர் அரும்பதம்.

ஐந்தாம்பாட்டு (பிணக்கறவித்யாதி) (அறுவகைச்சமயமும்) ஶாக்யோ லூக்யாக்ஷபாதக்ஷபணககபிலபதஞ்சலிமதங்கள்.

"உள்ளி" என்று விஶேஷித்ததுக்குபாவம் (தான்சொல்லிற்றித்யாதி) "வா஗்விவ்ருதாஶ்சவேதா:" (வாக்விவ்ருதாஸ்சவேதா:) என்றதிலேநோக்கு. போதியாதார் - தோற்றுதார். சடக்கென - ஶீக்ரமாக. ஆதராதிஶயத்தாலே - ஆராய்ந்துசொன்னானென்றந்வயம்.

ப்ரதமார்த்தத்துக்கு, "நலம்" என்று - ஜாத்யேகவசநம். ஸ்நேஹமென்றதுக்குபாவம் (ஆரிரக்கவித்யாதி) ஶிஷ்யஸ்நேஹமென்றது - வ்யாஜமாத்ரம்; "அஸ்தாநஸ்நேஹ" (அஸ்த்தாநஸ்நேஹ) இத்யாதி. வாத்ஸல்யம்-ஸ்நேஹம்.

அர்த்தமாமித்தனையோ) யதாதர்ஶித்வமும் வேண்டாவோவென்னிலென்றபடி. ஆத்யந்தராஹித்யத்தாலே-யதார்த்ததர்ஶித்வமும் ஸூசிதம். ஏதத்பலிதம் (ஆப்ததமனென்று) விவரணம் (எல்லார்க்குமித்யாதி) (உத்பத்திவிநாஶங்களாலே) தத்தேதுபூதகர்மங்களாலே (அவையில்லாமையாலே) அந்தக்கர்மங்களில்லாமையாலே. அகர்மவஶ்யன் - ஜ்ஞாநஸங்கோசரூபகர்மவஶ்யதையில்லை.

"பகவன்" என்னவமையாதோ, "அம்பகவன்" என்ன வேணுமோவென்ன (ஜ்ஞாநாதிகளித்யாதி) "அம்" என்றதின்தாத்பர்யத்தை யருளிச்செய்கிறார் (அந்யத்ரேத்யாதி) அம் - அழகு. முக்யதையே - அழகென்றுகருத்து. "தத்ர பூஜ்யபதார்த்தோக்திபரிபாஷாஸமந்வித: । ஶப்தோயம் நோபசாரேண ஹ்யந்யத்ர ஹ்யுபசாரத:" (தத்ரபூஜ்யபதார்த்தோக்திபரிபாஷாஸமந்வித:। ஶப்தோயந்நோபசாரேணஹ்யந்யத்ரஹ்யுபசாரத:) இதிஷஷ்டேம்ஶே பஞ்சமேபரவித்யாயாம். பூஜ்யபதார்த்தோக்தி:-யோக:. பரிபாஷா-ரூடி:. தத்ர-நாராயணே. "அந்யத்ர" (அந்யத்ர) இத்யாதிக்குபாவம். (பகவச்சப்தமித்யாதி) அல்லாதார் - ப்ரஹ்மாதிகள்.

வணக்குடைத்தாயிருக்குமோ தவநெறியென்ன (நமஸ்யந்தஶ்சேத்யாதி) "ஸததம் கீர்த்தயந்தோ மாம் யதந்தஶ்ச த்ருடவ்ரதா: । நமஸ்யந்தஶ்ச மாம் பக்த்யா நித்யயுக்தா உபாஸதே" (ஸததம்கீர்த்தயந்தோமாம்யதந்தஶ்சத்ருடவ்ரதா:। நமஸ்யந்தஶ்சமாம் பக்த்யாநித்யயுக்தாஉபாஸதே) இதிகீதாஸூநவமே. "மந்மநா பவ மத்பக்தோ மத்யாஜீ மாம் நமஸ்குரு । மாமேவைஷ்யஸி யுக்த்வைவமாத்மாநம் மத்பராயண:" (மந்மநாபவமத்பக்தோமத்யாஜீமாந்நமஸ்குரு। மாமேவைஷ்யஸியுக்த்வைவமாத்மாநம்மத்பராயண:) இதிதத்ரைவ. (பக்திஶரீரத்திலேநின்று) பக்திஸ்வரூபத்தை ப்ரதிபாதிக்கிறவிடத்திலேதானேநின்று. அம்பகவன் விஷயமான வணக்குடைத்தவ நெறியென்று கூட்டிபாவம் (அங்காபரிஷ்வங்கேத்யாதி) குணவத்விஷயமாகையாலே போகரூபமாயிருக்குமென்றபடி. ஶப்தார்த்தம்பண்ணுகைக்காக மீளவும் ப்ரதீகோபாதாநம் (வணக்குடையித்யாதி) வணக்குடைத்தாயிருக்குமென்னுமதுக்கு ப்ரமாணாந்தரம் (பக்திஶரீரத்திலேயித்யாதி) பக்திப்ரதிபாதநஸ்த்தலத்திலே யென்றபடி.

( பக்திஜ்ஞாநவிஶேஷமாகையாலே ) “ தப ஆலோசநே ” (தபஆலோசனே) இதிஹிதாதுரிதிஹாவ:. முண்டோபநிஷத் “ யஸ்ஸர்வஜ்ஞஸ்ஸர்வவித் யஸ்ய ஜ்ஞாநமயம் தப: . ” ( யஸ்ஸர்வஜ்ஞஸ்ஸர்வவித் யஸ்யஜ்ஞாநமயந்தப:. ) குவாலாக - தபஸ்ஸாகவாதல், அதிகமாகவாதல். பகவதபிப்ராயத்தாலேயென்றது - ஸாதநபக்திபக்ஷத்தில் அங்குராவஸ்த்தையைப்பற்ற. ஸாத்யபக்தியானபோது ஸ்வரஸம். அன்றிக்கே, யோஜநாத்வயமும் பக்திப்ரபத்தியோஜநாத்வயத்தைப்பற்றவாதல்.

கட்டு - பிடுங்கி. விலக்கடிகள் - காம்யங்கள். ( ப்ரபத்திவிஷயமானபோது ) “ தவநெறி ” என்றவிடத்தில், தபஶ்ஶப்தம் - “ தஸ்மாந்ந்யாஸமேஷாம் தபஸாமதிரிக்தமாஹு: ” ( தஸ்மாந்ந்யாஸமேஷாம்தபஸாமதிரிக்தமாஹு: ) என்கிறபடியே ப்ரபத்திபரம். மேலே “ அவனுடையுணர்வுகொண்டு ” என்றத்தோடு புநருக்தமாகாமைக்காக, தவநெறிவழிநின்றென்றது - அத்யவஸித்தென்றபடி. ப்ரபத்திவிஷயமானபோதென்கையாலே ப்ரபத்திபரமாகயோஜிப்பது. அப்போது, வணக்குடைத்தவநெறியென்று - “ த்வமேவ ஶரணம் ” ( கச்சத்வமே நம்ஶரணம் ) என்றுபதேஶிக்க, “ த்ரௌபத்யா ஸஹிதாஸ்ஸர்வே நமஶ்சக்ருர் ஜநார்த்தநம் ” ( த்ரௌபத்யாஸஹிதாஸ்ஸர்வேநமஶ்சக்ருர்ஜநார்த்தநம் ) என்றநுஷ்டாநதஶையில்சொன்ன காயிகநமஸ்காரத்தையுடைத்தான, “ தபஸாமதிரிக்தமாஹு: ” ( தபஸாமதிரிக்தமாஹு: ) என்கிற தபஶ்ஶப்தவாச்யமானவத்வேஷருபப்ரபத்தியைச் சொல்லுகிறது.

பக்திபரமானபக்ஷத்தில், காம்யபலங்களில் ருசிவாஸநைகளைவிடுங்கோளென்கிறார் ( ரஸவர்ஜமித்யாதி ) “ விஷயா விநிவர்த்தந்தே நிராஹாரஸ்ய தேஹிந: । ரஸவர்ஜம் ரஸோऽப்யஸ்ய பரம் த்ருஷ்ட்வா நிவர்த்ததே ” ( விஷயாவிநிவர்த்தந்தே நிராஹாரஸ்யதேஹிந:। ரஸவர்ஜம்ரஸோப்யஸ்யபரம்த்ருஷ்ட்வாநிவர்த்ததே ) இதிகீதாஸூத்விதியே. ( ரஸவர்ஜமென்கிறபடியே ) “ ரஸோऽப்யஸ்ய பரம் த்ருஷ்ட்வா நிவர்த்ததே ” ( ரஸோப்யஸ்யபரம்த்ருஷ்ட்வாநிவர்த்ததே ) இதிஶ்லோகத்தின்படியே. இத்தால் - நிராஹாராதிகளாலே விஷயராகத்தை நிவர்த்திப்பித்துக்கொண்டு, பகவத் ஸாக்ஷாத்காரத்தாலே ருசிவாஸநைகளைப் போக்கிக்கொள்ளுங்கோளென்றபடி. ப்ரபத்திபரமானபோது, உபாயாந்தரங்களில் ருசிவாஸநைகளைப்பசையறவுணக்குமினென்று கண்டுகொள்வது.

தபஶ்ஶப்தோக்தார்த்த த்வயாநுகுண்யேநார்த்தத்வயம் ( தத்விஷயஜ்ஞாநேத்யாதி ) உக்தார்த்தத்வய விவரணம் ( பக்திமார்க்கேத்யாதி ) தஜ்ஞக்தஜ்ஞாநமென்கிறது - ப்ரபத்தியை. தத்விஷயஜ்ஞாநமென்கிறது - பக்தியை.

பக்திபரமானபோது, கணக்கறுநலத்தனன் அந்தமிலாதியம்பகவனறுவகைச்சமயமும் பிணக்கற நெறியுள்ளியுரைத்த வணக்குடைத்தவ நெறிவழிநின்று, அதாவது - உபக்ரமதஶையில் அத்யவஸித்து. அவனுடையுணர்வுகொண்டுணர்ந்து - அநுஷ்டாநதஶையில் ஜ்ஞாநத்தை ப்ராபித்து. புறநெறிகளைகட்டுப் பசையறவுணக்குமி னித்யந்வய:. அன்றிக்கே - ப்ரபத்திபரமானபோது, அறுவகைச்சமயமு

ம் பிணக்கறவென்று தொடங்கி, அம்பகவனானவனுடைய வுணர்வுகொண்டுணர்ந்து வணக்குடைத்தவநெறிவழிநின்று, புறநெறிகளை கட்டுப்பசையற வுணக்குமினித்யங்வயோவா. நெறி - வேதமார்க்கம். சமயமும் - சமயத்துக்கும். பிணக்கு - விவாதம். உணக்குமின் - உலர்த்திவிடுங்கோள்.............................................*

# ஆறாம்பாட்டு.

உணர்ந்துணர்ந்திழிந்தகன்றுயர்ந்துருவியந்தவிந்நிலைமை
யுணர்ந்துணர்ந்துணரினுமிறைநிலையுணர்வரிதுயிர்கா
ளுணர்ந்துணர்ந்துரைத்துரைத்தரியயனரனென்னுமிவரை
யுணர்ந்துணர்ந்துரைத்துரைத்திறைஞ்சுமின்மனப்பட்டதொன்றே.

## ஆறாயிரப்படி.

(உணர்ந்துணர்ந்து) ஜ்ஞாத்ருத்வைக ஸ்வரூபமாய், ஜ்ஞாநதஸ் ஸர்வகதமாய், ப்ரக்ருதிவிநிர்முக்தமாயிருந்தபரிஶுத்தாத்மஸ்வரூபத்தை யுள்ளபடியே விஶதமாயுணரிலும் ஆஶ்ரித ஸமாஶ்ரயணீயத்வார்த்தமாக தேவமநுஷ்யாதி ரூபேணாவ தீர்ணனான விந்த ஸர்வேஶ்வரனாகிறான் ப்ரஹ்மாவோ, ருத்ரனோ, நாராயணனோ, என்றறிகை யரிது. ஆகிலெங்ஙனேயறியும்படியென்னில்; அரியயனரனென்னுமிவர் திறமாக பஹுஶாஸ்த்ர ஶ்ரவண மநநங்களைப்பண்ணுவது. இப்படி பஹுஶாஸ்த்ர ஶ்ரவணமநநங்களைப் பண்ணவே யவர்களிலொருவ னீஶ்வரனென்று தோற்றும்; அவனை யாஶ்ரயியுங்கோளென்கிறார்............ .....................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், ப்ரஹ்மருத்ரமத்யகதமான ப்ரதமாவதாரம் தத்ஸஜாதீயபுத்தி விஷயமாகையாலே விவேகிக்கவரிது, அத்தை விவேகித் தாஶ்ரயியுங்கோ ளென்கிறார்.

உணர்ந்துணர்ந்து - ஜ்ஞாத்ருத்வஸ்வபாவனானையாலே யென்றுமொக்க வுணருகையே ஸ்வபாவமாகவுடையனாய், இழிந்தகன்றுயர்ந்து - அந்த ஜ்ஞாநம் நிக்ருஷ்டவேஷத்திலபரிச்சின்னமாகையாலே தத்த்வாராபத்துக்திக்கிலும் வ்யாபித்து. உரு - ரூபயோக்யமான அசித்திற்காட்டில். வியந்த - வேறுபட்டிருக்கிற. இந்நிலைமை - இந்தவாத்மாவின் நிலைமையை. உணர்ந்து - ஶ்ரவணத்தாலேயுணர்ந்து. உணர்ந்து - அநுக்ஷமேலே மநநத்தாலே யுணர்ந்து. உணரிலும் - யோகத்தாலே ஸாக்ஷாத்கரித்துணர்ந்தாலும். இறைநிலை - ஸர்வேஶ்வரன் ப்ரஹ்மருத்ரர்கள் நடுவே தன்னை மறைத்துநிற்கிறநிலை. உணர்வரிது - விவேகித்தறியவரிது. உயிர்காள் - சேதநரானபடியாலே விவேகித்தறியும் ஸ்வபாவரானவர்களே. அரியயனரனென்

னுமிவரை - அரி, அயன், அரனென்று ப்ரஸித்தரானவர்களை. உணர்ந்துணர்ந்து - அவர்கள் குணவிபூத்யாதிகளையிட்டுப் பலகாலுமாராய்ந்து. உரைத்துரைத்து - தத்ப்ரதிபாதகமான ப்ரமாணங்களையும் பலகாலும் வ்யவஹரித்துப் பார்த்துப்பார்த்து. மனப்பட்டதொன்று - நெஞ்சிலீஸ்வரனாகப்பட்ட தொருவஸ்துவை "வ்யாஹாரஞாமநுஸ்மரந" (வ்யாஹரந்மாமநுஸ்மரந்) என்கிறபடியே. உணர்ந்துணர்ந்து - தத்குணவிக்ரஹாதிகளைப் பலகாலு மநுஸந்தித்து. உரைத்துரைத்து - தத்வாசகமான மந்த்ரநாமாதிகளைப் பலகாலும் வ்யவஹரித்து. இறைஞ்சுமின் - உபாஸியுங்கோள்.

இயத்தல் - வேறுபாட்டாலே விலக்ஷணமா யிருத்தல். "இந்நிலைமை" என்று உக்தப்ரகாரவைலக்ஷண்ய மாத்மாவுக்கொழியவில்லை யென்கிற ஸம்ப்ரதிபத்தியைச் சொல்லுகிறது.....................................................................*

---

## ௬-ஆம் பாட்டு.

அவதாரத்திலே யாஶ்ரயியுங்கோளென்று நின்றீர் ; "மத்யேவிரிஞ்சகிரிஶம்ப்ரதமாவதார:" (மத்யேவிரிஞ்சகிரிஶம்ப்ரதமாவதார:) என்கிறபடியே ப்ரஹ்மருத்ரர்கள் நடுவே அவதீர்ணனாய் நிற்கிறநிலையாயிருந்தது ப்ரதமாவதாரம், அதில் மூவருமொத்த கார்யத்திலே அதிகரித்துநின்றார்கள், இப்படி நிற்கையாலே ; மூவரும் ப்ரதாநரோ ! மூவரிலே யொருவன் ப்ரதாநனோ ! மூவர்க்குமவ்வருகே யொருவன் ப்ரதாநனோ ! என்றெங்களால் விவேகிக்கப்போகாமையாலே யாஶ்ரயணத்திலே யருமைகூடும்படியாயிருந்தது, ஆஶ்ரயணீயவஸ்துவை நிரூபித்துத் தரலாகாதோ ! நாங்களாஶ்ரயிக்கும்படியென்ன ; காண்கிற தேஹமே ஆத்மாவென்றிருக்கும் நிலைதவிர்ந்து, தேஹாதிரிக்தமா யிருப்பதொரு ஆத்மவஸ்துவுண்டென்றறிகை தானே யரிது ; வருந்தியத்தை யறிந்தானேயாகிலும், ப்ரஹ்மருத்ராதிகளை ஶரீரமாகக்கொண்டு தான் ஶரீரியாய்நிற்கிற ஸர்வேஶ்வரன்படி தானேயறியப்போகாது ; ஆனபின் பிவ்வழியேயிழிந்தாஶ்ரயிக்கப் பாருங்கோளென்று, ஆஶ்ரயணீயவஸ்துவின்னதென்றும், ஆஶ்ரயிக்கும் ப்ரகார மின்னதென்று மருளிச்செய்கிறார்.

(உணர்ந்து) உணர்வென்னாதே "உணர்ந்து" என்கையாலே, "ஜ்ஞப்திமாத்ரமேயுள்ளது, ஜ்ஞாத்ருத்வமில்லை" என்கிறபக்ஷத்தைத்தவிர்க்கிறது. "உணர்ந்துணர்ந்து" என்கிறவீப்ஸைக்குக்கருத்து - "சைதந்யமாகந்துகம், முக்த்யவஸ்த்தையிலும் பாஷாணகல்பமா யிருக்கும்" என்கிறபக்ஷத்தைத் தவிர்த்து, சைதந்யம் நித்யமா யிருக்குமென்னுமிடத்தைச்சொல்லுகிறது.

ஜ்ஞாத்ருத்வம் நித்யமாகையாலே "ஜ்ஞாநக்ரியாகர்த்ருத்வம் - ஜ்ஞாத்ருத்வம். அதுதானநித்யம்" என்கிற க்ரியாவாதியையும் நிரஸிக்

கிறது (இழிந்தகன்றுயர்ந்து) இச்சேதநன்றா னணுபரிமாணனா யிருக்கச்செய்தேயும், ஈஸ்வரன் ஸ்வரூபத்தாலே யெங்கும் வ்யாபித்திருக்குமா போலே ஜ்ஞாநத்தாலே யெங்கும் வ்யாபித்திருக்குமென்கிறது. "வாதெஜெவெஷநா, ஶிரஶிஜெவெஷநா" (பாதேமேவேதநா, ஶிரஸிமே வேதநா) என்றிருக்கும்படியைச் சொல்லுகிறது. (உருவியந்தவிந்நிலைமை) உருவிற்காட்டில் வியந்து - வேறுபட் டிருக்கிற விந்நிலைமை யுண்டு - இந்த ஆத்மாவினுடைய ஸ்வரூபம். அன்றியே, உருவு, இயந்த, என்று பதபேதமானபோது, இயத்தல் - கடத்தலாய், உருவிற்காட்டில்கடந்திருக்கும் - வேறுபட்டிருக்குமென்னவுமாம். ஆகவிரண்டாலும் ஜடமான ஶரீரத்திற்காட்டில் வேறுபட்டிருக்கிற ஆத்மாவினுடைய ஸ்வரூபத்தை கேவல ஶ்ரவணமநநாதிகளாலேஸாக்ஷாத்கரிக்கக்கூடிலும்; தேஹாதிரிக்தமாயிருக்கிற ஆத்மாவினுடைய ஸ்வரூபத்தை யோகஶாஸ்த்ரத்திற்சொல்லுகிற க்ரமத்தாலே யிழிந்து வருந்தி யொருபடியறிந்தானாலும். (இறைநிலையுணர்வரிது) ஸர்வேஸ்வரன் ப்ரஹ்மருத்ரர்களுக்கந்தராத்மாவாய் அவர்களை ஶரீரமாகக்கொண்டு தான்ஶரீரியாய் நிற்கிறநிலையறியப்போகாது. (உயிர்காள்) சைதந்யயோக்ய மன்றிக்கே யிருப்பதொன்றாய்த் தானிழக்கப் பெற்றதோ, சேதநரானபின்பு அதின்கார்யம் பிறக்கப்பெற்றதில்லையே, அறிவுகேடராய் நீங்கள்பட்டதென்.

எங்களறிவு மறியாமையுங்கிடக்கிடீர், அறிந்த நீரருளிச்செய்யீர் நாங்களப்படி யாஶ்ரயிக்கவென்ன, அருளிச் செய்கிறார் மேல் (அரியயனரனென்னுமிவரையுணர்ந்துணர்ந்துரைத்துரைத்து) (உணர்ந்துணர்ந்து) ஒருவுணர்த்தி - ஸ்வரூபபரம். ஒருவுணர்த்தி - ஸ்வபாவபரம். உரைத்துரைத்து - ஸ்வரூபபரமான ப்ரமாணங்களையும், ஸ்வபாவபரமான ப்ரமாணங்களையும். விரோதிநிரஸநஶீலனாய் ரக்ஷகனாயிருக்குமொருவன், ஒருவன் திருநாபிகமலத்திலே அவ்யவதாநேந பிறந்தவனா யிருக்கும், ஒருவன் ஸம்ஹாரமொன்றுக்கே கடவனாயிருக்கும்; இவர்களை ப்ரதிபாதிக்கிற ப்ரமாணங்களை யாராய்ந்து பார்த்து, அவைதன்னைப் பலகாலுஞ் சொல்லிப்பார்த்து. லிங்கத்துக்கே யுத்கர்ஷந் தோற்றும்படியா யிருப்பதொரு ப்ரபந்தம்பண்ணித் தரவேணுமென்பாரைப்போலே ஒருவ்யக்தியிலே பக்ஷபதிக்கப்பாராதே இவர்கள் ஸ்வரூப ஸ்வபாவங்களைப் பலகாலுமாராய்ந்து பார்த்து, கோல்விழுக்காட்டாலே உத்கர்ஷங்கிடந்த வ்யக்தியைப்பற்றப்பார்ப்பது. இப்படி யாராய்ந்தவாறே ஒருவஸ்துவே ப்ரதாநமென்று உங்கள் நெஞ்சிலேதோற்றும், அவ்வஸ்துவை ஶ்ரவணமநநாதிகளாலே "கைப்புகுந்தது" என்று விஸ்வஸிக்கலாமளவு மாஶ்ரயிக்கப்பாருங்கோள்.... ...........................................................*

## ஜீயர் அரும்பதம்.

ஆறும்பாட்டு. (உணர்ந்தித்யாதி) "அரியயனரனென்னு மிவரை யுணர்ந்துணர்ந்துரைத்துரைத்து" என்கிற பதங்களைக் கடாக்ஷித்து ஶங்கா பூர்வகமாக ஸங்கதி (அவதாரத்திலே யித்யாதி) அவதாரிகையிலே "𑌤𑍍𑌰𑌯𑍋 𑌦𑍇𑌵𑌾𑌸𑍍𑌤𑍁𑌲𑍍𑌯𑌾𑌃" (த்ரயோதேவாஸ்துல்யாஃ) இத்யாத்யநுஸந்தேயம். "𑌮𑌧𑍍𑌯𑍇 𑌵𑌿𑌰𑌿𑌞𑍍𑌚𑌗𑌿𑌰𑌿𑌶𑌂 𑌪𑍍𑌰𑌥𑌮𑌾𑌵𑌤𑌾𑌰𑌸𑍍𑌤𑌤𑍍𑌸𑌾𑌮𑍍𑌯𑌤𑌸𑍍𑌸𑍍𑌥𑌗𑌯𑌿𑌤𑍁𑌂 𑌤𑌵 𑌚𑍇𑌤𑍍 𑌸𑍍𑌵𑌰𑍂𑌪𑌂 । 𑌕𑌿𑌂𑌤𑍇 𑌪𑌰𑌤𑍍𑌵𑌪𑌿𑌶𑍁𑌨𑍈𑌰𑌿𑌹 𑌰𑌙𑍍𑌗𑌧𑌾𑌮𑌨𑍍 𑌸𑌤𑍍𑌤𑍍𑌵𑌪𑍍𑌰𑌵𑌰𑍍𑌤𑌨𑌕𑍃𑌪𑌾𑌪𑌰𑌿𑌪𑌾𑌲𑌨𑌾𑌦𑍍𑌯𑍈𑌃." (மத்யேவிரிஞ்சகிரிஶம்ப்ரதமாவதாரஸ்தத்ஸாம்யதஸ்ஸ்த்தகயிதும்தவசேத்ஸ்வரூபம் । கிந்தேபரத்வபிஶுநைரிஹரங்கதாமந்ஸத்வப்ரவர்த்தநக்ருபாபரிபாலநாத்யைஃ.) "உணர்ந்துணர்ந்து" என்றுதொடங்கி, "உணரிலும்" என்கிற பதத்தளவுங் கடாக்ஷித்து பாஸுமருளிச்செய்கிறார் (காண்கிறதேஹமித்யாதி) "இறைநிலையுணர்வரிது" என்றதனைப்பற்ற (வருந்தியித்யாதி) "அரியயனரனென்னுமிவரை யுணர்ந்துணர்ந் துரைத்துரைத்து" என்றத்தைப்பற்ற (இவ்வழியேயித்யாதி) "மனப்பட்டதொன்றை" இத்யாதியைப்பற்ற (ஆஶ்ரயணீயவஸ்துவித்யாதி) "உணர்ந்துணர்ந் துரைத்துரைத்து" என்றத்தைப்பற்ற (ஆஶ்ரயிக்கும்ப்ரகாரமின்னதென்றது)

"ஜ்ஞப்திமாத்ரமேயுள்ளது" என்கிறவன் - யோகாசாரன். வீப்ஸை - த்விருக்தி. "𑌚𑍈𑌤𑌨𑍍𑌯𑌮𑌾𑌗𑌨𑍍𑌤𑍁𑌕𑌮𑍍" (சைதந்யமாகந்துகம்) என்கிறவர்கள் நையாயிகவைஶேஷிகர்கள். முக்த்யவஸ்த்தையிலு மாத்மாபாஷாணகல்பமாயிருக்குமென்று அவர்கள் சொல்லுகையாலே. ஜ்ஞாநம் - "ஜாநாதி" (ஜாநாதி) என்கிறதாத்வர்த்தமாகையாலே க்ரியையாயிருக்கும். க்ரியைதான் - சலநாத்மகமாயும், தாத்வர்த்தரூபமாயும், த்விவிதமாயிருக்குமிறே. க்ரியைக்குத்பத்தி விநாஶங்களுண்டாகையாலே, க்ரியாஶ்ரயத்வமான ஜ்ஞாத்ருத்வமும் நித்யமென்று சொல்லுகிற க்ரியாவாதியான மாயியை நிரஸிக்கிறதென்றபடி. (ஜ்ஞாத்ருத்வம் நித்யமாகையாலே) ஜ்ஞாத்ருத்வம் நித்யமென்று நமக்கு பக்ஷமாகையாலே. ஜ்ஞாநக்ரியாகர்த்ருத்வமாவது - ஜ்ஞாநரூபக்ரியைக்குக்கர்த்தாவாயிருக்கை.

"இழிந்தகன்றுயர்ந்து" என்றதுக்கிரண்டர்த்த மருளிச்செய்கிறார் (இச்சேதநன்றனித்யாதியாலே) முந்தினவர்த்தத்தில், நிக்ருஷ்ட ஸ்வரூபத்தைப்பற்ற ஸார்வத்ரிகமான வ்யாப்தியைச் சொல்லுகிறது. த்விதீயார்த்தத்தில், ஶரீரவ்யாப்தியைச்சொல்லுகிறது. இந்தவிரண்டாமர்த்தம் (பாதேமேமித்யாதி) உரு - ஶரீரம். வியத்தல், இயத்தல், இரண்டும் - வேறுபாடு. இந்நிலைமை - இவ்வாத்மஸ்வரூபத்தை.

"உணர்ந்துணர்ந்துணரிலும்" என்றதுக்கு த்யாநரஹித கேவலஶ்ரவணாதிகளாலே யுணரிலுமென்னுதல், அஷ்டாங்கயோக க்ரமத்தாலே யுணரிலு மென்னுதலென் றிரண்டர்த்தமாக வருளிச்செய்கிறார் (ஆகவிரண்டாலுமித்யாதியாலும், தேஹாதிரிக்தேத்யாதியாலும்) யத்வா, தேஹேத்யாதிவாக்யம் விவரணமாகவுமாம். "உருவியந்த" என்கிறவிடத்தில் பதபேதமொழிய வர்த்தபேத மில்லையென்கிறார் (ஜடமித்யாதி) "உணர்ந்துணர்ந்து" என்கிறது - ஶ்ரவணமநநங்க

ள். (கேவலஶ்ரவணமநநாதிகளாலே) பகவத்விஷயமான ஶ்ரவணாதிகளன்றிக்கே கேவலாத்மவிஷயமான ஶ்ரவணமநநாதிகளாலே.

வக்ஷ்யமாணத்தைக் கடாக்ஷித்து "இறைநிலையுணர்வரிது" என்கிறதுக்கர்த்தம் (ஸர்வேஶ்வரனித்யாதி) அறிந்தால் தேவதாந்தரங்களிற்பரத்வஶங்கையுதியாதென்றபடி. பரத்வநிர்ணயப்ரகரணத்திலே சைதந்ய விஶிஷ்டதையைச் சொல்லி ஸம்போதிக்கிறவருடைய ஹார்தபாவத்தை யருளிச்செய்கிறார் (சைதந்யயோக்யமன்றிக்கே யித்யாதி வாக்யத்ரயத்தாலே)

அரியயனரனித்யாதியாலே - தத்த்வநிஷ்கர்ஷம்பண்ணும் க்ரமத்தைச்சொல்லுகிறது. "உணர்ந்துணர்ந்துரைத்துரைத்து" என்கிறவீப்ஸைகளுக்கு - விஷயபேதத்தாலே பேதமருளிச்செய்கிறார் (ஒரு உணர்த்தியென்றுதொடங்கி மூன்று வாக்யத்தாலே) "அரியயனரன்" என்றதுக்கர்த்தம் (விரோதியித்யாதி) ரக்ஷகனாயிருக்கு மொருவனென்றது - "𑌨 𑌹𑌿 𑌪𑌾𑌲𑌨𑌸𑌾𑌮𑌰𑍍𑌥𑍍𑌯𑌂 𑌋𑌤𑍇 𑌸𑌰𑍍𑌵𑌶𑍇𑌶𑍍𑌵𑌰𑌂 𑌹𑌰𑌿𑌂" (நஹிபாலநஸாமர்த்யம்ருதே ஸர்வேஶ்வரம்ஹரிம்) இத்யாதியைப்பற்ற (அவ்யவதாநேநேதி) ஆத் - விஷ்ணோ꞉ ஜாத꞉ - அஜ꞉ என்றபடி.

"உணர்ந்துணர்ந்து" என்கிறவீப்ஸையாலே - ஸ்வரூபஸ்வபாவபரமான ப்ரமாணங்களை யாராய்ந்தென்றாய், "உரைத்துரைத்து" என்றதுக்கு - பலகாலும் சொல்லி யென்றர்த்தமாக்கி, இந்தவிரண்டாமர்த்தத்தை யருளிச்செய்கிறார் (இவர்களையித்யாதி) பலகாலுமென்றது - வீப்ஸையைப்பற்ற. ஆராய்கையாவது - பக்ஷபாதமின்றிக்கே மத்யஸ்த்த புத்த்யாவிசாரிக்கையென்கிறார். (லிங்கத்துக்கே யித்யாதி) ஒருப்ரபந்தம்பண்ணித்தரவேணுமென்பாரைப்போலேயென்றது - "𑌤𑌸𑍍𑌮𑌾𑌦𑍍𑌭𑌵𑌨𑍍𑌤𑌂 𑌪𑍃𑌚𑍍𑌛𑌾𑌮𑌸𑍍𑌸𑍂𑌤𑌪𑍌𑌰𑌾𑌣𑌿𑌕𑌾𑌤𑍍𑌯𑌤 । 𑌪𑍁𑌰𑌾𑌣𑌸𑌂𑌹𑌿𑌤𑌾𑌂 𑌪𑍁𑌣𑍍𑌯𑌾𑌂 𑌲𑌿𑌙𑍍𑌗𑌮𑌾𑌹𑌾𑌤𑍍𑌮𑍍𑌯𑌸𑌂𑌯𑍁𑌤𑌾𑌂" (தஸ்மாத்பவந்தம் ப்ருச்சாமஸ்ஸூதபௌராணிகாத்யது। புராணஸம்ஹிதாம்புண்யாம் லிங்கமாஹாத்ம்யஸம்யுதாம்) என்றத்தைப்பற்ற. ப்ரமாணங்களை யாராய்கைக்கு ப்ரயோஜநமருளிச்செய்கிறார். (இவர்கள் ஸ்வரூபேத்யாதி) (கோல்விழுக்காட்டாலே) ஸ்வத꞉ ப்ராப்தியாலே.

"மனப்பட்டதொன்றே" என்றதுக்கர்த்தம் (இப்படியாராய்ந்தவித்யாதி) "உணர்ந்துணர்ந்துரைத்துரைத்திறைஞ்சுமின்" என்றது - ஶ்ரவணமநநாதிகளாலேயநுஸந்தித்து, வஸ்துவுக்கு வாசகமான திருநாமங்களைப் பலகாலுமுச்சரித்து, ஆஶ்ரயியுங்கோளென்றபடி. உரைத்துரைத்தென்றது - அஸக்ருச்ச்ரவணத்தை. உணர்ந்துணர்ந்தென்கிறது - அஸக்ருந்மநநத்தை. கைப்புகுருகை - பலோந்முகமாகை. இது - வீப்ஸாதாத்பர்யம்.

உணர்ந்துணர்ந்தென்றுதொடங்கி, உயிர்காள் அரியயனரனென்னுமிவரையுணர்ந்துணர்ந்துரைத்துரைத்து, மனப்பட்டதொன்றை உணர்ந்துணர்ந் துரைத்துரைத்திறைஞ்சுமின், இத்யந்வய꞉. முதலில், உணர்ந்துணர்ந்தென்றதுக்கு - ஜ்ஞாத்ருத்வஸ்வபாவனாகையாலே யென்றுமொக்க வுணருகையே ஸ்வபாவமாகவுடையனு யித்யர்த்த꞉..........................................................................*

# ஏழாம்பாட்டு.

ஒன்றெனப்பலவெனவறிவரும்வடிவினுணின்ற
நன்றெழினாரணனான்முகனரனென்னுமிவரை
யொன்றநும்மனத்துவைத்துள்ளிநும்மிருபசையறுத்து
நன்றெனநலஞ்செய்வதவனிடைநம்முடைநாளே.

## ஆறாயிரப்படி.

(ஒன்றென) ஏகாதிஷ்ட்டிதமோ, அநேகாதிஷ்ட்டிதமோ, என்றறியவரிதானவடிவிலேநின்ற நன்றெழினாரண னான்முகனரனென்னுமிவருடைய ஸ்ரவணமநநங்களை யவஹிதமநஸ்கராய்ப்பண்ணுவது. அவர்களிலே யொருவனே யீஸ்வரனென்று தோற்றிவரும். தோற்றிவருமிடத்திலும் ப்ரஹ்மருத்ரர்களுக்கு ஸர்வாத்மநா அஸம்பாவிதமான கல்யாணகுணங்களையுடையவனான நாராயணனென்றே தோற்றிவரும். ஆனபின்பு தத்வ்யதிரிக்த ப்ரஹ்மருத்ரர்கள்பக்க லீஸ்வரத்வ ஶங்கையைவிட்டந்த நாராயணன்பக்கலிலே நம்முடைய ஶரீராத்யுபகரணங்களுள்ளபோதே அநந்யப்ரயோஜநராய்க்கொண் டடிமைசெய்வதென்கிறார்...............*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், விவேகப்ரகாரத்தை விஶதமாக வுபதேஶித்துச்சடக்கெனவாஶ்ரயியுங்கோளென்கிறார்.

ஒன்றெனப்பலவென - ஏகாத்மப்ரகாரமென்று மநேகாத்மாதிஷ்ட்டிதமென்றும், ஒருவன் ப்ரதாநனென்றுந் தனித்தனியே ப்ரதாநரென்றும். அறிவரும்-அறிவரிதான. வடிவினுள் - வடிவுக்குள்ளே. நின்ற - வர்த்திக்கிற. நன்று - விலக்ஷணமான. எழில் - அபஹதபாப்மத்வாதிகுணௌஜ்ஜ்வல்யத்தையுடையனாய். நாரணன் - நாராயணாநுவாகாதிஸித்தனாய் ஸமஸ்த சிதசிதந்தராத்மாவானநாராயணன். நான்முகன் - சதுர்வேதபாராயணத்துக்கும் பஹுமுக ஸ்ருஷ்டிக்குமுபயுக்தமான முகபேதத்தையுடைய சதுர்முகன். அரன் - ஸம்ஹாரைகஸ்வபாவனானஹரன். என்னுமிவரை - என்று தத்தத்ஸ்வபாவவைஶத்யம்பிறக்கும்படி ப்ரமாணங்களாலே சொல்லப்பட்டவர்களை. ஒன்ற - ஒருவர்பக்கல் ப்ராதாந்யபக்ஷபாதமற-ஏகாகாரதயா. நும்மனத்துவைத்து - உங்கள்நெஞ்சிலேவைத்து. உள்ளி - அவர்கள் ஸ்வரூபஸ்வபாவங்களை ஸப்ரமாணமாகவாராய்ந்து. நும்மிருபசையறுத்து - உங்கள் ப்ரதிபத்திதோஷத்தாலே யிருவர்பக்கலிலுமுண்டான வீஸ்வரஸங்கத்தையறுத்து. அவனிடை - அந்தநன்றெழினாரணன்பக்கலிலே. நம்முடை - நம்முடைய. நாள் - ஆயஸ்ஸுள்ளகாலத்திலே. "ஏகபக்தி:" (ஏகபக்தி:) என்கிறபடியே. நன்றென - நன்றாக. நலம் - ஸ்நேஹத்தை. செய்வது - பண்ணுவது.............*

## ஈடு - ஏழாம்பாட்டு.

"அப்படியே செய்கிறோம்" என்றுறியிருந்தார்கள்; அய்யோ! நீங்கள், உங்களுடைய ஆயுஸ்ஸினுடைய ஸ்த்திதியும், இழக்கிறவிஷயத்

தின் நன்மையு மறியாமையிறே ஆறியிருக்கிறது; நீங்கள் முடிந்துபோவதற்குமுன்னே நிர்ணயோபாயங்களாலே வஸ்து வின்னதென்று நிர்ணயித்து, நிர்ணீதனானவன்பக்கலிலே கடுக பக்தியைப் பண்ணப் பாருங்கோளென்று கீழ்ப்பாட்டுக்கு விசேஷமாயிருக்கிற திப்பாட்டும். நீங்கள் மந்தாயுஸ்ஸுக்களாகையாலே கடுகச்செய்துகொடுநின்று, "செய்கிறோம்" என்னவேணும், "செய்கிறோம்" என்று செய்யவொண்ணாதென்கிறவிதுவே விசேஷம் கீழ்ப்பாட்டிற்காட்டில்.

(ஒன்றென) மூவர் ப்ரதாநராய் மூவர்க்கும் மூன்று சரீரமுண்டாய்த்தோற்றுகையாலே, மூன்றுசரீரத்திலு மொருவனே யதிஷ்ட்டித்துக்கொண்டு நிற்கிறானோ!, அன்றியே மூன்றிலும் மூன்றுசேதந ரதிஷ்ட்டித்துக்கொண்டு நிற்கிறார்களோ! என்று அறியவரியவடிவுகளையுடையராய்நிற்கிற. ஏகாத்மாதிஷ்ட்டிதமோ! அநேகாத்மாதிஷ்ட்டிதமோ! என்று அறியவரிதான வடிவையுடையராய்நின்ற. (நன்றெழில்நாரணன்) அநந்யபரமான நாராயணாநுவாகாதிகளை நினைக்கிறார். எழிலென்று - "அபஹதபாப்மாதிவ்யோதேவஏகோநாராயண:" (அபஹதபாப்மாதிவ்யோதேவஏகோநாராயண:) என்கிறபுகரைநினைக்கிறது. (நன்றெழில்) ரூபஸ்ரீயைப்பார்த்தவாறே "கண்டவாற்றால்தனதேயுலகெனநின்றான்" என்கிறபடியே ஸர்வரக்ஷகனிவனேயென்னலாம்.

(நாரணன்) திருநாமத்தைப்பார்த்தவாறே தன்னை யொழிந்த தடைய ப்ரகாரமாய்க்கொண்டு தான்ப்ரகாரியாயிருப்பா னொருவனென்று தோற்றியிருக்கும். (நான்முகன்) ஒருவன், ஸ்ருஷ்டிகாலத்திலேவந்தால் நாலுவேதங்களையு முச்சரிக்கைக்கு நாலுமுகத்தை யுடையனாய் ஸ்ருஷ்டிகார்யமொன்றிலு மந்விதனென்று தோற்றியிருக்கும். (அரன்) ஒருவன் ஸம்ஹார்த்ருத்வமொன்றிலு மந்விதனென்று தோற்றியிருக்கும். "ஸ்ருஷ்டிஸ்த்தித்யந்தகரணீம் ப்ரஹ்மவிஷ்ணுசிவாத்மிகாம் । ஸஸம்ஜ்ஞாம்யாதிபகவாநேகஏவஜநார்த்தந:" (ஸ்ருஷ்டிஸ்த்தித்யந்தகரணீம்ப்ரஹ்மவிஷ்ணுசிவாத்மிகாம் । ஸஸம்ஜ்ஞாம்யாதிபகவாநேகஏவஜநார்த்தந:) என்கிறபடியே. ஸம்ஜ்ஞைகளில் வந்தாலொக்க வெடுக்கலாய் விஷ்ணுசப்தத்தோடு பர்யாயமான ஜநார்த்தநசப்தத்தையிட்டுத் தலைக்கட்டுகையாலே தானே ப்ரதாநனென்று தோற்றும்படியாயிருக்கும்.

இப்படி விஸத்ருச ஸ்வபாவராயிருக்கிறவிவர்களை (ஒன்றநும்மனத்துவைத்து) அவனையொழிந்த விருவரிலே யொருவனுக்கு உத்கர்ஷம்வேணுமென்றுதல், நிர்ணயிப்பதற்கு முன்னே யிவனுக் குத்கர்ஷம் வேணுமென்றுதல் பாராதே ஒருபடிப்பட்ட வுங்கள் நெஞ்சிலே வைப்பது. (உள்ளி) உள்ளுவது - ஸ்ருதிந்யாயங்களாலே யாராய்வது. அவ

ர்கள் ஸ்வரூபஸ்வபாவங்களை இப்படியாராய்ந்தவாறே ஒருவஸ்து ப்ரதாநமாயிரண்டப்ரதாநமாய்த்தோற்றும், தோற்றினவாறே ( நும்மிருபசையறுத்து ) அவ்விரண்டிலும் நீங்கள் பண்ணுகிற நசையைத் தவிருவது. வஸ்துகதமாய் வருவதொரு வுத்கர்ஷமில்லை, நீங்களேறிடுகிற விவற்றைத்தவிருவது. ( நன்றெனநலஞ்செய்வதவனிடை ) இப்படி நிர்ணீதனானவன்பக்கலிலே "இவன்நமக்குக் கைப்புகுந்தான்" என்று உங்களுக்கேறத்தேற்றம்பிறக்கும்படி அநந்யப்ரயோஜநமான பக்தியைப் பண்ணப்பாருங்கோள். க்ரமத்திலே செய்கிறோமென்றிருந்தார்கள் (நம்முடைநாளே) கெடுவீர்காள்!, நம்முடையாயுஸ்ஸின் நிலையறிவீர்கோளே! கடுக வாஶ்ரயிக்கப்பாருங்கோள். " நம்முடைநாள் " என்னுங் காட்டில் - ஆயுஸ்ஸின்நிலையை யறிந்தபடி யென்னென்னில், முன்பே " மின்னினிலையில " என்றருளிச்செய்தாரிறே. ஒருவனிரண்டுகதவையு மடைத்துக்கொண்டு கிடந்துறங்காநின்றால், நெருப்புப்பற்றி யெரியாநின்றால், " அவிக்கிறோம் " என்றுறியிருக்கலாமோ ; [ நநு ஜ்யந்தஸூர்யே நநு ஜ்யஸூர்யே ரவள I ஆத்மநோ நாவபுத்யந்தே மநுஷ்யாஜீவிதக்ஷயம் ] ( நந்தந்த்யுதித ஆதித்யே நந்தந்த்யஸ்தமிதே ரவெள I ஆத்மநோ நாவபுத்யந்தே மநுஷ்யாஜீவிதக்ஷயம் ) ஆதித்யோதயத்திலேவந்தவாறே " த்ரவ்யார்ஜநகாலம்வந்தது " என்று உகப்பர்கள், அவனஸ்தமித்தவாறே " அபிமதவிஷயங்களோடே ரமிக்கைக்குக் காலம்வந்தது " என்றுகப்பர்கள், சாலியெடுத்தநீர்போலே தங்களாயுஸ்ஸு குறைகிறதென்றறியாதிரா நின்றார்களென்னுமின்றதிறே......................................................*

---

## ஜீயர் அரும்பதம்.

ஏழாம்பாட்டு. ( ஒன்றெனவித்யாதி ) " நம்முடைநாளே " என்றத்தைப் ரதாநமாக்கிக்கொண்டு, " நலஞ்செய்வதவனிடை " என்னுமளவுஞ் சடாக்ஷித்து ஸங்கதி ( அப்படியே மித்யாதிவாக்யத்ரயத்தாலே ) நன்மையுமென்றது - " நன்றெழிஞரணன் " என்றத்தைப்பற்ற. " நலஞ்செய்வது " என்றத்தைப்பற்ற (பக்தியைப்பண்ணப்பாருங்கோளென்றது ) கீழிற்பாட்டிலிறுக்குவிஶேஷமில்லையோ வென்ன ( நீங்களித்யாதி ).

ஒன்றெனப் பலவென வறிவரும் நன்றெழிஞரண னென்ன வமையாதோ, " வடிவினுணின்ற " என்னவேணுமோவென்ன, இது கோட்யுத்தாபநார்த்தமென்கிறார் ( மூவர்ப்ரதாநராயித்யாதி ) ஶரீரம் மூன்றுகையாலே மூவரென்னலாயிருக்கும்; அந்த வந்ரஶரீரத்தை யதிஷ்ட்டித்து, ப்ரபலமாய் துல்யமாயிருந்துள்ள மூன்றுகார்யங்களைச் செய்கையாலே ஏகைககார்யஶக்தியைப் பார்த்தால் இவனே ஸர்வஶக்தன், இவனே ஸர்வஶக்தன் " என்று தோற்றுகையாலே யொருவனே யென்னலாயிருக்குமென்றுதாத்பர்யம். யோஜநாந்தரம் ( ஏகாத்மாதிஷ்ட்டிதமோ

வித்யாதி ) ஒன்று-ஒன்ருலேயதிஷ்ட்டிதம், பல-பலராலேயதிஷ்ட்டிதம். " அறிவரும்வடிவினுள் " என்றதுக்கு முந்தின யோஜனையில் - அறியவருமைக்கு ஹேதுவானவடிவிலென்றர்த்தம் ; த்விதிய யோஜனையில், அறிவருமைக்கு விஷயமானவென்றர்த்தம். வடிவு - ஸ்வபாவமாதல், ஶரீரமாதல்.

நன்மைக்கர்த்தம் ( அநந்யபரமானவித்யாதி ) எழிலென்றதுக்கர்த்தம் ( அபஹதபாப்மேத்யாதி )

விக்ரஹத்தில் நன்ருனவெழிலென் றர்த்தாந்தரம் ( ரூபஶ்ரீயையித்யாதி ) இதுக்கு நன்மையேதென்ன ( கண்டவாற்ருலித்யாதி ) ப்ரத்யக்ஷஸித்தமான சேஷ்டிதப்ரகாரங்களாலே ப்ரமாண நிரபேக்ஷமாக லோகம் தனக்கே ஶேஷமென்று நாடாகச்சொல்லும்படி நின்றவென்றபடி. ஸுபாலோபநிஷதி " 𑌏𑌷 𑌸𑌰𑍍𑌵𑌭𑍂𑌤𑌾𑌨𑍍𑌤𑌰𑌾𑌤𑍍𑌮𑌾𑌽𑌪𑌹𑌤𑌪𑌾𑌪𑍍𑌮𑌾 𑌦𑌿𑌵𑍍𑌯𑍋 𑌦𑍇𑌵 𑌏𑌕𑍋 𑌨𑌾𑌰𑌾𑌯𑌣𑌃 " ( ஏஷஸர்வபூதாந்தராத்மாபஹதபாப்மா திவ்யோதேவஏகோநாராயணः ) அஸ்யார்த்தः, அத்ரபூதஶப்தஸ்ய - ஸத்தாவத்வஸ்துவாசித்வாத் உபயவிபூத்யந்தர்க்கத சிதசித்வஸ்துஜாதம் பூதஶப்தேநோக்த்வா, தஸ்யாந்தராத்மதயாஸ்த்தித இத்யர்த்தः அபஹதபாப்மா - ஸர்வாந்தராத்மத்வேபி வ்யாப்யகத தோஷாஸம்ஸ்ப்ருஷ்டः. திவ்யः - திவிஸ்த்திதः. பரமபதநிலய இதியாவத். தேவः-த்யோதமாநத்வாதிகுணோபேதः. ஏகः - அத்விதீயः. ஸமாப்யதிகரஹிதः. ஏவம்பூதனுென்ன ( நாராயணஇதி ) " ரூபஶ்ரீயைப் பார்த்தவாறே " என்றவிடத்திலே " [illegible] " ( ரூபஶ்ரியாபரமயாபரமேணதாம்நா சித்ராம்ஶகைஶ்சித்ரிதஶிரைர்ப்பவதஶ்சரித்ராः । சித்ரைரநிந்த்ரவபுஷாரபுஷாம்ஶகைஶ்சித் திஶ்சிந்வதே த்வயி விபஶ்சித ஈஶித்ருத்வம் ) என்கிற ஶ்லோகமநுஸந்தேயம். அநிந்த்ரவபுஷः-ஸ்வாபாவிகைः. அபுஷாம்ஶகைஶ்சித் - அதிமாநுஷஶீலதயாகூஷாந்த்யாதிபிரித்யர்த்தः. " 𑌰𑍂𑌪𑌮𑍇𑌵𑌾𑌸𑍍𑌯𑍈𑌤𑌨𑍍𑌮𑌹𑌿𑌮𑌾𑌨𑌂𑌵𑍍𑌯𑌾𑌚𑌷𑍍𑌟𑍇 " ( ரூபமேவாஸ்யைதந்மஹிமாநம்வ்யாசஷ்டே ) என்றுரூபத்தைமஹிமஜ்ஞாபகமாகச்சொல்லிற்றிறே.

பஹுவ்ரீஹியிலர்த்தம் ( திருநாமத்தையித்யாதி ) ப்ரஹ்மாவுக்கபரத்வத்தை ஸூசிப்பிக்கிறது - " நான்முகன் " என்கிற நாமமென்கிருர் ( ஒருவனித்யாதி ) நாலுவேதங்களையுமென்றதுக்கு - ப்ரமாணுதீந ஜ்ஞாநத்வத்திலேதாத்பர்யம். " அரன் " என்றதும் - ருத்ரனுக்கபரத்வ ஸூசகமான நாமமென்கிருர் ( ஒருவனித்யாதி ) " நாரணன் " என்றதுக்கர்த்தம் - ஸமஸ்தமும் ப்ரகாரமாய்த் தான் ப்ரகாரியாயிருக்குமென்று சொன்னபோதே யவனுக்கு ப்ராதாந்யந் தோற்றுமிறே,

அவன் ப்ரதாநனென்னுமதுக்கு ப்ரமாணம் ( ஸ்ருஷ்டிஸ்த்தித்யந்தேத்யாதி ) இதம்ப்ரதமேம்ஶ த்விதியே " ஜநார்த்தநः என்கிறபடியே " என்றவநந்தரம், இந்தநிர்த்தேஶமும் என்று வாக்யஶேஷம். அதெங்ஙனேயென்ன ( ஸம்ஜ்ஞைகளிலித்யாதி ) " ஒக்கவெடுக்கலாய் " என்றவநந்தரம், இருக்கிறவென்று வாக்யஶேஷம். " ப்ரதாநனென்றுதோற்றும்படியாயிருக்கும் " என்றவநந்தரம், அப்படியே

யிங்கு " நன்றெழில் " என்கிற விஶேஷணத்தா லிவனே ப்ரதாநனென்று தோற்றுகிறது என்று வாக்யஶேஷம்.

விஸத்ருஶஸ்வபாவர்-விருத்தஸ்வபாவர். ஸ்ருஷ்டிஸ்த்திதி ஸம்ஹாரகர்த்ருத்வங்களாலே வைஸாத்ருஶ்யம். ஒன்ற - ஒருபடிப்பட்ட. ஶ்ருதிந்யாயங்களாலே ஶ்ருதியாலும் ந்யாயங்களாலும். ந்யாயங்கள் - யுக்திகள். உள்ளி - விசாரித்து.

பசை - நசை. " நும் " என்றதுக்கு பாவம் ( வஸ்துகதமாயித்யாதி ) —

ஏற - மநஸ்ஸிலேயேறும்படி. தேற்றம் - தெளிவு. ( அநந்யப்ரயோஜநமானபக்தி ) ஸாத்யபக்தி.

" நம்முடைநாள் " என்றதுக்கு-அஸ்த்திரத்வத்தைப்பற்ற வருளிச்செய்கிறார் ( கெடுவிர்கா ளித்யாதி ) கெடுவிர்காள் - துஷ்டாத்மாக்களே. இவ்விடத்தில் " 𑌸𑌮𑍍𑌪𑌦𑌃 𑌸𑍍𑌵𑌪𑍍𑌨𑌸𑌙𑍍𑌕𑌾𑌶𑌾 𑌯𑍌𑌵𑌨𑌂 𑌕𑍁𑌸𑍁𑌮𑍋𑌪𑌮𑌮𑍍 । 𑌤𑌡𑌿𑌚𑍍𑌚𑌞𑍍𑌚𑌲𑌮𑌾𑌯𑍁𑌷𑍍𑌯𑌂 𑌕𑌸𑍍𑌯 𑌸𑍍𑌯𑌾𑌜𑍍𑌜𑍍𑌞𑌾𑌨𑌤𑍋 𑌧𑍃𑌤𑌿𑌃 " ( ஸம்பதஸ்ஸ்வப்நஸங்காஶா:யௌவநம்குஸுமோபமம் । தடிச்சஞ்சலமாயுஶ்சகஸ்யஸ்யாஜ்ஜாநதோத்ருதி: ) என்றதநுஸந்தேயம். " நம்முடைநாள் " என்றதுக்கு அநர்த்தாவஹத்வத்தாலு மாறியிருக்கப்போகாதென்று பாவாந்தரம் (ஒருவனித்யாதி) ஆயுஸ்ஸு தான் ஸ்த்திரமானாலும் ஸம்ஸாராபிவ்ருத்தியாகிறவநர்த்தவிஶேஷம் வருகிறபடியை யநுஸந்தித்தாலாறியிருக்கவொண்ணாது, அவனைக் கடுக வாஶ்ரயிக்கவேணுமென்றபடி.

ஆயுஸ்ஸினஸ்த்தைர்யத்துக்குப் ப்ரமாணம் ( நந்தந்தீத்யாதி ) இதமயோத்யாகாண்டே சித்ரகூடே பரதம் ப்ரதிராமவசநம். மநுஷ்யா: ஆத்மந: ஜீவிதக்ஷயம் நாவபுத்யந்தே இத்யந்வய:. " சாலிலெடுத்த நீர்போலே " என்றவிடத்தில், " 𑌆𑌯𑍁𑌃 𑌪𑌰𑌿𑌸𑍍𑌰𑌵𑌤𑌿 𑌭𑌿𑌨𑍍𑌨𑌘𑌟𑌾𑌦𑌿𑌵𑌾𑌮𑍍𑌬𑍁𑌃 " ( ஆயு:பரிஸ்ரவதி பிந்நகடாதிவாம்ப: ) என்றதநுஸந்தேயம். சாலிலெடுத்த நீரென்றது - ஆயுஸ்ஸினுடைய வல்பதையும், க்ஷயத்தினுடைய ப்ரத்யக்ஷதையுந் தோற்றுகைக்காக. குளத்தில் நீர்வற்றுகிறமைதெரியாதிறே.

ஒன்றெனவென்றுதொடங்கி, நும்மிருபசையறுத்து அவனிடை நன்றெனநலம்செய்வது நம்முடைநாளே இத்யந்வய:. (ஒன்றெனப்பலவெனவறிவரும்வடிவினுள்நின்ற) ஏகாத்மாதிஷ்ட்டிதமென்று மநேகாத்மாதிஷ்ட்டிதமென்றும்-ஒருவன் ப்ரதாநனென்றும், தனித்தனியே ப்ரதாநரென்று மறியவரிதான வடிவுக்குள்ளே வர்த்திக்கிறவென்று ஶப்தார்த்தம். ( நன்றெழிநாரணன் ) விலக்ஷணமான அபஹதபாப்மத்வாதி குணௌஜ்ஜ்வல்யத்தையுடைய நாரணன்.......................*

## எட்டாம்பாட்டு.

நாளுநின்றடுநமபழமையங்கொடுவினையுடனே
மாளுமோர்குறைவில்லைமனனகமலமறக்கழுவி
நாளுநந்திருவுடையடிகடந்நலங்கழல்வணங்கி (ன்)
மாளுமோரிடத்திலும்வணக்கொடுமாள்வதுவலமே.

## ஆருயிரப்படி.

( நாளுநின்றடும் ) இப்படி யநந்யப்ரயோஜநராய்க்கொண்டு நந்திருவுடையடிகடந்நலங்கழலவணங்கவே, இடைவிடாதே நின்று நமக்கு பாதகமா யநாதிகால ஸஞ்சிதமாய் பகவதநுபவவிரோதியான நம்முடையு கொடுவினையெல்லாம் வணங்கின வப்போதேமாளும். இனியொருநாளு மொருகுறையில்லை, நாமபேக்ஷித்தபடி யெம்பெருமானை யநுபவிக்கப்பெறலாம். இப்படி சிரகாலங்கூட பலவத்ஸாத்யமான பக்தியோகத்தை ஸாதிக்கைக்குக்காலமும் பலமுமின்றியே அந்திமதஶாபந்நராளிழந்து போமித்தனையோவென்னில்; அந்த அந்திமதஶையிலேயாகிலும், ஓரஞ்சலிமாத்ரமாதல், ஒருக்திமாத்ரமாதல், ஒருஸ்ம்ருதிமாத்ரமாதலவன்றிறத்திலேசெய்ய, அந்தபக்தியோகத்திலும் நன்றென்கிறுர். ...............*

## பன்னீராயிரப்படி.

ப்ரதிபந்தகங்களானவையெல்லாம் குலையுமென்கிறுர்.

மனனகம் - மனனகத்தை. மலம் - த்ரிமூர்த்திஸாம்யாஶங்கையாலுண்டான ஸம்ஶயமாகிறமலம். அற - அறும்படி. கழுவி - விவேகத்தாலேபரிஶுத்தமாக்கி. நாளும் - நமக்கபிமதமானநாடோறும். நம் - நமக்கேகூறுபட்ட. திருவுடை-ஸ்ரீமானான. அடிகள்தம் - ஸ்வாமியினுடைய. நலம் - ஸர்வஸமாஶ்ரயணீயமாய்போக்யமுமான. கழல் - திருவடிகளை. வணங்கின் - ஆஶ்ரயிக்கில். நாளும் - நாள்தோறும். நின்று - விடாதேநின்று. அடும் - பரிதபிப்பதாய். நம - நம்புத்திபூர்வகமாக நமக்குத்தேடின. பழமை - அநாதிஸித்தமாய். அங்கொடுவினை - மிகவும் க்ரூரமான அக்ருத்யகரணாதிபாபங்சள். உடனே - ஆஶ்ரயணஸமகாலத்திலே. மாளும்-நஶிக்கும். ஓர்குறைவில்லை - ஸ்வாபிமதத்தில் குறைகிடப்பதொன்றுமில்லை.

இப்படியாஶ்ரயிக்குமிடத்தில் மாளுமோரிடத்திலும் - ஶரீரவிஶ்லேஷதஶையிலும். வணக்கொடு - ஆஶ்ரயணத்தோடே. மாள்வது - முடியிலுமதுவே. வலம் - ப்ரபலம். “ 𑌸𑍍𑌥𑌿𑌤𑍍𑌵𑌾𑌸𑍍𑌯𑌾𑌮𑌨𑍍𑌤𑌕𑌾𑌲𑍇𑌽𑌪𑌿 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌨𑌿𑌰𑍍𑌵𑌾𑌣𑌮𑍃𑌚𑍍𑌛𑌤𑌿 ” (ஸ்த்தித்வாஸ்யாமந்தகாலேபி ப்ரஹ்மநிர்வாணம்ருச்சதி ) என்னுமாபோலே. “ வணங்கி ” என்றும்பாடமாம்-வணங்கவென்று திருத்திச்சொல்லுவாருமுளர்...........*

---

## ஈடு_எட்டாம்பாட்டு.

ஒருநாளாகிலும் மூற்பட்டதுடலாக வாஶ்ரயிக்கச்சொல்லாநின்றீர், அநாதிகாலம் நாங்கள் பண்ணிவைத்தபாபங்கள் விலக்காவோ ! இனி காலந்தானுண்டோவென்ன ; நீங்களாஶ்ரயணத்திலே யொருப்படவே விரோதிகளடங்கலும் நஶிக்கும், ஶ்ரியஃபதி ஸமாஶ்ரயணமாகையாலே காலங்கழிந்ததென்றிருக்கவும்வேண்டா, நீங்கள் தண்டுகாலாயூன்றியூன்றித்தள்ளிநடக்கும்போது அக்கோலோடேசாயவுமமையுமென்கிறுர்

(நாளுநின்றடும்) நாள்தோறுமிடைவிடாதேநின்று ஹிம்ஸிக்கக்கடவதான. பரமாணுகதமான பாரிமாண்டால்யாதிகள் நித்யமாயிருக்கச்செய்தே நித்யபரதந்த்ரமா யிருக்குமாபோலவும், பகவத்ஸ்வரூபத்தோபாதிகுணங்கள் நித்யமாயிருக்கச்செய்தே நித்யபரதந்த்ரமாயிருக்குமாபோலவும், நித்யவஸ்துவாய் நித்யபரதந்த்ரமாய்ப் போராநிற்கச்செய்தே அசித்ஸம்ஸர்க்கமும் நித்யமாய்ப்போருகிறதிறே. (நம) "ஜ்விஷந்தஃவாவகூதுரா" (த்விஷந்தஃபாபக்ருத்யாம்) என்கிறபடியே பிறராயசல் பிளந்தேறிடவந்ததல்ல, நெஞ்சுணரநாமே பண்ணிவைத்தவை. [சுஹுதவஞுூஉஹாவிகிவா] [அபூதபூர்வம்மமபாவிகிம்வா] எனக்கு, முன்பு அநுபவியாததாய், மேலநுபாவ்யமாயிருப்பதொன்றுண்டோ. [ஸவூஸஹெ] [ஸர்வம்ஸஹே] எல்லாம்பொறுக்கவல்லேன். [ஜெஸஜஹிதுஃவம்] [மேஸஹஜம்ஹிதுஃகம்] தன்காய்பொறுத கொம்புண்டோ! என்று சொல்லலாம்படியிறே நாமேபண்ணிவைக்குமவையிருப்பது. (பழமை) அதுதானின்று நேற்றன்றியே பழையதாயிருக்கை. (அம்) அம் என்று - க்ரௌர்யத்தைப்பற்றச் சொல்லுகிறது. (கொடுவினை) அநுபவவிநாஸ்யமாயிருக்கை. (உடனேமாளும்) ஆஸ்ரயணகாலத்திலே நஸிக்கும்.

"யமெஷீகதூலமஃௌ ஷொதஂஷுதூயெமெதவஂஹாஸ ஸவொவாவொநஃஷுதூயநெ" (யதேஷீகதூலமக்நௌ ப்ரோதம் ப்ரதூயேதைவம்ஹாஸ்யஸர்வேபாப்மாநஃ ப்ரதூயந்தே) "ஜெருஜநர ஊதொவி" (மேருமந்தரமாத்ரோபி) என்றுஞ்சொல்லுகிறபடியே. விரோதிபோமளவேயோ! (ஓர்குறைவில்லை) மேலுமொருவிரோதங்கள் வாராதென்னுதல்; ஸர்வாபிமதங்களும் பூர்ணமாமென்னுதல். [கௌநெயவுதிஜாநீஹிநஜெஹக்தஃவுணஸுதி] [கௌந்தேயப்ரதிஜாநீஹி நமேபக்தஃப்ரணஸ்யதி] அர்ஜுந, இவ்வர்த்தத்தில் நம்மை விஸ்வஸித்து ப்ரதிஜ்ஞைபண்ணு; நம்மைப்பற்றினவர்களுக் கநர்த்தம் வாராதுகாண். பகவத்ஸமாஸ்ரயணம்பண்ணுகைக்கும் வினைகிடக்கைக்கும் அக்நிநாஸிஞ்சேத்போலே என்ன சேர்த்தியுண்டு, அஸங்கதம். [உுராவாரொவி] [துராசாரோபி] செய்யக்கடவதல்லாதவற்றைச் செய்துபோருவது. [ஸவாஶீ] [ஸர்வாஶீ] அபோஜ்யபோஜநங்களைப்பண்ணுவது. [கூதநூஃ] [க்ருதக்நஃ] உபகரித்தவிஷயத்திலே அபகாரத்தைப்பண்ணுவது. [நாஸ்திகஃ] [நாஸ்திகஃ] வைதிகமர்யாதையை யில்லையென்றுபோருவது.

[வுரா] [புரா] இதுதான் பழையதாய்ப்போருவது. [ஸமாஸ்ரயேதித்யாதி] "இவனநுகூலிப்பதெப்போதோ" என்று ஏற்கவே ய

வசரம்பார்த்திருக்கிறவனைப்பற்றி யநுகூலிக்குமாகில் பின்னையவனை நிர்த்தோஷனாக ப்ரதிபத்தி பண்ணுவது. என்றனென்னில் [ ப்ரபாவாத்பரமாத்மந: ] இவனைக்குறைய நினைக்கையாவது - பகவத்ப்ரபாவத்தைக்குறையநினைக்கையிறே. "𑌨 𑌵𑌾𑌸𑍁𑌦𑍇𑌵𑌭𑌕𑍍𑌤𑌾𑌨𑌾𑌮𑌶𑍁𑌭𑌂 𑌵𑌿𑌦𑍍𑌯𑌤𑍇 𑌕𑍍𑌵𑌚𑌿𑌤𑍍" (நவாஸுதேவபக்தாநாமஶுபம்வித்யதேக்வசித்) என்னுமாபோலே.

இனிச்செய்யவேண்டுவதொன்றுண்டு ( மனனகமலமறக்கழுவி ) ஸர்வேஶ்வரன் ப்ரஹ்மருத்ரர்கள் நடுவேகலசிநின்றால், "இவனோ ! கடவான், மற்றையவர்களோ !" என்று ஸம்ஶயிக்குமதுதவிர்ந்து, "ஸர்வேஶ்வரனேகடவான்" என்கிற அந்தஃகரணஶுத்தியுண்டாகவேணும். * திருவடிதன்னாமம்மறந்தும் புறந்தொழாதொழியுமித்தனையேவேண்டுவது. ( நாளும் ) அபர்வணிகடல் தீண்டலாகா தென்னுமாபோலே யொருநியதியில்லை. ( நந்திருவுடையடிகள்தம் ) ஸ்ரீமானானஸ்வாமியானவனுடைய. இத்தால் - நித்யயோகத்தைச்சொல்லுகிறது. "ஸர்வேஶ்வரனையாஶ்ரயித்தானாகில் அவன் பலப்ரதனாகிறான், பிராட்டியைப் புருஷகாரமாகப்பற்றவேண்டுகிறதென்" என்று நஞ்சீயர் பட்டரைக்கேட்க, " 'நாளுநந்திருவுடையடிகள தந்நலங்கழல்வணங்கி' என்று - அவள் முன்னாகவாஶ்ரயிக்கவேணுமென்றா நின்றதுகண்டீரோ" என்றருளிச்செய்து, "அவனையாஶ்ரயிக்குமிடத்தில் இவன்குற்றம்பாராதே தன்னிழலிலே இவனைவைத்து, அவன்பக்கல்முகம்பெற்றவாறே குற்றத்தைப்பொறுப்பிக்குமவள் முன்னாகப்பற்றவேணும்.

( நலங்கழல் ) அவள் முன்னாகப்பற்றினாருடைய குற்றங்களைப்பாராதே கைக்கொள்ளுந்திருவடிகள். வணங்கி என்றது - வணங்கஎன்றபடி. "வணங்கி" என்கிறவிது - வினையெச்சமாய், வணங்கவென்னு மர்த்தமாயிருக்கும். வணங்க, நாளும்நின்றடும் நமபழமையங்கொடுவினை யுடனேமாளும், ஓர்குறைவில்லை.

ஆனாலுமாஶ்ரயணத்துக்குக் காலந்தப்பிநின்றதே ! என்ன ( மாளுமோரிடத்திலும் ) முடிகிற வொருக்ஷணத்திலும். ( வணக்கொடுமாள்வதுவலம் ) "𑌦𑍍𑌵𑌿𑌧𑌾 𑌭𑌜𑍍𑌯𑍇𑌯𑌮𑌪𑍍𑌯𑍇𑌵𑌂 𑌨 𑌨𑌮𑍇𑌯𑌂" ( த்விதாபஜ்யேயமப்யேவம்நநமேயம் ) என்னாதே, கிடக்கிறசிறைப்பாயைக் கவ்விக்கவிழ்ந்துகிடந்து சாவவுமமையும். ( வலமே ) வரமென்னுதல் - ஶ்ரேஷ்டமென்னுதல். பலவத்தரமென்னுதல். அவனையுமாஶ்ரயித்து வேறுசிலர்பக்கலிலும் தலைசாய்க்கவிராதே, முடிகிறஸமயத்திலே யாஶ்ரயிக்கவே பின்னைப்பேற்றோடே தலைக்கட்டும். இத்தால் - ஜந்மப்ரப்ருதி யாஶ்ரயித்தாலும்பலமில்லை பகவத்வ்யதிரிக்தர்பக்கல், ஆஶ்ரயணத்திலே யுபக்ரமித்துமுடிந்தாலும் பலந்தப்பாது பகவத்விஷயத்திலென்கை.............*

---

## ஜீயர் அரும்பதம்.

எட்டாம்பாட்டு. ( நாளுமித்யாதி ) "அங்கொடுவினையுடனேமாளும், வணக்கொடுமாள்வதுவலமே" இத்யாதியைப்பற்ற ப்ரஶ்நோத்தரரூபேணஸங்கதி (ஒ

ருநாளாகிலுமித்யாதி) (விலக்காவோ) ப்ரதிபந்தகங்களாகாவோ. (காலந்தானுண்டோ) வருந்தியொருபடி யாஶ்ரயிக்கிறேமென்றாலும், இனியிருக்கப்போகிற தல்பகாலமாகையாலே காலந்தானுண்டோவென்றபடி. ஆஶ்ரயணத்திலேயொருப்படவேயென்றது - "வணங்கி" என்றத்தைப்பற்ற. விரோதிகளடங்கலும் நஶிக்குமென்றது - "உடனேமாளும்" என்றத்தைப்பற்ற. ஶ்ரிய:பதி ஸமாஶ்ரயணமென்றது - "திருவுடையடிகள்" என்றத்தைப்பற்ற. "மாளுமோரிடத்திலும்" இத்யாதியைப்பற்ற (நீங்கள்தண்டுகாலாயித்யாதி) தண்டத்தையே காலாகப்பலகாலூன்றியூன்றித் தடுமாறி நடப்பதற்குமுன்னே.

நாளுநின்றடுமென்று - வினைக்குநித்யதையும். நம என்று - பாரதந்த்ரயமுந்தோற்றுகிறது; வினைதான் அசித்ஸம்ஸர்க்கௌபாதிகமாகையாலே யதுநித்யமாகில்றே யிதுநித்யமாவது, அசித்ஸம்ஸர்க்கந்தா னாத்மபாரதந்த்ரமாயிறேயிருப்பது, பாரதந்த்ரயமும் நித்யத்வமும் பரஸ்பரவிருத்தங்களன்றோவென்ன, வ்யாக்யாதாவருளிச்செய்கிறார் (பரமாணுகதேத்யாதி) யத்வா, (நாளுநின்றடும்) நித்யமுமாய் பரதந்த்ரமுமான ஆத்மவஸ்துவை நாடோறுமிடைவிடாமல் நின்றுஹிம்ஸிக்கக்கடவதான என்று ஶப்தார்த்தமாகையாலே, நித்யவஸ்துவுக்கு நித்யபாரதந்த்ரயம்கூடுமோவென்கிற ஶங்கையை ஸத்ருஷ்டாந்தமாகப் பரிஹரித்துக்கொண்டு, இப்படிநித்யமாய் பரதந்த்ரமான ஆத்மவஸ்துவை யாகந்துககர்மம் நலிகைக்கு ஹேதுவேதென்கிற ஶங்கையையும் பரிஹரிக்கிறார் (பரமாணுகதேத்யாதி) பாரிமாண்டல்யம் - பரமாணுகத பரிமாணம். நித்யமாய் - அநாதியாய்.

பாபமாகில் நம்மதென்று ஸித்தமாயிருக்க, "நம" என்றுவிஶேஷிக்கிறதுக்குபாவம் (த்விஷந்தஇத்யாதி) ஶாட்யாயநஶாகாயாம் "ஸுஹ்ருதஸ்ஸாதுக்ருத்யாம் த்விஷந்த: பாபக்ருத்யாம்" (ஸுஹ்ருதஸ்ஸாதுக்ருத்யாம்த்விஷந்த:பாபக்ருத்யாம்) க்ருத்யா - வ்யாபார:. "நாமேபண்ணினவைத்தவை" என்றத்தால்பலித்ததை ஆளவந்தார் ஶ்ரீஸூக்திமுகேந தர்ஶிப்பிக்கிறார் (அபூதபூர்வமித்யாதி) இதுக்கர்த்தம் (எனக்கித்யாதி)

"நாளுநின்றடும்" என்றிருக்க, "பழமை" என்று விஶேஷிக்கிறதுக்குபாவம் (அதுதானித்யாதி) பாபத்துக்கழகாவது - "நல்லபாம்பு" என்னுமாபோலே க்ரௌர்யத்தைச்சொல்லுகிறதென்கிறார் (அம்மென்றித்யாதி) க்ரௌர்யமெவ்வளவென்ன (அநுபவவிநாஶ்யமித்யாதி) பழமையென்று-அடுக்கிறதிற்பழமைவிவக்ஷிதம்.

ஆஶ்ரயித்தால் பூர்வாகம்போமென்னுமதுக்கு ப்ரமாணங்கள் (யதேஷீகேத்யாதி) சாந்தோக்யேவைஶ்வாநரவித்யாயாம். இஷீகதூலம் - நாணற்பஞ்சு. ப்ரோதம் - போடப்பட்டது. ஶ்ரீவிஷ்ணுதர்மே அஷ்டஸப்ததயத்யாயே, "ஸக்ருத்ஸ்ம்ருதோபி கோவிந்தோ ந்ருணாம் ஜந்மஶதைஶ்சிதம் । பாபராஶிம் தஹத்யாஶு தூலராஶிமிவாநல: । மேருமந்தரமாத்ரோபி ராஶி: பாபஸ்ய கர்மண: । கேஶவம் வைத்யமாஸாத்ய துர்வ்யாதிரிவ நஶ்யதி" (ஸக்ருத்ஸ்ம்ருதோபிகோவிந்தோந்ருணாம்ஜந்மஶதைஶ்சிதம் । பாபராஶிம்தஹத்யாஶுதூலராஶிமிவாநல: । மேருமந்தரமாத்ரோபிராஶி:பாபஸ்யகர்மண: । கேஶவம்வைத்யமாஸாத்யதுர்வ்யாதிரிவநஶ்யதி)

"ஓர்குறைவில்லை" என்றதுக்கு - பூர்வாகங்கள் நஶிக்குமளவேயன்று, உத்தராகமும் ஶ்லேஷியாதென்னுதல்; அநிஷ்டநிவ்ருத்திமாத்ரமன்றிக்கே யிஷ்டப்ராப்தியுமுண்டென்னுதல். இத்தையடைவேயருளிச்செய்கிறார் (மேலுமித்யாதி) இவ்விடத்திலே, "யதா புஷ்கரபலாஶ ஆபோ ந ஶ்லிஷ்யந்த ஏவம்

𑌵𑌿𑌦𑌿 𑌪𑌾𑌪𑌂 𑌕𑌰𑍍𑌮 𑌨 𑌶𑍍𑌲𑌿𑌷𑍍𑌯𑌤𑍇 " (யதாபுஷ்கரபலாஶ ஆபோ ந ஶ்லிஷ்யந்தே ஏவமேவம்விதி பாபம் கர்ம ந ஶ்லிஷ்யதே) இத்யாதயோபிப்ரேதா:. " ஸர்வாபிமதங்களும் பூர்ணமாம் " என்கிறவிடத்தில், " 𑌤𑍍𑌵𑌦𑌙𑍍𑌘𑍍𑌰𑌿𑌮𑍁𑌦𑍍𑌦𑌿𑌶𑍍𑌯 " (த்வதங்க்ரிமுத்திஶ்ய) " 𑌸𑌰𑍍𑌵𑌮𑌾𑌪𑍍𑌨𑍋𑌤𑌿 𑌸𑌰𑍍𑌵𑌶𑌃 " (ஸர்வமாப்நோதிஸர்வஶ:) " 𑌸𑌰𑍍𑌵𑌾𑌨𑍍𑌕𑌾𑌮𑌾𑌨𑌵𑌾𑌪𑍍𑌨𑍋𑌤𑌿 " (ஸர்வாந்காமாநவாப்நோதி) இத்யாதயோபிப்ரேதா:.

உத்தராகாஶ்லேஷத்துக்கு ப்ரமாணத்ரயம் (கௌந்தேயேத்யாதி) (அக்நிநாஸிஞ்சேத்போலே) அக்நிக்கும் ஸேசநத்துக்கும்போலே. அன்றிக்கே, பூர்வாகநாஶத்துக்கு ப்ரமாணம் (துராசாரோபி, நவாஸுதேவேத்யாதி) என்னவுமாம். பகவத்கீதாஸுநவமே " 𑌅𑌪𑌿 𑌚𑍇𑌤𑍍𑌸𑍁𑌦𑍁𑌰𑌾𑌚𑌾𑌰𑍋 𑌭𑌜𑌤𑍇 𑌮𑌾𑌮𑌨𑌨𑍍𑌯𑌭𑌾𑌕𑍍 । 𑌸𑌾𑌧𑍁𑌰𑍇𑌵 𑌸 𑌮𑌨𑍍𑌤𑌵𑍍𑌯𑌃 𑌸𑌮𑍍𑌯𑌗𑍍𑌵𑍍𑌯𑌵𑌸𑌿𑌤𑍋 𑌹𑌿 𑌸𑌃 । 𑌕𑍍𑌷𑌿𑌪𑍍𑌰𑌂 𑌭𑌵𑌤𑌿 𑌧𑌰𑍍𑌮𑌾𑌤𑍍𑌮𑌾 𑌶𑌶𑍍𑌵𑌚𑍍𑌛𑌾𑌨𑍍𑌤𑌿𑌂 𑌨𑌿𑌗𑌚𑍍𑌛𑌤𑌿 । 𑌕𑍌𑌨𑍍𑌤𑍇𑌯 𑌪𑍍𑌰𑌤𑌿𑌜𑌾𑌨𑍀𑌹𑌿 𑌨 𑌮𑍇 𑌭𑌕𑍍𑌤𑌃 𑌪𑍍𑌰𑌣𑌶𑍍𑌯𑌤𑌿 " (அபிசேத்ஸுதுராசாரோபஜதேமாமநந்யபாக் । ஸாதுரேவஸமந்தவ்யஸ்ஸம்யக்வ்யவஸிதோஹிஸ: । க்ஷிப்ரம்பவதிதர்மாத்மா ஶஶ்வச்சாந்திந்நிகச்சதி । கௌந்தேயப்ரதிஜாநீஹிநமேபக்த:ப்ரணஶ்யதி) பாரதேஸாத்வதேச, " 𑌦𑍁𑌰𑌾𑌚𑌾𑌰𑍋𑌽𑌪𑌿 𑌸𑌰𑍍𑌵𑌾𑌶𑍀 𑌕𑍃𑌤𑌘𑍍𑌨𑍋 𑌨𑌾𑌸𑍍𑌤𑌿𑌕𑌃 𑌪𑍁𑌰𑌾 । 𑌸𑌮𑌾𑌶𑍍𑌰𑌯𑍇𑌦𑌾𑌦𑌿𑌦𑍇𑌵𑌂 𑌶𑍍𑌰𑌦𑍍𑌧𑌯𑌾 𑌶𑌰𑌣𑌂 𑌯𑌦𑌿 । 𑌨𑌿𑌰𑍍𑌦𑍋𑌷𑌂 𑌵𑌿𑌦𑍍𑌧𑌿 𑌤𑌂 𑌜𑌨𑍍𑌤𑍁𑌂 𑌪𑍍𑌰𑌭𑌾𑌵𑌾𑌤𑍍𑌪𑌰𑌮𑌾𑌤𑍍𑌮𑌨𑌃 " (துராசாரோபிஸர்வாஶீக்ருதக்நோநாஸ்திக:புரா । ஸமாஶ்ரயேதாதிதேவம்ஶ்ரத்தயாஶரணம்யதி । நிர்தோஷம்வித்திதம்ஜந்தும் ப்ரபாவாத்பரமாத்மந:) ஸ்ரீஸஹஸ்ரநாமாத்யாயே, " 𑌨 𑌵𑌾𑌸𑍁𑌦𑍇𑌵𑌭𑌕𑍍𑌤𑌾𑌨𑌾𑌮𑌶𑍁𑌭𑌂 𑌵𑌿𑌦𑍍𑌯𑌤𑍇 𑌕𑍍𑌵𑌚𑌿𑌤𑍍 । 𑌜𑌨𑍍𑌮𑌮𑍃𑌤𑍍𑌯𑍁𑌜𑌰𑌾𑌵𑍍𑌯𑌾𑌧𑌿𑌭𑌯𑌂 𑌵𑌾𑌪𑍍𑌯𑍁𑌪𑌜𑌾𑌯𑌤𑍇 " (நவாஸுதேவபக்தாநாமஶுபம்வித்யதேக்வசித் । ஜந்மம்ருத்யுஜராவ்யாதி பயம்வாப்யுபஜாயதே) ஸம்யக்வ்யவஸித: - த்ருடாத்யவஸாயயுக்த:.

(இதுதான் பழையதாய்ப்போருவது) " 𑌦𑍁𑌰𑌾𑌚𑌾𑌰𑌸𑍍𑌸𑌮𑌾𑌶𑍍𑌰𑌯𑍇𑌤𑍍 " (துராசாரஸ்ஸமாஶ்ரயேத்) என்றபோதே பூர்வத்வம் ஸித்தமாயிருக்கச்செய்தே " புரா " என்கிறது - அநாதித்வாபிப்ராயமென்று கருத்து. ஏற்கவேயென்றது - ஆதிஶப்தார்த்தம். அவஸரம்பார்த்திருக்கிறவனேயென்றது - " 𑌦𑌿𑌵𑍍𑌕𑍍𑌰𑍀𑌡𑌾 " (திவ்க்ரீடா) இத்யாதியில் கத்யர்த்தமும்சொல்லுகையாலே, " 𑌗𑌤𑍍𑌯𑌰𑍍𑌥𑌾𑌃 𑌬𑍁𑌦𑍍𑌧𑍍𑌯𑌰𑍍𑌥𑌾𑌃 " (கத்யர்த்தா:புத்த்யர்த்தா:) என்றத்தைப்பற்ற.

(ஸர்வேஶ்வரனித்யாதி) கீழிரண்டுபாட்டிலே ப்ரஸக்தமாகையாலே ப்ரகரணநுகுணமாக " மலம் " என்று இஸ்ஸம்ஶயத்தைச் சொல்லுகிறதென்று தாத்பர்யம். தேவதாந்தர பரத்வபுத்தி தவிரவேணுமோவென்ன (திருவடியித்யாதி) ஸ்வாமியுடைய திருநாமத்தை மறந்தும் தத்வ்யதிரிக்த க்ஷுத்ரதேவதைகளைத்தொழாத மஹாப்ரபாவரானவர்களை. மேலே, " மாளுமோரிடத்திலும் " என்கையாலும், " 𑌸𑌕𑍃𑌦𑍇𑌵 𑌹𑌿 𑌶𑌾𑌸𑍍𑌤𑍍𑌰𑌾𑌰𑍍𑌥𑌃 " (ஸக்ருதேவஹிஶாஸ்த்ரார்த்த:) இத்யாதியாலும், " நாளும் " என்றது - காலநியத்யாபாவபரமென்கிறார் (அப

ர்வணீத்யாதி ) அத்ர " ஸஹஸ்ரஶீர்ஷாஜநேந்த்ரம் ஸேவேதாஸ்ப்ருஶேத் । மந்த்ரவாரேஸ்ப்ருஶேத்பூர்வமபரம்பர்வணீஸ்ப்ருஶேத் " ( அஶ்வத்தம்ஸிந்துராஜஞ்சநித்யம்ஸேவேதநஸ்ப்ருஶேத் । மந்தவாரேஸ்ப்ருஶேத்பூர்வமபரம்பர்வணீஸ்ப்ருஶேத் ) என்றதநுஸந்தேயம். நாளும் - ஏதேனுமொருகாலத்திலே.

( நம்திருவுடையடிகள் ) நம் - நமக்கு ஸ்வாமிநியான பிராட்டியை யுடையனான ஸ்வாமியானவனுடைய. இத்தால் - மதுப்பால். நதுஸம்ஸர்க்கோஸ்தி த்வமாத்ராதயோவேதிபாவ:. புருஷகாரமவஶ்யாபேக்ஷிதமென்னுமதுக்குஸம்வாதம் ( ஸர்வேஶ்வரனேயித்யாதி ) இங்கே, " நிக்ரஹாத்வாரணம் காலேஸந்துக்ஷண மநுக்ரஹே । அஸ்திகர்மார்ஹபலதே க்ருத்யமேதத்த்வயம் ஶ்ரிய: " ( நிக்ரஹாத்வாரணம்காலேஸந்துக்ஷணமநுக்ரஹே । அஸ்திகர்மார்ஹபலதேக்ருத்யமேதத்த்வயம்ஶ்ரிய: ) என்றதநுஸந்தேயம். ப்ரமாணமருளிச்செய்து உபபத்தியருளிச்செய்கிறார். ( அவனேயித்யாதி ) ( பற்றவேணும் ) என்றுபபத்தியு மருளிச்செய்தார் இதிஶேஷ:.

நன்மைக்கர்த்தம் ( அவளித்யாதி ) வணங்கவென்று காட்டும்படி யெங்ஙனேயென்ன ( வணங்கியென்கிற வித்யாதி ) வினையெச்சம் - க்ரியாஸங்கோசம். வணங்கியென்கிறது - க்ரியாரூபமாகையாலே, அத்தை ஸங்கோசித்து வணங்கவென்கிறதென்றபடி. அதாவது, வணங்கியென்றால் - க்ரியையினுடையயாவதநுஷ்டானந்தோன்றும் ; வணங்கவென்றால் - க்ரியையினுடைய வுபக்ரமமாத்ரந் தோன்றுமென்றபடி. வணங்கவென்று ப்ரிக்ஷித்ததுக் கநுகுணமாக வந்வயிக்கிறார் ( வணங்கநாளுமித்யாதி ) " ஆஶ்ரயணத்திலேயொருப்படவே " என்றவவதாரிகாநுகுணமாக, வணங்கவென்றதுக்கு - வணங்குகையிலே யொருப்படவென்றபடி.

( முடிகிறவொருக்ஷணத்திலும் ) இடமென்று காலத்தைச்சொல்லி, அத்தால் க்ஷணத்தைச்சொல்லுகிறதென்றபடி. ( சீரைப்பாயை ) சீரையையும் பாயையும்.

விவரணம் ( ஶ்ரேஷ்டமென்னுதலென்று ) ரலயோரபேத:. த்விதீயார்த்தம் ( பலவத்தரமென்னுதலென்று ) பவயோரபேத:.

ஏததுபபாதகம் ( அவனையுமித்யாதி ) பலிதம் ( இத்தாலித்யாதி ) யுத்தகாண்டே ஷட்த்ரிம்ஶே மால்யவந்தம் ப்ரதிராவண: " த்விதாபஜ்யேயமப்யேவம் நநமேயம் துகஸ்யசித் । ஏஷமே ஸஹஜோ தோஷஸ் ஸ்வபாவோ துரதிக்ரம: " ( த்விதாபஜ்யேயமப்யேவம்நநமேயந்துகஸ்யசித் । ஏஷமேஸஹஜோதோஷஸ் ஸ்வபாவோதுரதிக்ரம:. ) " மாளுமோ ரிடத்திலும் " என்ற விடத்திலே, " ஏஷா ப்ராஹ்மீ ஸ்திதி: பார்த்த நைநாம் ப்ராப்ய விமுஹ்யதி । ஸ்தித்வாஸ்யாமந்தகாலேபி ப்ரஹ்மநிர்வாணம்ருச்சதி " ( ஏஷாப்ராஹ்மீஸ்த்திதி:பார்த்தநைநாம்ப்ராப்யவிமுஹ்யதி । ஸ்த்தித்வாஸ்யாமந்தகாலேபிப்ரஹ்மநிர்வாணம்ருச்சதி) என்றதநுஸந்தேயம். அந்தகாலேப்யஸ்யாம்வித்யாயாம்ஸ்த்தித்வாப்ரஹ்மாநந்தம். ப்ராப்நோதீத்யர்த்த:. நிர்வாணம் - ஆநந்தம் " வணங்கநாளும் " இத்யாத்யந்வயித்தவிடத்திலே, " நக்ஷத்ரதாராக்ரஹஸங்குலாபி ஜ்யோதிஷ்மதீ சந்த்ரமஸைவ ராத்ரி: ।

ஸ)ாக்ஷயொஹவெ ஹொகஸூவாகஸ)ாஷி நாரஃ" (நமஇத்யேவயோப்ரு யாந்மத்பக்தஸ்ஸ்ரத்தயாந்விதஃ। தஸ்யாக்ஷயோபவேல்லோகஸ் ஸ்வபாகஸ்யாபி நாரத) இத்யாத்யநுஸந்தேயம்.

மனனகமலமறக்கழுவிநாளும் நந்திருவுடையடிகள்தம் நலங்கழல் வணங்கி, நாளுநின்றடுநம பழமையங்கொடுவினையுடனேமாளும், ஓர்குறைவில்லை, மாளுமோரிடத்திலும் வணக்கொடுமாள்வதுவலமே, இத்யந்வயஃ......................*

# ஒன்பதாம்பாட்டு.

வலத்தனன்றிரிபுரமெரித்தவனிடம்பெறத்துந்தித்
தலத்தெழுதிசைமுகன்படைத்தநல்லுலகமுந்தானும்
புலப்படப்பின்னுந்தன்னுலகத்திலகத்தனன்றனே
சொலப்புகிலிவைபின்னும்வயிற்றுளவிவையவன்றுயக்கே.

## ஆறாயிரப்படி.

(வலத்தனன்) ருத்ரனுடையவும், சதுர்முகஸ்ருஷ்டமான லோகத்தினுடையவும், சதுர்முகன்றன்னுடையவும் ஸ்வரூபஸ்த்திதிப்ரவ்ருத்தி ஹேதுபூதனாய், பின்னையு மாஸ்ரித வாத்ஸல்யத்தாலே ஸ்வேச்சைவரூபேண ஸ்வஸேஷபூதமான ஜகத்தினுள்ளே யாஸ்ரிதர்க்குக் காணலாம்படிவந்து திருவவதாரம்பண்ணியருளு மிவனுடைய குணங்களைச் சொல்லப்புகிலிவை பின்னையும் உள்ளுள்ளுமபர்யந்தமாயிருக்கும். இந்தகுணங்களையுடையனானவனை யெல்லாருமொக்க வறிந்தாஸ்ரயியாதொழிவானென்னென்னில்; தன்பக்கல் ஸ்நேஹமில்லாதார்க்குத் தன்னை யுள்ளபடி யறியவொண்ணாததொருபடி யவர்களை மோஹிப்பித்துவைக்கு மென்கிறார்....................................................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், கீழ்ச்சொன்ன ப்ரஹ்மருத்ரர்களு மிவனாலே லப்த ஸ்வரூபராயிருக்க, ஸ்வவிபூத்யந்தர்ப்பூதனு யவதரித்து தத்தத்ஸாஜாத்யாதிகளாலே நெஞ்சு கலங்கப்பண்ணுமென்கிறார்.

எழுதிசைமுகன் - சதுர்த்தஸபுவந நிர்வாஹகமான வெழுச்சியையுடையதிசைமுகன். படைத்த - ஸ்வஸ்ருஷ்டமான. நல்லுலகமுந்தானும் - விலக்ஷணலோகமும்தானும். துந்தித்தலத் திடம்பெற - அஸங்குசிதமாகத் திருநாபியிலே யிடம்பெற்றிருக்க. திரிபுரமெரித்தவன் - த்ரிபுரதஹநம்பண்ணினருத்ரன். வலத்தனன் - "வமெஸ)காஃஹமெ ஒரு-ஷ)ாஃ க்ஷிணவாஹொபி)தாஃ" (பஸ்யைகா

தஶமேருத்ராந் தக்ஷிணம்பார்ஶ்வமாஶ்ரிதாந் ) என்கிறபடியே வலபார்ஶ்வத்திலான், பின்னும் - ஈஶ்வராபிமாநிகளுக்கும் தன்றிருமேனியிலே யிடங்கொடுத்து ரக்ஷிக்கிறதுக்குமேலே. அவன் புலப்பட - காணவாராய் என்றிருப்பார்க்குக் கண்ணுக்கிலக்காக்கைக்காக. தானே - தானே - கர்மாதிபரதந்த்ரனன்றியிலே. தன்னுலகத்தில் - தன்னதானலோகத்திலுள்ளே. அகத்தனன் - அவதரித்துநிற்கும். சொலப்புகில் - இப்படி சொல்லப்பார்த்தோமாகில். இவை - ஏவம்விதமானகுணங்கள் பின்னும் - பின்னையும். வயிற்றுள - உள்ளேயுள்ளே யகாதமாய்த் துலையாது. இவையவன்துயக்கு - இவையவன் ப்ரமிப்பிக்கும்படி.

"வயிற்றுள" என்று - ப்ரளயத்திலே வயிற்றுக்குள்ளேவைத்ததாகவுமாம். துந்தி - நாபி.......................................................................*

---

## ௯-ஒன்பதாம்பாட்டு.

கீழ், ப்ரஹ்மாதிகளுடைய அபரத்வமும், ஸர்வேஶ்வரனுடைய பரத்வமுஞ்சொன்னார் ; இப்பாட்டில் அவர்கள்தாங்களிவனைப்பற்றி லப்தஸ்வரூபராயிருக்கிறபடியை யருளிச்செய்கிறார்.

ப்ரஹ்மாதிகளுக்கு ருத்பாதகனாய் அவர்களுக்கு ரக்ஷகனான ஸர்வேஶ்வரன் அவர்கள் தாங்களுங் காலிடமாட்டாதபூமியிலேவந்தவதரிக்கைக்கு ஹேதுவென்னென்னில்; அவன்றானருளிச்செய்துவைத்ததுவே ஹேது, "பரித்ராணாய ஸாதூநாம்" ( பரித்ராணாயஸாதூநாம் ) என்றானிறே-ஆஶ்ரயிக்குமவர்களுக்கிதிலே த்வரைபிறக்கைக்காகவும் ருசிஜநகனாகைக்காகவும் வந்துபிறப்பன் ; அதின்பலமாய் வருமதிறே துஷ்க்ருத்துக்களுடையவிநாஶம், என்றருளிச்செய்ததுவே ஹேதுவென்கிறார்.

( வலத்தன்திரிபுரமெரித்தவன் ) கீழிற்பாட்டுக்குக் கீழிரண்டு பாட்டாலுஞ்சொன்னவர்த்தத்தை யநுபாஷிக்கிறார். த்ரிபுரதஹநத்தாலே ஸம்ஜாதாபிமாநியானருத்ரன் திருமேனியில் வலவருகைப்பற்றி லப்தஸ்வரூபனாயிருக்கும். "பஶ்யைகாதஶ மே ருத்ராந் தக்ஷிணம் பார்ஶ்வமாஶ்ரிதாந்" ( பஶ்யைகாதஶமேருத்ராந் தக்ஷிணம்பார்ஶ்வமாஶ்ரிதாந் ) என்கிறபடியே. ( இடம்பெறத்துந்தித் தலத்தெழு திசைமுகன்படைத்த நல்லுலகமுந்தானும் ) எழுச்சியையுடைய திசைமுகன்படைத்தலோகமுந்தானு மஸங்குசிதமாகத் திருநாபிகமலத்திலே யிருக்கும். "ப்ரஹ்மாணமீஶம் கமலாஸநஸ்தம்" (ப்ரஹ்மாணமீஶம்கமலாஸநஸ்த்தம்) என்கிறபடியே. இவை இவர்களுடைய ஸர்வப்ரகாரரக்ஷணத்துக்கு முபலக்ஷணம். எழுச்சியாவது - சதுர்த்தஶ புவநத்துக்கும் நிர்வாஹகனானவளவுடைமை. ஈஶ்வரன் விரும்பிவந்தவதரிக்கையாலே "நல்லுலகம்"

என்கிறது. " ஏறாளுமிறையோனும் திசைமுகனும்திருமகளும், கூறாக ம்தனியுடம்பன் " என்கிறபடியே-பிராட்டிக்கும் ப்ரஹ்மாதிகளுக்குமொக்கத் திருமேனியிலே யிடங்கொடுத்துவைத்தால், அந்தஃபுரத்திலுள்ளவர்களென்று அவர்களிருப்பிடத்தி லிவர்களுக்குநலியவொண்ணாதபடி கூறாகக்கொடுத்துவைக்கும் ஸர்வாபாஸ்ரயமாயிறே திருமேனிதானிருப்பது. ( இடம்பெற ) ஸவிகாஸமாயிருக்கும். ருத்ரனுக்கு மிவ்வருகுள்ளார்க்கும் நிர்வாஹகனாய் சதுர்த்தஸபுவந ஸ்ரஷ்டாவான சதுர்முகன் தானுண்டாக்கின நன்றான லோகமுந்தானும் திருநாபிகமலத்தைப்பற்றி லப்தஸ்வரூபனாயிருக்கும். "உந்தி" என்றும், " துந்தி " என்றும்- திருநாபிக்குப்பேர். ( இடம்பெறத்துந்தி ) இடம்பெற, அத்து, உந்தித்தலம், என்றாய்பதம், அதில், " அத்து " என்கிறபதம்- சாரியைச்சொல்லாய்ப்பொருளின்றியேபோய், " இடம்பெறஉந்தித்தலம் " என்கிறது. " பூதலம் " என்னுமாபோலே. ( திசைமுகன்படைத்த நல்லுலகமுந்தானுமுந்தித்தலத்தனன் ) ஸ்தநந்தயப்ரஜைதாய் முலையையகலில் நாக்கொட்டுமாபோலே, திருநாபிகமலத்தைவிடில் தன்ஸத்தை யில்லையாம்படியிருக்கை. இப்படியின்னே ஸர்வகாலமுமிவர்களிருப்பார்களோ வென்னில், ஆபத்துக்களிலே திருமேனியிலே யிடங்கொடுக்கும். அதுமஹாகுணமாகையாலே ஆழ்வார்களெப்போது மொக்க வருளிச் செய்துகொண்டுபோருவர்கள். ஸாமந்தர்க்குப்புறம்பே நாடுகள்கநக்கவுண்டாகிலும் மாளிகைக்குள்ளே செம்பாலேநாழியரிசியைத் தங்களுக்கு வரிசையாக நினைத்திருப்பார்களிறே, அப்படியேயிவர்களும் திருமேனியில்பண்ணிவைக்கும்ப்ராப்தி விடார்களிறே. ஒருகலகங்களிலே அடையவளைந்தானுக்குள்ளே குடிவாங்கியிருந்து, காலந்தெளிந்தவாறே புறம்பேபுறப்பட்டாலு மிவ்விடமின்னார்பற்று, இவ்விடமின்னார்பற்றென்று பின்னும்ப்ராப்தி சொல்லிவைக்குமாபோலே.

( பின்னும் ) ப்ரஹ்மாதிகளுக்குத் தன்றிருமேனியிலே யிடங்கொடுத்ததுக்குமேலே. ( தன்னுலகத்திலகத்தனன் ) தானுண்டாக்கின ப்ரஹ்மாவாலே யுண்டானலோகங்களிலேவந்தவதரிக்கும். ப்ரஹ்மருத்ரர்களும் தன்றிருமேனியி லேகதேஸத்தைப்பற்றி லப்தஸ்வரூபராம்படியிருக்கிறவன் அவர்களுங்கூடக்காலிட அருவருக்கிற ஸம்ஸாரத்திலே வந்தவதரிக்கைக்கு ஹேதுவென்னென்னில் ( புலப்பட ) காணவாராயென்றென்று கண்ணும்வாயுந்துவர்ந்திருக்கு மவர்களுக்குத்தன் ஸங்கல்பத்தாலே ஸம்விதாநம்பண்ணவொண்ணாதே யவர்கள்சக்ஷுராதிகரணங்களுக்கு விஷயமாகவேணுமென்று. என், ஸங்கல்பத்தாலே ஸம்விதாநம்பண்ணிலென் செய்யுமென்னில், " மழுங்காதஞானமே படையாகமலருலகிற் றொழும்பாயார்களித்தாலுன் சுடர்ச்சோதிமறையும் " என்பார்க

ள். இதுதனக்குத்தானடி யென்னென்னில் ( தானே ) [ ஆத்மமாயயா ] ஆத்மேச்சயா. ஒருகர்மம்ப்ரேரிக்கவன்று, இச்சையாலே.

( சொலப்புகிலிவைபின்னும்வயிற்றுள ) அவனிப்படியவதரித்துப்பண்ணும் ரக்ஷணங்களிலேக தேஸந்சொலவில் சொல்லுமத்தனை, எல்லாஞ்சொல்லித் தலைக்கட்டப்போகாது. சொலப்புகிலுள்ளேயுள்ளேயாமித்தனை. அன்றியே, தன்னாலேஸ்ருஷ்டரான ப்ரஹ்மாதிகளாலே ஸ்ருஷ்டரானவர்களுக்கு "என்மகன்" என்றபிமானிக்கலாம்படிவந்துபிறந்து, "உனக்குராஜ்யத்தைத்தந்தேன், அதுதன்னைவாங்கினேன், போ" என்றும், கையிலே கோலைக்கொடுத்து "பசுக்களின்பின்னே போ" என்றுஞ்சொல்லலாம்படியெளியனுயிருக்கிறதான், இவர்களுக்கோரபத்துவந்தாலிவர்களை வயிற்றிலேவைத்து நோக்கும்படியைசசொல்லிற்றுகவுமாம். இப்படிஇதுவே அர்த்தமென்னுமிடம் நீரருளிச்செய்தபோதுதெரிந்து, அல்லாதபோதெங்களுக்குத் தெரியாதபடியிராநின்றதி; என்ன ( இவையவன்றுயக்கே ) "மமமாயாதுரத்யயா" ( மமமாயாதுரத்யயா ) என்கிறபடியே அவன்றனே ப்ரக்ருதியாகிற விலங்கையிட்ட பாக்யஹீநரானவர்கள் தன்பக்கலணுகாதபடி பண்ணி, அவர்களகலப்புக்காலவன்றனநுமதி தானம்பண்ணி ; உங்கள்பக்கலவனுதாலிங்ஙனேயிருக்கையாலே தெரியாதொழிகிறதென்கிறுர். துயக்கு-ஸம்ஸயம்....*

---

## ஜீயர் அரும்பதம்.

ஒன்பதாம்பாட்டு. ( வலத்தனனித்யாதி ) ... ன்றது - கீழ்ப்பாட்டுக்குக்கீழிரண்டுபாட்டிலுமென்றபடி. இப்பாட்டுக்கர்த்தத்வயாநுகுணமாகஸங்கதித்வயமாதல் ; யத்வா, ஏகஸங்கதியாய், ப்ரஹ்மாதிகளுக்குமித்யாதி - கீழ்வாக்யவிவரணமாய், அவர்கள் லப்தஸ்வரூபராயிருக்கிறபடியையும், அவதாரத்துக்கு ஹேதுவையுமருளிச்செய்கிறுராதல்.

இந்தயோஜனையில், "ப்ரஹ்மாதிகளுக்கும்" என்றதுக்குக்கீழே, ஆனல் என்றுகூட்டிக்கொள்வது. அருளிச்செய்துவைத்ததுதானேதென்ன ( பரித்ராணயேத்யாதி ) "பரித்ராணாய ஸாதூநாம் விநாஸாய ச துஷ்க்ருதாம் । தர்மஸம்ஸ்தாபநார்த்தாய ஸம்பவாமி யுகே யுகே" ( பரித்ராணாயஸாதூநாம் விநாஸாயசதுஷ்க்ருதாம்|தர்மஸம்ஸ்த்தாபநார்த்தாயஸம்பவாமியுகேயுகே ) இதிகீதாஸுசதுர்த்தே. "ஸாதூநாம்பரித்ராணாய, தர்மஸம்ஸ்தாபநார்த்தாய" (ஸாதூநாம்பரித்ராணாய, தர்மஸம்ஸ்த்தாபநார்த்தாய) என்றபதத்வயத்துக்குமர்த்தம் (ஆஸ்ரயிக்குமவர்களுக்கித்யாதி) அதாவது-முன்பேருசியுடையார்க்குத்வரைபிறக்கைக்காகவந்து பிறப்பனென்னுமது - "பரித்ராணாய ஸாதூநாம்" ( பரித்ராணாயஸாதூநாம் ) என்றதுக்கர்த்தம். தன்னுடையவாஸ்ரயணத்தில் ருசியில்

லாதார்க்கு ருசியைப் பிறப்பிக்கைக்காக வந்து பிறப்பனென்கிறவிது - “ ധര്മസംസ്ഥാപനാര്ഥായ” (தர்மஸம்ஸ்த்தாபநார்த்தாய) என்கிறவிதுக்கர்த்தம். “ വിനാശായ ച ദുഷ്കൃതാം ” ( விநாஶாயசதுஷ்க்ருதாம் ) என்கிறதேயென்ன, அதாநுஷங்கிகமென்கிருர். ( அதின்பலமாயித்யாதி ) “ വിനാശായ ച ” ( விநாஶாய ச ) என்றசகாரம் - அந்வா..த்திலே. அந்வாசயமாவது அப்ரதாநம். “ ആനുഷങ്ഗികസ്തു ദുഷ്കൃതാം വിനാശഃ ” ( ஆநுஷங்கிகஸ்து துஷ்க்ருதாம்விநாஶஃ ) என்றிறே பாஷ்யத்திலே பாஷ்யகாரரருளிச்செய்தது. ஆகருசிஜநநமும் த்வராஜநநமும் த்ருஷ்டிசித்தாபஹாரி ஸ்வஸௌந்தர்ய ப்ரதர்ஶநமின்றியிலே கூடாமையாலே யவற்றுக்கே ப்ராதாந்யம், துஷ்க்ருத்விநாஶம் ஸங்கல்பமாத்ரத்தாலே செய்யலாமாகையாலே யிதப்ரதாநமென்றபடி.

ப்ரஹ்மாத்யபரத்வம் கீழேசொல்லிற்றேயென்ன ( கீழிற்பாட்டுக்கித்யாதி) சொன்னவர்த்தமாவது- இருவர்களுடையவபரத்வம். அப்படியிருக்குமோவென்ன ( பஶ்யைகாதஶேத்யாதி ) “ ദ്വാദശൈവ തഥാദിത്യാന് വാമപാര്ശ്വം സമാശ്രിതാന് ” ( த்வாதஶைவததாதித்யாந் வாமபார்ஶ்வம்ஸமாஶ்ரிதாந் ) இத்யுத்தரார்த்தம். இதம்மோக்ஷதர்மே. “ திரிபுரமெரித்தவன் ” என்றது - ருத்ராந்தரங்களுக்குமுபலக்ஷணம்.

உந்தித்தலத்தென்றது - உந்தித்தலத்தென்றபடி. எழுச்சி - ஸம்ருத்தி. கீதாஸ்வேகாதஶே, “ പശ്യാമി ദേവാംസ്തവ ദേവ ദേഹേ സര്വാംസ്തഥാ ഭൂതവിശേഷസങ്ഘാന് । ബ്രഹ്മാണമീശം കമലാസനസ്ഥം ഋഷീംശ്ച സര്വാനുരഗാംശ്ച ദിവ്യാന് ” பஶ்யாமிதேவாம்ஸ்தவதேவதேஹேஸர்வாம்ஸ்ததாபூத விஶேஷஸங்காந் । ப்ரஹ்மாணமீஶம்கமலாஸநஸ்த்தம்ருஷீம்ஶ்சஸர்வாநுரகாம்ஶ்சதிவ்யாந் ) ஈஶஶப்தஃ - ப்ரதாநருத்ரபரஃ கமலாஸநஸ்த்தம் ப்ரஹ்மாணமித்யந்வயஃ. கமலாஸநஸ்த்தம் ஈஶம். இதி ஈஶவிஶேஷணம்வா, கமலாஸநஸ்த்தம்-ப்ரஹ்மணிஸ்த்திதமித்யர்த்தஃ. அளவுடைமை - ஐஶ்வர்யம். ஜ்ஞாநாதிக்யம்வா.

“ இடம்பெற ” என்றதுக்குத்தாத்பர்யம் ( ஏறுளுமித்யாதி ) வ்ருஷபத்தையாளுகிறருத்ரனும், சதுர்முகனும், பிராட்டியுங்கூடிட்டு வ்யவஸ்த்திதமாகவாளுகிறவத்விதீயமான திருமேனியை யுடையவனிதிஶப்தார்த்தஃ. இவர்களுக்குக்கூறுகக்கொடுப்பானென்னென்ன ( ஸர்வாபாஶ்ரயமித்யாதி )

பதங்களுக்கர்த்தமருளிச்செய்வதாகமீளவும்ப்ரதீகோபாதாநம் ( இடம்பெறவித்யாதி ) “ எழுச்சியையுடைய ” இத்யாதிவாச்யவிவரணம் ( ருத்ரனுக்குமித்யாதி ) உந்தியென்றிறே - நாபிக்குப்பேர். ஆகையாலிடம்பெற வுந்தியென்றிறே சொல்லவடுப்பதென்ன ( உந்தியென்றுமித்யாதி ) “ துந்தி ” என்றும்சொல்லலாமென்றுகருத்து. இவ்விடத்திலும் “ உந்தி ” என்றுபதமாகவுமாமென்கிருர் ( இடம்பெறத்துந்தியித்யாதி என்கிறதென்னுமளவும் ) “ அத்து ” இத்யத்ரஅகாரலோபஃ. ( என்ருய்பதம் ) என்றுபதபேதமாய். சாரியைச்சொல் - நிரர்த்தகபதம். ஶப்

த்துக்குப்ரயோஜநம் ( பூதலமித்யாதி ) தலமென்கிறதுஎன்றுஶேஷம். "உந்தித்தலத்தனன்" என்றுநிருபகமாகச்சொன்னதுக்குபாவம் (ஸ்தநந்தயேத்யாதி) நாக்கொட்டுமாபோலே - நாக்குலருமாபோலே.

ஆழ்வார்களருளிச்செய்த மாத்ரமன்றிக்கே தாங்களும் தங்களுக்கித்தைப் பெருமையாக நினைத்திருப்பாரென்று பாவாந்தரம் (ஸாமந்தர்க்கித்யாதி) செம்பு-தாமரநாழி. ( செம்பாலேநாழியரிசியை ) செம்புநாழியாலேநாழியரிசியை. வரிசையாக - பஹுமாநமாக. அவர்களொருக்காலிருந்துபோனாலு மவர்களிடமென்னுமதுக்கு த்ருஷ்டாந்தம் ( ஒருகலகங்களிலேயித்யாதி ) அடையவளைந்தான் - ஏழாம்ப்ராகாரம். பற்று - இடம். ஸ்த்தலமென்றபடி.

கீழே, "திசைமுகன்படைத்த" என்றுவைத்து, "தன்னுலகம்" என்கை வ்யாஹதமன்றோவென்ன ( தானுண்டாக்கினவித்யாதி ) அதாவது - தானுண்டாக்கின ப்ரஹ்மாவாலே யுண்டாக்கப்பட்டதாகையாலே தன்னதென்னலாமென்றபடி. அருவருக்கிற -ஹேயமாகநினைக்கிற.

( ஹேதுவென்னென்னில் ) ப்ரயோஜநமென்னென்னில் ( காணவாராயித்யாதி ) உன்வடிவழகைக்காணும்படி வரவேணுமென்றென்று பலகாலும்பார்த்துக் கூப்பிட்டு, பார்க்கிறகண்ணும் கூப்பிடுகிறவாயும் பசையறவுலர்ந்ததென்றபடி. ( விஷயமாகவேணுமென்று ) சக்ஷுர்விஷயத்வம்ப்ரயோஜநதயாஹேதுவென்றபடி. ஸங்கல்பத்தாலே ஸம்விதாநம்பண்ணுகை-குணவிஷ்காராதிகளாலே ஸம்விதாநம் பண்ணுகை. ( மழுங்காதவித்யாதி ) அமோகமான ஸங்கல்பரூபஜ்ஞாநமேபரிகரமாகவிஸ்த்ருதமான லோகத்திலேயுனக்கு ஶேஷபூதரானார்க்குபகரித்தால், ஆர்த்தரக்ஷணம்பண்ணுகைக்கு மடுவின்கரையிலே த்வரித்துவந்தாயென்கிற வுன்னுடைய வத்யுஜ்ஜ்வலமானதேஜஸ்ஸு திரஸ்க்ருதமாகாதோவென்றபடி.

இதுதனக்கு - அவதாரத்துக்கு. இதுகாரணப்ரஶ்நம். "புலப்பட" என்றுப்ரயோஜநஞ்சொல்லுகையாலே. "அடியென்னென்னில்" என்றதுக்குக்கருத்து - கர்மத்தாலேயோவென்றபடி.

"புகில்" என்றயதிஶப்தார்த்தம் ( அவனிப்படியித்யாதி ) "இவை" என்று - ரக்ஷணப்ரகாரங்களைச்சொல்லுகிறதாதல், ப்ரஸ்துத லோகஸ்த்தரையாய், தஶரதாதிகளைச்சொல்லுகிறதாதல். வயிற்றுள - ( உள்ளேயுள்ளேயாம் ) வாசாமகோசர மென்றபடி. த்விதியார்த்தத்தில், வயிற்றுள - வயிற்றுக்குள்ளே வைத்துக்கொண்டாறபோலே யந்ததஶையிலும் ரக்ஷிக்குமென்றபடி. ப்ரதமயோஜனையில், ரக்ஷணங்கள் - பூர்வவாக்யதாத்பர்யஸித்தங்கள். த்விதியயோஜனையிலர்த்தங்கள் - "உலகத்திலகத்தனன்" என்றபதோபஸ்த்தாபிதங்கள்.

( இவையவன்றுயக்கே ) அருளிச்செய்தபோது தெரிந்து, அல்லாதபோது தெரியாமையுமானவிவை யவனுண்டாக்கினது ஸம்ஶயம். அவன் ப்ரமிப்பிக்கும்படி யென்றபடி. இவ்விடத்திலே "ஈஶாநஸ்ஸமஹாயோகீ ஸர்வஸ்யஜகதஃப்ரபுஃ । கர்மாண்யாரபதே கர்த்தும் கீநாஶஃஇவதுர்பலஃ । தேநவஞ்சயதே லோகாந் மாயாயோகேந கேஶவஃ । யேதமேவ ப்ரபத்யந்தே ந தே முஹ்யந்தி மாநவாஃ" (ஈஶாநம்ஹாயோகீஸர்வஸ்யஜகதஃப்ரபுஃ । கர்மாண்யார

பதேகர்த்ரும்கிராஶஇவதர்ப்பலஃ | தேநவஞ்சயதேலோகாந்மாயாயோகேநகேஶவஃ | யேதமேவப்ரபத்யந்தே நதேமுஹ்யந்திமாநவாஃ ) இத்யாத்யநுஸந்தேயம். ( அநுமதிதாநம்பண்ணி ) இருக்கும் இதிஶேஷஃ. “ உங்கள்பக்கல் ” என்கிறதுக்குமுன்னே அப்படியே யிதிஶேஷஃ. துயக்கென்று - மனந்திரிவுக்குப்பேர். அது - ஸம்ஶயமும், விபர்யயமும். இங்கே ப்ரகரணாநுகுணமாக, ஸம்ஶயம் விவக்ஷிதமென்கிறார் ( துயக்குஸம்ஶயமென்று )

திரிபுரமெரித்தவனிடம்பெறவலத்தனன், எழுதிசைமுகன்படைத்த நல்லுலகமுந்தானு மிடம்பெற வுந்தித்தலத்தனன், பினனுந் தன்னுலகத்திற் புலப்படத்தானேயகத்தனன், இவைபின்னும் சொலப்புகில் வயிற்றுள, இவையவன்றுயக்கே, இத்யந்வயஃ. இடம்பெற - அஸங்குசிதமாக...............................*

# பத்தாம்பாட்டு.

துயக்கறுமதியினன்ஞானத்துளமரரைத்துயக்கு
மயக்குடைமாயைகள்வானிலும்பெரியனவல்லன்
புயற்கருநிறத்தனன்பெருநிலங்கடந்தநல்லடிப்போ
தயர்ப்பிலனலற்றுவன்றழுவுவன்வணங்குவனமர்ந்தே.

## ஆறாயிரப்படி.

( துயக்கறு ) நிர்த்தோஷாந்தஃகரணராய் ஸம்யக்ஜ்ஞாநிகளான ப்ரஹ்மருத்ராதிகளுக்குக்கூட வறியவரிதாயிருந்ததிவ்யாவதாரந்தொடக்கமாகவுள்ள மஹாஶ்சர்யங்களைச்செய்தருளவல்லனாய், காளமேகநிபமான திவ்யரூபத்தையுடையனாயிருந்த வெம்பெருமானுடைய திருவுலகளந்த நல்லடிப்போதை யுபதேஶநிரபேக்ஷமாக நானென்னுடைய ஸர்வகரணங்களாலு மநந்யப்ரயோஜநனாய்க்கொண் டநுபவிக்கப்பெற்றேனாகாதேயென்றுகொண்டு ஸ்வஸ்வபாவத்தைப்பேசுகிறார் ........... ...........*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், அவனுடைய அஸங்க்யாதமான ப்ராமகத்வங்கிடக்க, அவனழகையே யநுபவிப்போமென்று பாரிக்கிறார்.

துயக்கறு - ஸம்ஶயவிபர்யயமில்லாமையாலே கலக்கமற்ற. மதியில் - நெஞ்சிலேபிறந்த. நன்ஞானத்துள் - நன்றானஜ்ஞாநத்தையுடையரான. அமரரை - தேவர்களையும். துயக்கும் - கலங்கப்பண்ணும். மயக்கு-ப்ராமகத்வஶக்தியை. உடை- உடைய. மாயைகள் - ஆஶ்சர்யமானவாகாரங்கள். வானிலும் - எல்லையில்லாதவாகாஶத்திலும். பெரியனவல்லன்-அதிஶயிக்கப்பண்ணவல்லனாய். அதனில், புயல்- காளமேகம்போலே. கருநிறத்தனன் - கருகினநிறத்தையுடையனானவனுடைய. பெருநிலம் - பூமிப்பரப்பை. கடந்த - அநாயாஸேநஅளந்த. நல் - விலக்ஷணமா

ன. அடிப்போது - திருவடித்தாமரைகளை. அமர்ந்து - ப்ரயோஜநாந்தரத்தில்பற்றற்று அமர்ந்து. அயர்ப்பிலன் - மறப்பில்லாதவனாய். அலற்றுவன் - அக்ரமமாக குணங்களை வாயாலே சொல்லுவன். தழுவுவன் - அத்யந்தப்ரேமயுக்தனாய்க்கொண்டு ஸம்ஶ்லேஷிப்பன். வணங்குவன் - தலையாலேவணங்குவன். இப்படி கரணத்ரயத்தாலு மநுபவிப்பேனென்கிறார்.....................................................*

---

ஈடு - பத்தாம்பாட்டு.

அவன் விமுகர்பக்கல் பண்ணுமவைகிடக்கிடீர், அவன்காட்டின வழியே காணப்புக்க நாம் மநோவாக்காயங்களாலே நம்விடாய்கெடத்திருவுலகளந்தருளின திருவடிகளை யநுபவிப்போமென்றுபாரிக்கிறார்.

( துயக்கறுமதியில் ) துயக்கற்றமதியையுடைய. ஸம்ஶயவிபர்யயரஹிதமான மதியையுடையராகையாலே ( நன்ஞானத்துளமரர் ) உள் - மநமும், இடமும், மேலும். இங்கு, மேலானவமரரென்றபடி. நன்றான ஞானத்தையுடையரான வமரரையுங்கூட. ( துயக்கும்மயக்குடைமாயைகள் ) துயக்கு - மனந்திரிவு. அறிவுகெடும்படி தெரியாமையைப்பண்ணக்கடவதான குணசேஷ்டிதங்களோடு கூடின வவதாரங்கள். ( வானிலும் பெரியனவல்லன் ) ஆகாஶத்தைப் பரிச்சேதிக்கிலும் பரிச்சேதிக்கப்போகாது. “ அமரர் ” என்கிறது - இந்த்ராதிகளை. ரஜஸ்தமஸ்ஸுக்கள் மிக்கிருக்கச்செய்தே, ஸத்த்வந்தலையெடுத்தாலும் அப்படியே கனத்திருக்குமிறே யவர்கள் தங்களுக்கு, அப்போது, “ நங்கார்யம்நம்மாற்செய்யப்போகாது, அவனே நங்கார்யத்துக்குக்கடவன் ” என்றிரா, அநந்தரக்ஷணத்திலே எதிரிடாநிற்பர்கள் ; தங்களிருப்பிடமுமிழந்து, ஸ்த்ரீகளும்பிடியுண்டு, எளிமைபட்டவளவிலே யத்தைப் பரிஹரித்துத்தரவேணுமென்றிரந்து, பின்னை யிவனும்போய், நரகவதம்பண்ணி சிறைகிடந்த ஸ்த்ரீகளையும் மீட்டுக்கொடுத்துப்போராநிற்கச்செய்தே, புழைக்கடைக்கேநின்றதொருபூண்டைப் பிடுங்கிக்கொண்டுபோர, வஜ்ரத்தைக்கொண்டு தொடர்ந்தானிறே. அன்றிக்கே, “ நன்ஞானத்துளமரர் ” என்கிறது-நித்யஸூரிகளையாய், ஜ்ஞாநாதிகனான பெரிய திருவடியும், “ தேவரீரையும் நாய்ச்சிமாரையும் வஹித்தேன் நானன்றே ” என்றாற்போலே சிறியார்சொல்லும்வார்த்தையைச் சொன்னானிறே.

அவனுடையவாஶ்சர்யங்கள் நம்மால் பரிச்சேதிக்கப்போமோ!, அதுகிடக்கிடீர், அவனநுக்ரஹத்தாலே காட்டின வடிவழகை யநுபவிப்போம் நாமென்கிறார் ( புயற்கருநிறத்தனன் ) வர்ஷுக வலாஹகம்போலே யிருக்கிற திருமேனியையுடையவன். ( பெருநிலமித்யாதி ) “மநோவாக்காயங்களாலே யநுபவிக்கப் பெற்றேனென்கிறார் ” என்று பிள்ளா

ன்பணிக்கும்படி. "இவற்றாலேயநுபவிக்கப்பாரிக்கிறார்" என்று ஜீயரருளிச்செய்யும்படி. (பெருநிலங்கடந்த) பரப்பையுடைத்தான பூமியையளக்கிறவிடத்தில், வஸிஷ்ட்டசண்டாலவிபாகமறஎல்லார்தலையிலுமொக்கத் திருவடிகளை வைத்தான். இவர்கள் நன்மை தீமைபாராதே, தன்னுடையஸத்தியே யிவர்களுக்கு மாம்படிபண்ணினான். (நல்லடிப்போது) "படிக்களவாகநிமிர்த்த நின்பாதபங்கயமே தலைக்கணியாய்" என்று ஆசைப்படவேண்டும்படியிறே யிருப்பது, "கதாபுந:" (கதாபுந:) என்று ப்ரார்த்தித்துக்கிடக்குமதிறே. செவ்விப்பூச்சூட வாசைப்படுவாரைப்போலே. (அயர்ப்பிலன்) மறக்கக்கடவேனல்லேன். (அலற்றுவன்) அக்ரமமாகப்பேசக்கடவேன். (தழுவுவன்) "ஸாகாடம்பரிஷஸ்வஜே" (ஸாகாடம்பரிஷஸ்வஜே) என்னுமாபோலே, கட்டிக்கொள்ளக்கடவேன். (வணங்குவன்) நிர்மமனாய்த் திருவடிகளிலே விழக்கடவேன். (அமர்ந்தே) அநந்ய ப்ரயோஜநனாய் யிப்படி செய்யக் கடவேன்.

---

## ஜீயர் அரும்பதம்.

பத்தாம்பாட்டு. (துயக்கித்யாதி) கீழெல்லாம் பரோபதேஸம் பண்ணிப்போந்தவரிங்கே தாமநுபவிக்கக் கடவேனென்று சொல்லுகிறது. அவர்கள் திருந்தாமையாலே. இதுக்குஹேது - அவன்பண்ணிவைத்த மயக்கமென்றநுஸந்தித்தருளி, ஸ்வாநுபவத்திலே யிழிகிறானென்கிறார் (அவன்விமுகர்பக்கலித்யாதி) (அவன்காட்டினவழியே) அவதரித்து வடிவழகைக்காட்டினவழியே.

மதி - அந்த:கரணம். தர்மபூதஜ்ஞாநமாகவுமாம். துயக்கறுமதியிலென்றது - ஹேதுகர்ப்ப விஸேஷணமென்னுமிடந் தோற்ற வருளிச்செய்கிறார் (ஸம்ஸயேத்யாதி) மேலானவமரர் - மநுஷ்யரிற்காட்டில் மேலானவமரர். "துயக்கும், மயக்குடை" என்கிற புநருக்திக்கர்த்தம் (அறிவுகெடும்படி யித்யாதி) துயக்குண்டாம்படி மயக்கதைப் பண்ணக்கடவதான குணசேஷ்டிதங்களோடேகூடின வவதாரங்களென்றபடி. "வானிலும்பெரியன" என்றத்தை யவதாரத்துக்கு விஸேஷணமாக்கி யருளிச்செய்கிறார் (ஆகாஸத்தையித்யாதி) அறிவுகேடு - ஸம்ஸயவிபர்யயங்கள். தெரியாமை - ஜ்ஞாநாபாவம். மயக்கத்தைப்பண்ணுகையாலே, மயக்கென்று - குணசேஷ்டிதங்களைச் சொல்லுகிறது.

ரஜஸ்தம:ப்ரசுரரை "நன்ஞானத்தமரர்" என்னலாமோவென்ன (ரஜஸ்தமஸ்ஸுக்களித்யாதி) அப்போது - ஸத்த்வம்தலையெடுத்தபோது. அப்படியெதிரிட்டவிடமுண்டோவென்ன (தங்களிருப்பிடமுமித்யாதி) பூண்டை - பாரிஜாதத்தை.

உள்ளமரர் - மேலானவமரர். நித்யஸூரிகளென்றபடி. சிவியார் - கைவர்ந்தர். தண்டிகைமுதலானவை சுமப்பாரென்றபடி. "சொன்னானிறே" என்றவநந்தரம், அத்தைச்சொல்லுகிறதென்னுதல், என்று வாக்யஸேஷம்.

அவிஸ்மரணார்த்தம் உக்தார்த்தாநுவாதம் (அவனுடையவித்யாதி) "பெருநிலம்" இத்யாதியைக்கடாக்ஷித்நுபாவம் (அவனநுக்ரஹேத்யாதி) "அயர்ப்

பிலன் " இத்யாதியை - வர்த்தமானார்த்தத்திலும் பவிஷ்யதர்த்தத்திலும் சொல்லலாயிருக்கையாலே வர்த்தமானார்த்தமாக நிர்வஹிப்பர் பிள்ளான். "பெரு" இத்யாதிக்கு பலிதம் (வஸிஷ்ட்டேத்யாதி) நன்மைக்கர்த்தம் (இவர்களித்யாதி) "தன்னுடையஶக்தியே" என்கிறவிடத்தில் - கங்காப்ரவாஹாதிகள் த்ருஷ்டாந்தத்வேநத்ரஷ்டவ்யங்கள். "போது" என்றதுக்குபாவம் (படிக்களவாகவித்யாதி) நிருபாதிகபந்துவான நீ பூமிக்கந்யாபிமாநம் வந்ததொருநாளிலே பூமிக்களவாம்படி நிமிர்த்தளந்துகொண்ட வுன்னுடைய திருவடித்தாமரையை யென்றலைக் கலங்காரமாம்படி பண்ணியருளவேணுமென்றபடி. இதுக்கு ஸம்வாதம் (கதேத்யாதி) "கதாபுநஃஶங்க" (கதாபுநஶ்ஶங்க) இத்யாதி, ஸ்தோத்ரே. "த்வச்சரணாம்புஜத்வயம்" (த்வச்சரணம்புஜத்வயம்) என்றதுக்குபாவம் (செவ்விப்பூவித்யாதி)

பஞ்சமேம்ஶே அஷ்டாதஶே, "ஸோபயேநம்த்வஜவஜ்ராப்ஜக்ருதசிஹ்நேநபாணிநா । ஸம்ஸ்ப்ருஶ்யாக்ருஷ்யச ப்ரீத்யா ஸுகாடம் பரிஷஸ்வஜே." (ஸோப்யேநம்த்வஜவஜ்ராப்ஜ க்ருதசிஹ்நேநபாணிநா । ஸம்ஸ்ப்ருஶ்யாக்ருஷ்யசப்ரீத்யாஸுகாடம்பரிஷஸ்வஜே) துபககறுமதியை யுடையராகையாலே நன்ஞானத்தராயுள்ளான வமரரைத் துயக்கும் மயக்குடைத்தாய் வானிலும்பெரியனவான மாயைகள் வல்லனாய், புயற்கருநிறத்தனனவனுடைய பெருநிலங்கடந்தநல்லடிப்போதை, அமர்ந்தே அயர்ப்பில னலற்றுவன் தழுவுவன், வணங்குவனித்யந்வயஃ. அமரரைத்துயக்கும் மயக்குடைமாயைகள் வானிலும் பெரியனவல்லன் - தேவர்களையும் கலங்கப்பண்ணும் குணசேஷ்டிதங்களை யுடைய வாஶ்சர்யாவதாரங்களை யெல்லையில்லாத வாகாஶத்திலு மதிஶயிக்கப் பண்ணவல்ல னிதிஶப்தார்த்தஃ. மயக்குடை - ப்ராமகத்வ ஶக்தியை யுடையவென்றுஞ் சொல்லுவர்கள்.......................................................................*

---

## பதினொன்றாம்பாட்டு.

அமரர்கடொழுதெழவலைகடல்கடைந்தவன்றன்னை
யமர்பொழில்வளங்குருகூர்ச்சடகோபன்குற்றேவல்க
ளமர்சுவையாயிரத்தவற்றினுளிவைபத்தும்வல்லா
ரமரரோடுயர்விற்சென்றறுவர்தம்பிறவியஞ்சிறையே.

### ஆறாயிரப்படி.

(அமரர்கள்) ஆஶ்ரிதஸமாஶ்ரயணீயத்வார்த்தமாக வண்டமத்யேவதீர்ணனாய், தேவாதிஸகலஜநங்களுக்கும் தாஸ்யாவஹமான அம்ருதமதநாதிதிவ்யசேஷ்டிதங்களை யுடையனாயிருந்த வெம்பெருமானுக்கு ஶேஷவ்ருத்திரூபமாய் நிரதிஶயரஸரூபமாயிருந்த வாயிரந்திருவாய்மொழியிலும் வைத்துக்கொண்டு இத்திருவாய்மொழிவல்லானா, எம்

பெருமான் ப்ரதிபந்தகங்களைப்போக்கி திருவடிகளிற்கொண்டுபோகப்ப ற்றுமை, முந்தறதிருவடிகளிலேகொண்டுபோய், அந்தமில்பேரின்பத்த டியரோடிருந்தபின்னை ப்ரதிபந்தகமான ப்ரக்ருதிஸம்பந்தத்தைப்போக் கி யருளுமென்கிறார்... .............................................................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், இத்திருவாய்மொழிவல்லவர்கள் நித்யஸூரிகளோடொக்கவு யர்த்தியைப்போய்ப்பெறறு ஸம்ஸாரஸம்பந்தத்தை யறுத்தவரென்கிறார்.

அமரர்கள் - சர்வாமைக்குமருந்தாசைப்பட்டதேவர்கள். தொழுதெழ - "தொழுதெழு" என்றதம்மைப்போலே கையு மஞ்சலியுமாய்க்கொண்டுகிளரும் படி. அலைகடல் - அலைகிறகடலை. கடைந்தவன்தன்னை - க்ஷுபிதமாம்படிகடைந்த அக்ஷோப்யஸ்வபாவனைப்பற்ற. அமர் - பொருந்தின. பொழில்வளம் - பொழிலி னழகையுடைய. குருகூர் - திருநகரிக்குக்கடவ. சடகோபன் - ஆழ்வாருடைய. குற்றேவல்கள் - அந்தரங்கவ்ருத்திகளாய். வாசிககைங்கர்யமாகையாலே சுவை - ஸப்தஸாரஸ்யமு மர்த்தஸாரஸ்யமும். அமர் - பொருந்தின. ஆயிரத்தவற்றினுள் - ஆயிரமானவவற்றினுள். இவைபத்தும் - திருப்பாற்கடலில் அம்ருத தடாகம்போ லேயிருக்கிற விவைபத்தையும். வல்லார் - அப்யஸிக்கவல்லார். உயர்வில் - உயர் த்தியில். அமரரோடுசென்று - அமரரோடொக்கச்சென்று. தம்பிறவி - தம்முடை யபிறவியாகிற. அஞ்சிறையறுவர் - சிக்கென்றசிறையறுவர்.

இத்திருவாய்மொழி ஐஞ்சீராய் நெடிலடிநான்கு மொத்திருக்கையாலே க லித்துறை. நேரசைபதினாறே நிரையசைபதினேழே என்றடியெழுத் தொவ்வாதி ருந்தது - கட்டளைக்கலித்துறை யல்லாமையால்.................................*

---

## ஈடு - பதினொன்றாம்பாட்டு.

நிகமத்தில், இத்திருவாய்மொழியை யப்யஸிக்கவல்லார் மேற்பட நித்யஸூரிகள் வரிசையைப்பெற்று, பின்னைஸம்ஸாரமாகிற அறவைச்சி றைவெட்டிவிடப் பெறுவர்களென்கிறார்.

(அமரர்கள்தொழுதெழ) கவிழ்ந்து "உப்புச்சாறுகிளருவ தெ ப்போதோ" என்றுகிடக்கிற தேவஜாதியானது எழுத்துவாங்கும்படியா கவாயிற்று தோளுந்தோள்மாலையுமாயொரு கடலொருகடலைநின்று க டையுமாபோலே கடைந்தபடி. (தொழுதெழ) குணங்களுக்குத்தோ ற்று "தொழுதெழு" என்கிறதம்பாசுரமே யாய்விட்டது அழகுக்கு த்தோற்ற வவர்களுக்குமென்கிறார். (அமர்பொழில்) சேர்ந்தபொழில். (வளங்குருகூர்) வளப்பத்தையுடைத்தாய் - ஸம்பத்தையுடைத்தானதி ருநகரி. (சடகோபன்குற்றேவல்கள்) இத்திருநகரிக்குநிர்வாஹகரான ஆழ்வார்வாசிகமான வடிமைசெய்தபடியாயிற்றிதுதான். பூர்ணவிஷயத் தில் வாசகமானவ்ருத்திக்கு மேற்படச்செய்யலாவதில்லையே, "தஜ்ஞரா

ஸோவிப நவ:" ( தத்விப்ராஸோவிபக்யவ: ) என்று நித்யஸூரிகளுக்கு மிதுவேயிறே வ்ருத்தி. ( அமர்சுவையாயிரம் ) ரஸகநமாயாயிற்றுயிருந்தானிருப்பது. இத்தால் - வாசிகமானவடிமை "முறை" என்று கார்யபுத்த்யா செய்யவேண்டாவென்றபடி. ( அவற்றினுளிவைபத்தும் ) "விண்ணவரமுதுணவமுதில்வரும் பெண்ணமுதுண்ட" என்னுமாபோலே, அவைதன்னிலே ரஸகநமாயிருக்குமாயிற்றித்திருவாய்மொழி. இவற்றையப்யஸிக்கவல்லார் நித்யஸூரிகளோடொத்த உச்ச்ராயத்தையுடையராய், தங்களுடைய ஜந்மமாகிற விலங்கறப்பெறுவர்கள். இப்பத்தைக் கற்றபோதே யிவனை நித்யஸூரிகளிலே யொருவனாக நினைப்பிடும், ஶரீரவிஶ்லேஷம்பிறந்தால் போய்ப்புகுமித்தனை ; ராஜா வொருவனுக்கு நாடிட்டால் க்ரமத்திலே போய்ப்புகுமித்தனையிறே. ராஜபுத்ரன் றலையிலே முடியைவைத்து, பின்னை விலங்குவெட்டிவிடுமாபோலே, நித்யஸூரிகளிலே யொருவராம்படியான தரத்தைப்பெற்று, பின்னை ஸம்ஸாரநிகளவிச்சேதத்தைப்பெறுவர்கள். அன்றியே, ( அமரரோடுயர்வில்சென்று ) ஆதிவாஹிகரோடே விரஜையிலேசென்று. ( அறுவர்தம்பிறவியஞ்சிறையே ) ஸூக்ஷ்மஶரீரவிதூநநம்பெறுவர். ) "த்யக்த்வா தேஹம் புநர்ஜந்ம நைதி மாமேதி" ( த்யக்த்வாதேஹம்புநர்ஜந்மநைதிமாமேதி ) என்றருளிச்செய்தவதுவே பலமாகக்கடவது.

முதற்பாட்டில் ஸுலபனென்றார் ; இரண்டாம்பாட்டில், கீழ் ப்ரஸ்துதமான ஸௌலப்யத்தை ஸப்ரகாரமாக வருளிச்செய்தார் ; மூன்றாம்பாட்டில், அவனுடைய வவதாரரஹஸ்யமொருவர்க்கு மறியநிலமல்லவென்றார் ; நான்காம்பாட்டில், அப்படிகள்தா ஞாஶ்ரிதர்க்கறியலாம், அநாஶ்ரிதர்க்கறியப்போகாதென்றார் ; ஐந்தாம்பாட்டில், இப்படிப்பட்டவனை யவனருளிச்செய்த பக்திமார்க்கத்தாலே யாஶ்ரயியுங்கோளென்றார்; ஆறாம்பாட்டில், ஆஶ்ரயணீயவஸ்துவின்னதென்றும், ஆஶ்ரயிக்கும் ப்ரகாரமின்னதென்று மருளிச்செய்தார் ; ஏழாம்பாட்டில், நீங்கள் மந்தாயுஸ்ஸுக்களாகையாலே விளம்பிக்கவொண்ணாது, கடுக வாஶ்ரயியுங்கோளென்றார் ; எட்டாம்பாட்டில், ஆஶ்ரயிக்கவே விரோதிகளடங்கலும் நஶிக்குமென்றார் ; ஒன்பதாம்பாட்டில், ப்ரஹ்மேஶாநாதிகளுக்கும் காரணபூதனானவன் வந்தவதரிக்கைக்கு ஹேதுவருளிச்செய்தார் ; பத்தாம்பாட்டில், இப்படி ஸுலபனானவனை த்ரிவிதகரணங்களாலு மநுபவிக்கப்பாரித்தார் ; இத்தை அப்யஸித்தார்க்கு பலஞ்சொன்னார் நிகமத்தில்....*

## ஜீயர் அரும்பதம்.

நிகமம் ( அமரர்களித்யாதி ) "அமரரோடுயர்வில்" இத்யாதியைக் கடாக்ஷித்து ஸங்கதி ( இத்திருவாய்மொழியையித்யாதி ) அறவைச்சிறை - தயநீயமான்சிறை. து:கைகரூபமான சிறையென்றுமாம்.

அம்ருதப்ராஶநாந்மரணராஹித்யார்த்திகள் - அமரர்களென்று திருவுள்ளம்பற்றி யருளிச்செய்கிறார் ( கவிழ்ந்தித்யாதி ) இத்தால் சாவாமைக்குப்பரிகரமான வம்ருதத்தி லிவர்களுக்குண்டான வபிநிவேஶமும், இப்படிக்கொத்தவர்களையும் தனக்கடிமையாக்கிக்கொள்ளவல்ல வவனுடைய ஸௌந்தர்யாதிஶயமும் சொல்லுகிறது. உப்புச்சாறு - அம்ருதம். கிளருவது - உத்பந்நமாவது. எழுத்துவாங்குகையாவது - " 𑌪𑌦𑍍𑌮𑌾𑌙𑍍𑌗𑍁𑌲𑌿𑌵𑌿𑌚𑍍𑌛𑍇𑌦𑌃 𑌉𑌰𑍋𑌵𑌿𑌨𑍍𑌯𑌸𑍍𑌤𑌮𑌕𑍍𑌷𑌰𑌂। 𑌤𑌨𑍍𑌨𑌾𑌮𑌗𑍍𑌰𑌹𑌣𑌞𑍍𑌚𑍈𑌵 𑌦𑌾𑌸𑍍𑌯𑌮𑍇𑌤𑌚𑍍𑌚𑌤𑍁𑌰𑍍𑌵𑌿𑌧𑌂 " ( பத்யமங்குளிவிச்சேதஃ உரோவிந்யஸ்தமக்ஷரம் । தந்நாமக்ரஹணஞ்சைவதாஸ்யமேதச்சதுர்விதம் ) என்றதில் " 𑌉𑌰𑍋𑌵𑌿𑌨𑍍𑌯𑌸𑍍𑌤𑌮𑌕𑍍𑌷𑌰𑌂 " ( உரோவிந்யஸ்தமக்ஷரம் ) என்கிறதாஸ்யம். அதாவது ஸ்வாமிபேரை மார்விலேயெழுதிக்கொள்ளுகை. தோளுந்தோள்மாலையுமென்றது - அர்த்தாத்ஸித்தம். " அலைகடல் " என்றத்தாலே - அக்ஷுப்தகருணும்புதி ஸூசிதமாகையாலே யருளிச்செய்கிறார் ( ஒருகடலித்யாதி ) அநந்யப்ரயோஜநரான தமக்கன்றோ " தொழுதெழு " என்னக்கூடுவது, ப்ரயோஜநாந்தரபரர்க்குக்கூடுமோவென்ன ( குணங்களுக்கித்யாதி )

( குற்றேவல் ) குறுகின ஏவல். அந்தரங்ககைங்கர்யம். இத்திருவாய்மொழி யிவருடைய குற்றேவலாம் ப்ரகாரத்தை யருளிச்செய்கிறார் ( இத்திருநகருக்கித்யாதி ) வாசிகமாத்ரம்போருமோவென்ன ( பூர்ணேத்யாதி ) உக்தோபபாதநம் தத்விப்ராஸஇத்யாதி ) ருக்வேதே. விப்ராஸஃ - மேதாவிநஃ. பகவதநுபவைக குஶலா இதியாவத். விபந்யவஃ - ஸ்துதிஶீலாஃ. " 𑌪𑌨 𑌸𑍍𑌤𑍁𑌤𑍌 " (பநஸ்துதௌ) (இதிதாதுஃ. வாசிககைங்கர்யபரா இதியாவத்.

கார்யபுத்த்யா - கர்த்தவ்யபுத்த்யா. இதினுடைய போக்யதையே யிழியப்பண்ணுமென்றபடி. போக்யத்திலும் போக்யாம்ஶமாகச் சொன்னதுக்கு ஸம்வாதம் ( விண்ணவரித்யாதி ) தேவர்கள் அம்ருதத்தை புஜிக்க அந்த வம்ருதம் கோதாம்படியதில் நின்றும் வந்துதோற்றின பெரியபிராட்டியாராகிற வம்ருதத்தை புஜித்தவென்ஸ்வாமியானவனே யென்றபடி.

( அமரரோடுயர்விற்சென்று ) உயர்வில்வந்தால், அமரரோடொத்த உச்ச்ராயத்தையுடையராய். சிறைக்கு அழகாவது - " நல்லபாம்பு " என்னுமாபோலே க்ரூரமாயிருக்கை. பிறவியற்று, "அமரரோடுயர்விற்சென்று என்னவேண்டாவோவென்ன ( இப்பத்தைக்கற்றவித்யாதி ) ஶரீரவிஶ்லேஷத்தையுடனே பிறப்பிக்கவொண்ணுதோவென்ன ( ராஜாவித்யாதி ) இவன்பக்கலாதரத்தாலே நித்யஸூரிகளிலே யொருவனுக நினைப்பிடுகையன்றிக்கே, ஸம்ஸாரத்தினுடைய வநர்த்தகரத்வத்தாலும் நினைப்பிடுமென்னுமத்தை ஸத்ருஷ்டாந்தமாக வருளிச் செய்கிறார் ( ராஜபுத்ரனித்யாதி ) தரம் - வரிசை.

அவதாரஸௌலப்ய ப்ரதிபாதகமான வித்திருவாய்மொழி கற்றவர்களுக்கு ஸ்ரீகீதையிற்சொன்னதுவே பலமென்கிறார் ( த்யக்த்வேத்யாதி ) தேஹம்த்யக்த்வாமாமேதி, புநர்ஜந்மநைதீத்யந்வயஃ. அயம்ஶ்லோகஃ ப்ரவேஶஏவலிகிதஃ.

ஶ்ரோத்ருபுத்தி ஸ்மாதாநார்த்தம் பாட்டுக்கள்தோறும் ப்ரமேயத்தை யருளிச்செய்கிறார் ( முதற்பாட்டிலித்யாதி )

அமரர்கள் தொழுதெழவித்யாரப்ய, பத்தும்வல்லார் உயர்வி லமரரோடு சென்று தம்பிறவி யஞ்சிறையறுவர் இத்யந்வயஃ.................................*

# த்ரவிடோபநிஷத்தாத்பர்யரத்நாவளி.

---

( பத்துடையடியவர்க்கு )

பந்தார்ஹத்வாத் ஸ்வபக்தை꞉ அதிகதரகுணாநந்ததிவ்யாவதாராத் ஸர்வேஷ்வாஸக்திமத்த்வாந் நதஸுகமதயா ஸ்வப்ரபோதப்ரதத்வாத் । க்யாதாபிக்யாதிசிஹ்நாத் ஸ்வருசிவிதரணாத் ஸர்வகாலாஶ்ரயத்வாத் ஸர்வாதேஸ்ஸ்வாங்கதாநாத் ப்ரஹிதபததயா நந்தஸௌஶீல்யமாஹ ॥ (௩)

(பந்தார்ஹத்வாத்ஸ்வபக்தைஃ) கடைவெண்ணெய் களவினிலுரவிடையாப்புண்டு - பக்தஜநங்களாலே கட்டுண்ணும்படி பவ்யனாயிருக்கையாலும். (அதிகதரகுணநந்ததிவ்யாவதாராத்) இதிரண்டுபோட்டிலாத்தம். நிலைவரம்பிலபலபிறப்பாய், அமைவுடைநாரணன்மாயை - அஸங்க்யேய கல்யாணகுண விஶிஷ்டனாய் அப்ராக்ருத ஸம்ஸ்த்தாநத்தோடேவந் தநேகாவதாரங்களைப் பண்ணுகையாலும், அவதரிக்கும்போதும் ப்ரஹ்ம ருத்ராதிகளுக்கும் நியந்தாவானதான் "பிதரம் ரோசயாமாஸ" (பிதரம் ரோசயாமாஸ) என்கிறபடியே ஸ்வநியாம்யனானவொருவனுக்கு புத்ரனாம்படி யாஶ்சர்யமாய் வந்து பிறக்கையாலும். (ஸர்வேஷ்வாஸக்திமத்த்வாத்) யாருமோர்நிலைமையனெனவறிவெளியவெம்பெருமான் - ஜந்மவ்ருத்தங்களாலெத்தனையேனும் தண்ணியரான குஹஶபரீவாநரகோபால மாலாகாராதிகளான வெல்லாரிடத்திலு மநுரக்தனாகையாலும். (நதஸுகமதயா) வணக்குடைத்தவநெறிவழிநின்று - வணங்கினபேர்களாலேஸுப்ராபனாகையாலும். (ஸ்வப்ரபோதப்ரதத்வாத) உணர்ந்துணர்ந் துரைத்துரைத்திறைஞ்சுமின்-ஸ்வவிஷயஜ்ஞாநத்தை யுண்டாக்குகையாலும். (க்யாதாபிக்யாதிசிஹ்நாத், ஸ்வருசிவிதரணாத்) நன்றெழில்நாரணன், உள்ளிலும்மிருபசையறுத்து - ஸுபால தைத்திரீய மைத்ராயணீய மஹோபநிஷத் ப்ரப்ருதிகளிலே ப்ரஸித்தமான நாராயணனென்கிற திருநாமத்தையும் ததர்த்தமான நியந்த்ருத்வத்தையும் சிஹ்நமாகவுடைத்தாகையாலும், தன்னை மநஸ்ஸிலே சிந்தித்தவாறே இதரவிஷயத்தில் நசையைப்போக்கி ஸ்வவிஷயத்தில் ருசியை யுண்டாக்குகையாலும். (ஸர்வகாலாஶ்ரயத்வாத்) மாளுமோரிடத்திலும் வணக்கொடு மாள்வதுவலம் - ஆஶ்ரயணத்துக்குக் கால மதிக்ராந்தமாயிற்றென்று கைவாங்க வொண்ணாதபடி யந்திமஸமயத்திலும் ஆஶ்ரயமாகையாலும். (ஸர்வாதேஸ்ஸ்வாங்கதாநாத்) வலத்தனன் திரிபுரமெரித்தவன் - ப்ரஹ்மருத்ராதிகளுக்கும் தன்திருமேனியிலே யிடங்கொடுக்கையாலும். (ப்ரஹிதபததயா) பெருநிலங்கடந்த நல்லடிப்போது - த்ரிவிக்ரமாவதாரம்பண்ணி நிம்நோந்நதவிபாகமற வெல்லார் தலையிலும் திருவடிகளை வைக்கையாலு மெம்பெருமான் நிரவதிக ஸௌலப்ய விஶிஷ்டனென்று "பத்துடையடியவர்க்கு" என்கிறதஶகத்திலே யாழ்வார் ப்ரதிபாதித்தருளினாரென்கிறார்.................(௩)

---

# திருவாய்மொழி நூற்றந்தாதி.

பத்துடையோர்க்கென்றும்பரனெளியனும்பிறப்பால்
முத்திதருமாநிலத்தீர்மூண்டவன்பால் - பத்திசெயு
மென்றுரைத்தமாறன்றனின்சொல்லாற்போம்நெடுகச்
சென்றபிறப்பாமஞ்சிறை. (௩)

மூன்றாம்பாட்டு. (பத்துடையோர்க்கென்றும்) இதில், ஸௌலப்யத்தை யுபதேஶித்த திவ்யஸூக்தியை யநுவதித்தருளிச்செய்கிறார். அதெங்ஙனேயென்னில்; "ஸர்வஸ்மாத்பரனாய் அதீந்த்ரியனானவனை க்ஷுத்ரரான நாங்கள் கண்டுபஜிக்கும்படியெங்ஙனே" என்று வெருவுகிற ஸம்ஸாரிகளைக்குறித்து, "பரனானவன்றானே அதீந்த்ரியமானவடிவைக் கண்ணுக்கிலக்காக்கிக்கொண்டு இதரஸஜாதீயனாய் ஸம்ஸாரிகளுக்கும் பஜிக்கலாம்படி தன்க்ருபையாலே ராமக்ருஷ்ணாதி ரூபேணவவதரித்து ஸுலபனானபின்பு பஜிக்கத்தட்டில்லை" என்கிற பத்துடையடியவரிலர்த்தத்தை "பத்துடையோர்க்கு" என்றருளிச்செய்கிறாரென்கை.

(பத்துடையோர்க்கென்றும் பரனெளியனும்பிறப்பால்) பத்துடையோர்க்கு - பக்திமான்களுக்கு. பத்துடையோர் - "நீருடையோர்" என்னுமாபோலே. ஆஶாலேஶமாத்ரத்தையேபோரப் பொலிய வெண்ணியிருக்கு மீஶ்வராபிப்ராயத்தாலே யருளிச்செய்கிறார்; "பத்துடையடியவர்" என்றாரிறே. ஏவம்வித பக்தியுக்தர்க்கு. (என்றும்) ஸர்வகாலத்திலும். (பரன்) "யாவையும்யாவரும் தானுமமைவுடைநாரணன்" "மலர்மகள்விரும்பு நமரும்பெறலடிகள்" என்று சொல்லப்படுகிற ஸர்வஸ்மாத்பரனான ஸர்வேஶ்வரன். (எளியனும்) "வாயுஸூநோ:" (வாயுஸூநோ:) "இமௌஸ்ம" (இமௌஸ்ம) இத்யாதிப்படியே யெளியனும். "பத்துடையடியவர்க்கெளியவன், மத்துறுகடைவெண்ணெய் களவினிலுரவிடையாப்புண் டுரலினோடிணைந்திருந்தேங்கியவெளிவெத்தறம்" என்னும்படி கட்டவுமடிக்கவுமாம்படி யெளியனும் - ஸுலபனும். அது எத்தாலேயென்னில் (பிறப்பால்) அவதாரத்தாலே. "பலபிறப்பாயொளிவரும்" என்றத்தை நினைக்கிறது. (முத்திதரும்) அவதரித்தவிடத்தே பக்ஷிக்கும் ரக்ஷஸ்ஸுக்கும் மோக்ஷத்தைக்கொடுக்கும். "வீடாந்தெளிதருநிலைமையதொழிவிலன்" என்றத்தைப் பின்சென்றபடி. (மாநிலத்தீர்) அவனவதரிக்கைக்கிடான விஸ்தீர்ண மஹாப்ருத்வியிலுள்ளவர்களே. (மூண்டவன்பால்பத்திசெயும்) விதிப்ரேரிதராயனறிக்கே அத்யந்தாபிநிவேஶயுக்தராய் பரத்வஸௌலப்யாதி குணவிஶிஷ்டனானவன் திருவடிகளிலே பக்தியைப்பண்ணுங்கோள். (என்றுரைத்த) என்றருளிச்செய்த. இத்தால்- "நன்றெனநலஞ்செய்வதவனிடை" என்றத்தை யநுபாஷித்தபடி. (பத்திசெயுமென்றுரைத்தமாறன்றனின்சொல்லாற்போம்) அவதாரஸௌலப்யத்தை முன்னிட்டாஶ்ரயியுங்கோளென்று ஆழ்வார் ஶ்ராவ்யமாக வருளிச்செய்த வித்திருவாய்மொழியி னநுஸந்தாநத்தாலே நிவ்ருத்தமாம் (நெடுகச்சென்றபிறப்பாமஞ்சிறை) அநாதிகாலம் தீர்க்கமாய்ப்போந்த ஜந்மமாகிற க்ரூரமானசிறை. "அருவர்தம்பிறவியஞ்சிறை" என்றத்தை யநுவிதாநம்பண்ணினபடி. "த்யக்த்வா தேஹம் புநர்ஜந்ம நைதி மாமேதி ஸோர்ஜுந" (த்யக்த்வாதேஹம்புநர்ஜந்மநைதிமாமேதி ஸோர்ஜுந) என்னக்கடவதிறே. ........................................................(௩)

முதற்பத்தில் மூன்றாந்திருவாய்மொழி முற்றிற்று.

ஆக - திருவாய்மொழி - ௩—பாட்டு - ௩௩.

ஸ்ரீ

# திருவாய்மொழி.

## முதற்பத்து.

## நான்காந் திருவாய்மொழி.

### அஞ்சிறைய - ப்ரவேஶங்கள்.

### ஆறாயிரப்படி.

( அஞ்சிறைய ) ஆழ்வாரிப்படி தர்ஶநஸமாநாகாரமானஜ்ஞாநத்திலே எம்பெருமானை யநுபவித்து, பாஹ்யஸம்ஶ்லேஷத்திலே யபேக்ஷைபிறந்து, அதில் ப்ரவ்ருத்தராய், அதுங்கைவாராமையாலே அத்யந்தமவஸந்நராய், எம்பெருமானுடைய ஸர்வாபராத ஸஹத்வாதிகுணங்களை யநுஸந்தித்து, இப்படி குணவானானவன் நம்மைக்கைவிடானென்று பார்த்து, தூதவாக்யத்திலே ஸ்வாபிலஷிதத்தை யெம்பெருமானுக்கு விண்ணப்பஞ்செய்கிறார். ஒருபிராட்டியினுடைய வாக்யாபதேஶத்தாலே ஸ்வாபிலஷிதத்தை விண்ணப்பஞ்செய்கிறார்............ ................*

### பன்னீராயிரப்படி.

நாலாந்திருவாய்மொழியில், இப்படிஸுலபனாய் ஸுந்தரனானஶேஷியை கரணத்ரயத்தாலு மநுபவிக்கவிழிந்தவர், அவன்சடக்கென முகங்காட்டாமையாலே அவஸந்நராய், போகவிளம்பஹேது பூர்வார்ஜிதாபராதங்களைப்பொறுத்து ரக்ஷிக்கைக்குறுப்பான பரிகரோச்ச்ராயத்தையும், அமலங்களாக விழிக்கும் புண்டரீகாக்ஷத்வத்தையும், அநந்யார்ஹமாக்குமபதாநவைபவத்தையும், அதுக்கவ்யவஹித ஸாதநமானவழகையும், ஸஸ்நேஹமான ஸர்வலோக ரக்ஷணத்தையும், ரக்ஷணத்வரைக்கிடான பரிகரவத்தையையும், ஆஶ்ரிததோஷத்தை அதஃகரிக்குமநவதிகக்ருபையையும், தோஷமேபோக்யமானநிரதிஶயவாத்ஸல்யத்தையும், அதுக்கடியான நிருபாதிக பந்தத்தையும், அதூரவர்த்தித்வத்தையுமுடைய னாகையாலே, நந்தஶையை யறியாமல் விளம்பித்தானித்தனை யென்றறுதியிட்டு, கடகமுகத்தாலே ஸ்வார்த்தியறிவிக்கப்பார்த்து, நாயகனான வீஶ்வரனைப்பிரிந்த நாயகியினுடைய யதூதப்ரேஷணமாகிற அந்யாபதேஶத்தாலே யருளிச்செய்கிறார். இவருடையஸ்வரூபமநந்யார்ஹஶேஷமாயும், அநந்யரக்ஷ்யமாயும், அநந்யபோகமாயும், ஶேஷிக்கு ஸர்வப்ரகாரத்தாலும் பார்யாவத்பரதந்த்ரமாகையாலும், ஈஶ்வரனுடைய ஸ்வாமித்வாத்மத்வஶேஷித்வபும்ஸ்த்வாதிகளாகிற ஸ்வபாவங்களை யநுஸந்தித்து சேதநனுக்கு தாஸத்வ தேஹத்வ ஶேஷத்வ ஸ்த்ரீத்வாதி ஸ்வபாவங்க ளவர்ஜநீயமாய்வ

ருகையாலும், புருஷோத்தம விஷயத்தி லிவருடைய ப்ரணயம் நாயகன்பக்கல்நாயகி ப்ரணயத்தோடு ஸரூபமாகையாலே நாயகிபாசுரத்தாலே யருளிச்செய்யக்குறையில்லை. இருபிரிந்த தலைமகள் தூதாகையாலே கைக்கிளையாயிருக்கிறது.......*

---

௭. ௫.

பரத்வத்தையும் பஜநீயதையையும ஸௌலப்யத்தையு மநுபவித்து ஹ்ருஷ்டராய்த்தாமாய்ப்பேசினார் கீழ் ; இதில், தாமானதன்மையழிந்து ஒருபிராட்டிதசையை ப்ராப்தராய், ஹர்ஷத்தாலேசொல்லும்பாசுரம்போய் ஆற்றாமையாலேசொல்லும் பாசுரமாய்ச்செல்லுகிறது; “அயமபரஃகாரகஙியமஃ” என்னுமாபோலே, கீழ்ப்போந்தரீதியொழியவேறென்றாயிறே யிருக்கிறது. முற்காலத்திலே அல்பம் விவக்ஷிதனாயிருப்பானொருவன், “வீதராகராயிருப்பார் பரிக்ரஹித்துப்போருகிறதொன்றாயிருந்தது, தத்வபரமாகவடுக்கும்” என்றித்திருவாய்மொழியளவும் வரவதிகரித்து, இத்திருவாய்மொழியளவிலே வந்தவாறே “இது காமுகவாக்யமாயிருந்ததீ” என்று கைவிட்டுப்போனானும்; “நிதித்யாஸிதவ்ய꞉” (நிதித்யாஸிதவ்யஃ) என்று விதிக்கிற பகவத்காமமென்றறிந்திலன் பாக்யஹாநியாலே.

“அயர்ப்பிலனலற்றுவன் றழுவுவன்வணங்குவன்” என்றவிது- “அநுபவிக்கிறார்” என்றுபிள்ளான்பணிக்குமென்றவிது, இவருக்கு முனியேநான்முக னளவுமுள்ளதுமாந ஸாநுபவமாகையாலே அத்தோடேசேரவிழுமிறே; அநுபவிக்கப்பாரிக்கிறாரொன்கிறவிடம், இத்தோடேபோரச்சேர்ந்திருக்கும். திருவுலகளந்தருளினவனுடைய திருவடிகளையநுபவிப்பதாக வொருப்பட்டுக்கட்டிக்கொண்டார் அதொருகாலவிஶேஷத்திலேயாய், தாம்பிற்பாடராய்த்தோற்றுகையாலே, துணுக்கென்றுதாமானதன்மையழிந்து ஒருபிராட்டிதசையை ப்ராப்தராய், ஹர்ஷத்தாலேசொல்லும்பாசுரம்பேய் ஆற்றாமையாலே சொல்லும்பாசுர மாய்விட்டது. “ஆர்த்தோவாயதிவாத்ருப்த꞉” ஆர்த்தோவாயதிவாத்ருப்தஃ” என்கிறவிஷயத்தையநுபவித்தவிவர்க்கு இழவுவருகைக்கு ப்ரஸங்கமென்னென்னில்; “ஆமத்திற்சோறுபாதகம்” என்னுமத்தாலே நிதாநஜ்ஞான பிக்ஷுக்கள் போஜநநிரோதம் பண்ணுமாபோலே, மேல்வருமநுபவங்கள் ஸாத்மிக்கைக்காக நாலடிபேரநின்றான், மருத்துவனாய் நின்றமாமணி வண்ணனிறே.

அநந்தரம்கலங்கினார். மயர்வறமதி நலமருளப்பெற்றவரிறே இப்படிகலங்கினார், அவன்றானேகொடுத்தவறிவும் விஶ்லேஷத்திலகிஞ்சித்கரமாம்படியிறே யவனுடையவைலக்ஷண்யம்; “தத்தஸ்ய ஸத்ருஶம் ஹவெ

ஈ” ( தத்தஸ்யஸத்ருஸம்பவேத் ) என்றிருந்தவள் தானேவேண்யுத்க்ரதநாதிகளிலே யொருப்பட்டாளிறே, “ஹம்ஸகாரண்டவாகீர்ணாம் வந்தே கோதாவரீம் நதீம்” ( ஹம்ஸகாரண்டவாகீர்ணும் வந்தேகோதாவரீம்நதீம் ) என்றும், “ அஶோகஶோகாபநுதஶோகோபஹதசேதஸம் ” ( அஶோகஶோகாபநுதஶோகோபஹதசேதஸம் ) என்றுமிறேயவர்கள் வார்த்தையும்.

பிராட்டிமார்தசைஸதானுண்டாகிறபடி யெங்ஙனேயென்னில்; அநந்யார்ஹஶேஷத்வத்தாலும், அநந்யஶரணத்வத்தாலும், அந்வயத்தில தரித்தும், வ்யதிரேகத்தில் தரியாதொழிகையாலும், ததேகபோகராகையாலும், அவன் நிர்வாஹகனுக இத்தலை நிர்வாஹ்யமாகையாலும், பிராட்டிமார்தசையுண்டாகத்தட்டில்லை. ஆனல் பிராட்டிதானுகப்பேசுவானென்னென்னில்; தாமரை, திருவடிகளுக்குப்போலியாயிருக்க, “வையங்கொண்டதடந்தாமரை” என்று - தாமரையாகவே திருவடிகளைப்பேசுகிறுப்போலே, இங்கும்பிராட்டியாகப்பேசுகிறது. முற்றுவமையிருக்கிறபடி. ராஜர்ஷி, ப்ரஹ்மர்ஷியானபின்பு க்ஷத்ரியத்வம் பின்னுட்டிற்றிலலேயிறே; எதிர்த்தலையில் பும்ஸ்த்வத்தை யழித்துப் பெண்ணுடையுடுத்தும்படியிறே யவனுடைய புருஷோத்தமத்வமிருப்பது. கூடுமிடங்குறிஞ்சி, அதுக்குபூதமாகாஶம்; பிரியுமிடம்பாலை, அதுக்குபூதம்தேஜஸ்ஸு; ஊடலுக்குஸ்த்தாநம் மருதம், அதுக்குபூதம் வாயு; பிரிந்தாரிரங்குமிடம் நெய்தல், அதுக்குபூதம் ஜலம்; பிரிந்தாரிரங்குவது நெய்தல்நிலத்திலே யாகையாலே; பிராட்டி, தானும் தன்பரிகரமுமாக லீலோத்யாநத்திலே புறப்பட்டாளாய், தோழிமார் பூக்கொய்கையிலே அந்யபரைகளாக, நாயகனும் தன்னேராயிரம்பிள்ளைகளுந்தானுமாக வேட்டைக்குப்புறப்பட்டுவர, ஏவுண்டம்ருகம் இவளை இந்தவுத்யாநத்திலே தனியேகொண்டுவந்துமூட்டியது மறைய, தைவயோகத்தாலேயிருவர்க்கும் ஸம்ஶ்லேஷம் ப்ரவ்ருத்தமாய், கூட்டினதைவம்பிரிக்கப்பிரிந்து, “ இனியிரண்டுதலையையுமழித்தாகிலும் கிட்டவேணும்” என்னுமாற்றுமைபிறந்து, தன்பரிஸரத்திலுள்ளார் “ எம்மின்முன்னவனுக்குமாய்வர்” என்கிறபடியேதளர்ந்து, கால்நடைதருவாரில்லாமையாலே, அப்பரிஸரத்திலே வர்த்திக்கிற சிலதிர்யக்குகளைப்பார்த்து, “ இவைவார்த்தைசொல்லமாட்டாது ” என்னுமதறியாதே, “ இவற்றுக்கு பக்ஷபாதமுண்டாயிருந்ததாகையாலே கடுகப்போய் நங்கார்யஞ்செய்பவற்று ” என்று கமநஸாதநமான பக்ஷபாதமே பற்றுசாக, ராவணமாயையால்வரு மதிஸங்கையுமில்லாமையாலே கண்ணுல்கண்டவற்றையெல்லாம் தூதுவிடுகிறுர்; “ சக்ரவர்த்திதிருமகன் திருவவதரித்தபின்பு வாநரஜாதிவீறுபெற்றுற்போலே காணுமாழ்வார்கள் திருவவதரித்து திர்யக்ஜாதிவீறுபெற்றபடி ” என்றுபட்ட

ரருளிச்செய்வர். இனி யிவர்க்கு யாத்ருச்சிக ஸம்ஶ்லேஷமாவது - அநாதிகாலமிவரைத் தன்னோடே சேரவிடுகைக் கவஸரப்ரதீக்ஷனாய்ப்போந்தவனிவர்பக்கலிலே அப்ரதிஷேதமுண்டாவதொரு அவகாஶம்பெற்று, அவன் மயர்வறமதிநலமருளப்பெற்றவிது. இவர்க்கு விஶ்லேஷமாவது-அவன்கொடுத்தஜ்ஞாநம் பேற்றோடே தலைக்கட்டப்பெறாமை. தூதுவிடுகைக்குப்பற்றாசுதானேதென்னில்; தன்மேன்மையாலே யித்தலையில் தண்மைபாராதே வந்துகலந்தான், கிட்டினவாறே தோஷதர்ஶநத்தைப்பண்ணினான், பிரிந்தவளவிலே "இதுவன்றோ இருந்தபடி" என்றநாதரித்தான்; தோஷதர்ஶநம்பண்ணுமளவேயன்றிக்கே, தமக்கு அபராதஸஹத்வமென்றொரு குணமுண்டு நிரூபகமாயிருப்பதொன்று, அத்தையறிவிக்க வருமென்று அந்தஅபராதஸஹத்வம்பற்றாசாகத்தூதுவிடுகிறாள்.

---

## ஜீயர் அரும்பதம்.

அஞ்சிறையமடநாரை ப்ரவேஶம். ஸங்க்ரஹஸங்கதி (பாரதவத்ரையுமித்யாதி) தாமானதன்மை - புருஷபாவம். ஆற்றாமை - விரஹக்லேஶம். ரீதிபேதத்துக்கு த்ருஷ்டாந்தம் (அயமபர இத்யாதி) இதுமஹாபாஷ்யவாக்யம். கர்மகர்த்ருகரணநிரூபேண காரகமநேகவிதமிறே, அங்கே "அபரஃகாரகநியமஃ" என்று பூர்வகாரக நியமாபேக்ஷயா உத்தரகாரக நியமம் விலக்ஷணமென்று சொல்லிற்றிறே; அதுபோலேயென்றபடி.

ரீத்யந்தரமென்னுமதுக்கைசிஹ்யம் (முற்காலத்திலே யித்யாதி) விவக்ஷிதன் - வித்வான். தத்த்வபரமானவிதிலே காமுகவாக்யமென்று விப்ரதிபத்திபண்ணுகைக்கடியேதென்ன (நிதித்யாஸிதவ்ய இத்யாதி) ப்ருஹதாரண்யகேமைத்ரேயீப்ராஹ்மணே, "𑌆𑌤𑍍𑌮𑌾 𑌵𑌾 𑌅𑌰𑍇 𑌦𑍍𑌰𑌷𑍍𑌟𑌵𑍍𑌯𑌃 𑌶𑍍𑌰𑍋𑌤𑌵𑍍𑌯𑍋 𑌮𑌨𑍍𑌤𑌵𑍍𑌯𑍋 𑌨𑌿𑌦𑌿𑌧𑍍𑌯𑌾𑌸𑌿𑌤𑌵𑍍𑌯𑌃" (ஆத்மாவா அரே த்ரஷ்டவ்யஶ்ஶ்ரோதவ்யோ மந்தவ்யோ நிதித்யாஸிதவ்யஃ.) அரே, அயமாத்மா ஶ்ரோதவ்யோ மந்தவ்யோ நிதித்யாஸிதவ்யோ த்ரஷ்டவ்யஃ இத்யந்வயஃ. பக்திகார்யமான உக்தியை காமுகவாக்யரூபேண சொன்னது - புருஷன் புருஷனைக்கண்டு ஸ்நேஹிக்குமதிலும் "𑌕𑌾𑌮𑌮𑌷𑍍𑌟𑌗𑍁𑌣𑌂 𑌭𑌵𑍇𑌤𑍍" (காமமஷ்டகுணம்பவேத்) என்கிறபடியே ஸ்த்ரீக்கு புருஷவிஷயஸ்நேஹம் பள்ளமடையாகையாலே தாத்ருஶமான தம்முடைய வதிமாத்ரப்ராவண்யஸூசகமாகையாலும், குடஜிஹ்விகாந்யாயேநவிஷய ப்ரவணரான ஸம்ஸாரிகள் பரிக்ரஹித்துஜ்ஜீவிப்பர்களென்னுமத்தாலும்.

விஸ்தரஸங்கதி (அயர்ப்பிலனித்யாதி) ஆற்றாமையாலே சொல்லும்பாசுரமேதென்ன (அயர்ப்பிலனித்யாதி) என்னுதல். (அத்தோடே) பிள்ளான்பணித்த மாநஸாநுபவத்தோடே. (இத்தோடே) இத்திருவாய்மொழியோடே. (போரச்சேர்ந்திருக்கும்) மாநஸாநுபவமாகையாலே மாநஸமாகவநுபவித்து பாஹ்யஸம்ஶ்லேஷாபேக்ஷபிறந்து ததலாபத்தாலே தாமானதன்மையழிந்து என்றத்யாஹரித்து நிர்வஹிக்கவேண்டும் பிள்ளான் நிர்வாஹத்தைப் பற்றப் போரச்சேருமென்

றபடி. “ தழுவுவன்வணங்குவன் ” இத்யாதிக்கு வர்த்தமாநார்த்தங் கொள்ளுகிற துமமுக்யமிறே.

போரச் சேர்ந்திருக்குமென்றத்தைக் காட்டுகிறார் ( திருவுலகளந்தருளின வித்யாதி ) துணுக்கென்று - திடுக்கிட்டு. பயப்பட்டு. கலங்கிஎன்றபடி. “ ஆத்தோ வாயதிவாத்ருப்தஃ பரேஷாம்ஶரணாகதஃ । அரிஃப்ராணாந்பரித்யஜ்ய ரக்ஷிதவ்யஃக்ருதாத்மநா ” ( ஆத்தோவாயதிவாத்ருப்தஃ பரேஷாம்ஶரணாகதஃ । அரிஃப்ராணாந்பரித்யஜ்யரக்ஷிதவ்யஃக்ருதாத்மநா ) பரேஷாம் - நிர்த்தாரணேஷஷ்டீ. பெருமாள்திருவுள்ளத்தாலே யார்த்தனாகவுமாம், முதலிகள் திருவுள்ளத்தாலே த்ருப்தனாகவுமாமென்றபடி. ( அநுபவித்தவிவர்க்கு ) அநுபவித்து அநுபவவிஶேஷத்தை யாசைப்பட்டவிவர்க்கு. இழவு - விஶ்லேஷவ்யஸநம். ஆமம் - அஜீர்த்தி. ( பேரநின்றான் ) போனான். இவன்பிஷக்கோவென்ன ( மருத்துவனித்யாதி ) ஆசார்யாதிரூபேண ஸம்ஸார பிஷக்காய்நின்ற, நீலமணிபோன்ற நிறத்தை யுடையவன்.

அநந்தரம் - பேரநின்றவநந்தரம். ( கலங்கினார் ) கலங்கிப்பிராட்டிதஶையை ப்ராப்தராய்த் தூதுவிடுகிறார். “ ஹந்யமாநா நவிவ்யதுஃ । அபிபூயமாநா வ்யஸநைஃ ” ( ஹந்யமாநாநவிவ்யதுஃ । அபிபூயமாநாவ்யஸநைஃ ) என்றிருக்கவேண்டாவோ, ஜ்ஞாநாதிகரான விவர் கலங்கலாமோவென்ன ( மயர்வறவித்யாதி ) பக்திரூபாபந்நஜ்ஞாநத்தை யுடையராகையாலே கலங்கினாரென்றபடி. பக்திமாத்ரமன்றிக்கே தத்வைலக்ஷண்யமும் கலங்கப்பண்ணுமென்கிறார் ( அவன்குணித்யாதி ) அகிஞ்சித்கரமாகை - “ தத்தஸ்ய ஸத்ருஶம்பவேத் ” ( தத்தஸ்ய ஸத்ருஶம்பவேத் ) என்றிருக்கும்படி பண்ணுமை. இப்படி ஜ்ஞாநாதிகராய்க் கலங்கினபேருண்டோவென்ன ( தத்தஸ்யேத்யாதி ) ஸுந்தரகாண்டே ஏகோநசத்வாரிம்ஶே ஹநூமந்தம் ப்ரதிஸீதா, “ ஶரைஸ்து ஸங்குலாம்க்ருத்வா லங்காம்பரபலார்த்தநஃ । மாம்நயேத்யதிகாகுத்ஸ்தஸ் தத்தஸ்ய ஸத்ருஶம்பவேத். ” ( ஶராஸ்துஸங்குலாம்க்ருத்வாலங்காம்பரபலார்த்தநஃ । மாம்நயேத்யதிகாகுத்ஸ்த்தஸ்தத்தஸ்யஸத்ருஶம்பவேத். ) தத்ராவாஷ்டாவிம்ஶே, “ இதிவதேவீபஹுதாவிலப்ய ஸீதாதவேண்யுத்க்ரதநம் க்ருஹீத்வா । உத்பத்ய வேண்யுத்க்ரதநேந ஶீக்ரமஹம் கமிஷ்யாமி யமஸ்யமூலம் ” ( இதிவதேவீபஹுதாவிலப்யஸீதாதவேண்யுத்க்ரதநம்க்ருஹீத்வா । உத்பத்யவேண்யுத்க்ரதநேநஶீக்ரமஹம்கமிஷ்யாமியமஸ்யமூலம். ) “ தத்தஸ்ய ஸத்ருஶம்பவேத் ” ( தத்தஸ்யஸத்ருஶம்பவேத் ) என்றது - வேண்யுத்க்ரதநாநந்தரத்திலேயாகிலும், வேண்யுத்க்ரதநாத்பூர்வமும் இந்தநினைவுண்டாகலா மாகையாலே விரோதமில்லை.

கலங்கி, பக்ஷிகளைத் தூதுவிட்டதுக்கு த்ருஷ்டாந்தத்வயம் ( ஹம்ஸேத்யாதி ) “ க்ஷிப்ரம்ராமாய ஶம்ஸத்வம் ஸீதாம்ஹரதி ராவணஃ ” ( க்ஷிப்ரம்ராமாயஶம்ஸத்வம் ஸீதாம்ஹரதிராவணஃ ) இத்யுத்தரார்த்தம். இதமாரண்யகாண்டே கோதாவரீம்ப்ரதிராவணநீதஸீதாவாக்யம். தத்ரைவஸீதா வியோகஸந்தப்தோராமஃ. ( அஶோகேத்யாதி ) “ த்வந்நாமாநம்குரு க்ஷிப்ரம் ப்ரியாஸந்தர்ஶநேந மாம் ” ( த்வந்நாமாநம்குருக்ஷிப்ரம் ப்ரியாஸந்தர்ஶநேநமாம் ) இத்யுத்தரார்த்த

ம். ஹம்ஸேத்யாதிக்கு - நதிக்கு பக்ஷிகளைக்கொண்டு தேஶாந்தரத்தேயாகிலு மறிவிப்பிக்கைக்கு ஶக்தியுண்டென்றிருக்கிறுளாயிற்று கலக்கத்தாலேயென்றுகருத்து அஶோகேத்யாதிக்கு - ஒருவனஶோகனு யிருக்கைக்குபலம் - பிறர் ஶோகத்தைப் போக்குகையென்றிறே தாமிருப்பதென்று கருத்து.

பகவத்விஶ்லேஷகார்யங்கள் பிராட்டிமாருடைய தர்மமிறே, அதிவர்க்குக் கூடும்படி யெங்ஙனேயென்னு மாக்ஷேபத்தை யநுவதித்துபரிஹரிக்கிறுர் ( பிராட்டிமார்தஶையித்யாதி ) "அநந்யதைவத்வம்" ( அநந்யதைவத்வம் ) இத்யாதியாலே அநந்யார்ஹஶேஷத்வமும், "தத்தஸ்ய ஸத்ருஶம்பவேத்" ( தத்தஸ்ய ஸத்ருஶம்பவேத் ) "தபஸ்சாநுபாலநாத்" ( தபஸ்சாநுபாலநாத் ) இத்யாதியாலே அநந்யஶரணத்வமும், "நைஷாபஶ்யதி" ( நைஷாபஶ்யதி ) "தந்யாঃபஶ்யந்திமேநாதம்" ( தந்யாঃபஶ்யந்திமேநாதம் ) இத்யாதியாலே ததேகபோகத்வமும், "யஸ்த்வயாஸஹஸஸ்வர்க்கঃ" ( யஸ்த்வயாஸஹஸஸ்வர்க்கঃ ) "நசஸீதா" ( நசஸீதா ) இத்யாதியாலே அந்வயத்தில் தரிப்பும் வ்யதிரேகத்திலேதரியாமையும், "அநந்யாராகவேணாஹம்" ( அநந்யாராகவேணாஹம் ) இத்யாதியாலே ததேகநிர்வாஹ்யத்வமும் பிராட்டிக்குக் கண்டுகொள்வது. சேதநர்க்கு மிந்த குணஷட்கம் திருமந்த்ரத்தாலே கண்டுகொள்வது.

ஆனாலும் கிஞ்சித்ஸாத்ருஶ்யங்கொண்டிப்படி சொல்லலாமோவென்கிறஶங்கையை யநுவதித்து, ஸௌஸாத்ருஶ்யத்தாலே சொல்லலாமென்று பரிஹரிக்கிறுர் ( ஆனலித்யாதி ) பிராட்டி தானுகப்பேசுகிறதென்றது - "கிளிமொழியாளலற்றியசொல்" என்றத்தைப் பற்ற. ( வையமித்யாதி ) பூமியெல்லா மளந்துகொண்ட விஸ்த்ருதமான தாமரைபோன்ற திருவடிகளுக்கே. அங்கேத்தா னெப்படியென்ன ( முற்றுவமையிதி ) முற்றுவமை - ஸௌஸாத்ருஶ்யம். பூர்ணோபமையென்றபடி.

புருஷராகையாலே பும்ஸ்த்வம் பின்னுட்டாதோவென்ன ( ராஜர்ஷியித்யாதி ) விஶ்வாமித்ரனுக்கு என்றுகூட்டுவது. ஸ்த்ரீத்வம் ஸித்தமானுலன்றே! தத்விஶேஷமான பிராட்டி தஶைகூடுவது, இவர்க்கு ஸ்த்ரீத்வதஶாப்ராப்திஹேதுவேதென்ன ( எதிர்த்தலையித்யாதி ) "ஸர்வவாஸநாதேவோஸௌஸாக்ஷாத்புருஷ உச்யதே । ஸ்த்ரீப்ராயமிதரத்ஸர்வம்ஜகத்ப்ரஹ்மபுரஸ்ஸரம்" ( ஸர்வவாஸநாதேவோஸௌஸாக்ஷாத்புருஷஉச்யதே। ஸ்த்ரீப்ராயமிதரத்ஸர்வம்ஜகத்ப்ரஹ்மபுரஸ்ஸரம் ) "ஸ்வாமித்வாத்மஶேஷித்வ பும்ஸ்த்வாத்யாஸ்ஸ்வாமிநோகுணாঃ । ஸ்வேப்யோதாஸத்வதேஹத்வஶேஷத்வஸ்த்ரீத்வதாயிநঃ" ( ஸ்வாமித்வாத்மத்வஶேஷித்வபும்ஸ்த்வாத்யாஸ்ஸ்வாமிநோகுணாঃ | ஸ்வேப்யோதாஸத்வதேஹத்வஶேஷத்வஸ்த்ரீத்வதாயிநঃ ) என்னக்கடவதிறே. "பாஞ்சால்யாঃபத்மபத்ராக்ஷ்யா ஸ்நாயந்த்யாஜகநம்கநம் । யாஸ்த்ரியோத்ருஷ்டவத்யஸ்தாঃபும்பாவம்மநஸாயயுঃ" (பாஞ்சால்யாঃபத்மபத்ராக்ஷ்யா ஸ்நாயந்த்யாஜகநம்கநம் | யாஸ்த்ரியோத்ருஷ்டவத்யஸ்தாঃபும்பாவம்மநஸாயயுঃ ) என்று - த்ரௌபதியினு

டைய ப்ராக்ருதஶரீர மவஸ்த்தாந்தரத்தை யுண்டாக்கினல் பும்ஸாம்த்ருஷ்டிசித்தாபஹாரியாய ப்ராக்ருதமானவடிவழகுபண்ண, சொல்லவேண்டாவிறே. இதிபாவ꞉. பெண்ணுடையுடுக்கும்படி - ஸ்த்ரீவஸ்த்ரதாரணம்பண்ணும்படி.

அந்த꞉புரத்தில்வர்த்திக்கிற விப்பிராட்டிக்குத் தூதுவிடுகைக்குபக்ஷிகளுண்டோவென்ன, தமிழர்ஸமாதியாலே கூடுமென்கிறார் (கூடுமிடமித்யாதி) அதாவது - நாயகவிஶ்லேஷஜநித ஶோகாவிஷ்ட நாயிகாஸ்த்தாநம் ஸமுத்ர ப்ராந்தமென்கிற தமிழர்ஸமாதியாலே, தானிருந்த வித்தேஶத்தில் வர்த்திக்கிற பக்ஷிகளைத் தூதுவிடுகிறாளென்றபடி. இதுக்கு ஸம்வாதமாக "போக்கெல்லாம்பாலைபுணர்தனறுங்குறிஞ்சி, யாக்கஞ்சேர்ந்தூடலணிமருதம் - நோக்குங்கா, லில்லிருக்குமுல்லையிரங்கனறுநெய்தல், சொல்லிருக்குமைம்பாற்றுறை." இத்யாதியைத் திருவுள்ளம்பற்றி ப்ரஸங்காத் ஸ்த்தலாந்தரங்களையும் நிரூபிக்கிறார் (கூடுமிடங்குறிஞ்சியித்யாதியாலே) போக்கெல்லாமென்றது-புணர்ந்துடன்போக்கென்றும் தனிப்போக்கென்றுமுண்டாகையைப்பற்ற. "கொடுங்கார்சிலையர்" என்கிறபாட்டில் தனிப்போக்கையும், "நானிலம்வாய்க்கொண்டு" என்கிற பாட்டிலே புணர்ந்துடன்போக்கையு மருளிச்செய்தாரிறே. காடுசார்ந்தநிலம் - முல்லை. நாடுசார்ந்தநிலம்-மருதம். மலைச்சார்வு - குறிஞ்சி. கடற்சார்வு - நெய்தல். நீரின்றிவேனில்தெறுநிலம் - பாலை. வேனில் - வெய்யில். தெறு - ஸம்ஹரிக்கிற. ஊடல் - ப்ரணயகலஹம். நெய்தல்நிலத்திலேயாகையாலே யென்றதுக்கு - "கண்ணுற்கண்டவற்றையெல்லாம்" என்றத்தோடே யந்வயம்.

இவளுடையவிஶ்லேஷந்தான் ஸம்ஶ்லேஷபூர்வகமாயல்ல திராதமயாலே ஸம்ஶ்லேஷம் ப்ரவ்ருத்தமானபடியென்னென்ன, காந்தர்வவிவாஹ ப்ரக்ரியையாலே யருளிச்செய்கிறார் (பிராட்டிதானுமித்யாதி) உத்யாநமென்றது - "புன்னையம்பொழில்சூழ்" என்றத்தைப்பற்ற. ஏவுண்ட - எய்யப்பட்ட. தோழிமாரைத்தூதுவிட்டாலோவென்ன (எம்பின்முன்னித்யாதி) ஈடுபடுகிறவெனக்குமுன்னே "இவளுக்கவனுதவப்பெறுகிறதில்லை" என்றுஅவன் பொருட்டீடுபடா நிற்பர்கள். செய்யவற்று - செய்யஸமர்த்தம். பக்ஷபாதமென்கிறது - சாடுபக்ஷாப்யாம்கமநம். "வத்ரீமதள" (பத்லகதௌ) இதிஹிதாத꞉. தன்னுற்றுமையறிவிக்கலாம்படி தன்பரிஸரத்திலே வர்த்திக்கிறபக்ஷபாதம். பற்றுசாக-அவலம்பநமாக. பிராட்டியைப்போலே யொன்றைத்தூதுவிட்டால் அமையாதோவென்ன (ராவணமாயையித்யாதி)

ரஸோக்தி (சக்ரவர்த்தியித்யாதி).

யாத்ருச்சிகஸம்ஶ்லேஷத்துக்கு ஸ்வாபதேஶமருளிச்செய்கிறார் (இனியிவர்க்கித்யாதி) ஸ்வாபதேஶப்ரஸங்கத்திலே "பிராட்டிதானும்" இத்யாதிக்கு - ஸ்வாபதேஶம் - இச்சேதநன் "தூர்த்தரோடிசைந்தகாலம்" என்கிறபடியே தூர்த்தரோடேகூட "பெய்தகாவு" என்கிறலீலாவிபூதியிலே அற்பசாரங்களவைசுவைத்தகன்றவளவிலே, ஸர்வேஶ்வரன் "தன்னேராயிரம்பிள்ளைகள்" என்கிறபடியேஸாம்யாபந்நரான நித்யஸூரிகளும்தானுமாக "காட்டைநாடித்தேனுகனும்" என்கிறபடியேவிரோதி நிரஸநார்த்தமாக லீலாவிபூதியிலே யவதரித்து இவர்பக்கல்அத்வேஷமாகிற வவகாஶம்பெற்றவாறே யங்கீகரிக்கையென்று.

பற்றுசேதென்கிறஸங்கைக்குப்பரிஹாரம் அபராதஸஹத்வமென்னப்பார்த்து.பிரிகைக்கு ஹேதுவபராதமென்றுவிவக்ஷித்து, அபராதமுண்டானல் முன்புகலப்பானென்னென்கிற ஸங்கையிலே யருளிச்செய்கிருர் ( தன்மேன்மையாலே யித்யாதி ) மேன்மை - ஸ்வாதந்த்ர்யம். கலந்தவன் பிரிவானென்னென்ன ( கிட்டின வித்யாதி ) தோஷதர்ஸநத்தைப்பண்ணி - பிரிந்தானென்று கூட்டுவது. “ என்பிழைத்தாள் - தகவினுக்கு ” என்றத்தைப்பற்ற அபராதஸஹத்வமென்றது.........*



## நான்காந்திருவாய்மொழி.

## முதற்பாட்டு.

அஞ்சிறையமட நாராயளியத்தாய்நீயுநின்
னஞ்சிறைபசேவலுமாயாவாவென்றெனக்கருளி
வெஞ்சிறைப்புள்ளுயர்த்தார்க்கென்விடு தூதாய்ச்சென்றக்கால்
வன்சிறையிலவன்வைக்கில்வைப்புண்டாலென்செய்யுமோ.

## ஆறுயிரப்படி.

எம்பெருமானேடுகலந்து பிரிந்தாளொருபிராட்டி, தன்முன்னே ஸம்ஶ்லேஷித்து வர்த்திக்கிற நாரைகளைக் கண்டு, தான் வ்யஸநாதிஸயத்தாலே யறிவிழந்திருக்கையால், “ தன்வார்த்தைகளையறியா ” என்னுமிடத்தை விவேகிக்கமாட்டாதே, அவற்றினுடைய ஸம்ஶ்லேஷ ஸ்வபாவத்தைக் காண்கையாலே தன்னேபாதி யளவுடையவராகக்கொண்டு, அவற்றைக்குறித்து, தன்னளவிலே வார்த்தைசொல்லுகிறவிடத்திற் சேவலைக்குறித்துச் சொல்லுகை யிடல்லாமையாலே, அதைக்குறித்துச் சொல்லுகிற வார்த்தையையு மௌசித்யத்தாலே பேடையைநோக்கி ; நினைத்தவிடத்திலே நினைத்தபோதே செல்லுகைக்கீடான உபகரணங்களையுடையையாய், ஸம்ஶ்லேஷத்தையே தாரகமாகவுடையையாய், துஃகாஸஹிஷ்ணுவுமாயிருந்தநீ, என்பக்கலிலே க்ருபைபண்ணி, ஆஶ்ரிதருடைய ஸமஸ்த துஃகநிரஸநஸ்வபாவனுன பெரியதிருவடியைதிவ்யவாஹநமாகவுடைய வெம்பெருமானுக்கென்விடு தூதாய்ச்சென் றென்திறத்தைச் சொல்லவேணுமென்றபேக்ஷித்து, பின்னையுமவை போகாதிருந்தவாறே, சொன்னவார்த்தையை யவனங்கீகரியாதொழியிற் செய்வதென்னென்றுபோகாதிருந்தனவாகக் கொண்டு, இப்படி ஆஶ்ரித வத்ஸலனுனவ னங்கீகரியாதொழியுமோ, அவனென்வார்த்தையை யங்கீகரியாதொழிகையாகிறவன் சிறையிலவனுங்களை வைக்கில் அத்தனையுமெனக்காகப் பட்டாலாகாதோ வென்றே செய்யவேணுமென்று சொல்லுகிருள்.......................*

## பன்னீராயிரப்படி.

முதற்பாட்டில், தன் புறச்சோலையில் தடாகத்திலே தன் சேவலோடேயிருக்கிற நாரையைக்கண்டு கருடத்வஜனுக்குத் தூதாக வபேக்ஷிக்கிறாள்.

அளியத்தாய்-எனக்களிக்கத்தகுதியான ஸ்வபாவத்தையுடையையாய். அஞ்சிறைய - நான்சொன்னகாரியத்தில் செல்லுகைக்கீடான அழகியசிறகையும். மடநாராய் - சேவலோடுண்டான சேர்த்தியாலே வந்ததுவட்சியாலே மடப்பத்தையுமுடையநாராய். நீயும் - சேவலையொழியச் செல்லாத நீயும். நின்னஞ்சிறையசேவலுமாய் - உன்னோட்டைச்சேர்த்தியாலே புதுக்கணித்த சிறகையுடைய சேவலுமாய். ஆவாவென்று - என்தனிமைகண்டு, ஐயோ! ஐயோ! என்று. எனக்கருளி- எனக்கு க்ருபையைப்பண்ணி. வெஞ்சிறை - விரோதிவிஷயத்தில் வெவ்வியசிறகையுடைய. புள் - பெரியதிருவடியை. உயர்த்தார்க்கு - ரக்ஷணத்துக்குக் கொடியாக வெடுத்தவருக்கு. என்விடுதூதாய்ச் சென்றக்கால் - என்னாலே விடப்பட்டதூதாய்ச் சென்றக்கால். உங்கள்முகம்பார்த்து வார்த்தைகேளாமையாகிற வன்சிறையில்- வலியசிறையிலே. அவன்வைக்கில் - ப்ரணயியான வவன்றானேவைக்கில். வைப்புண்டால் - அதுக்கிசைந்திருந்தால். என்செய்யும் - அவ்விருப்பென்னகுற்றஞ்செய்யும். ஓ என்கிறஅசை - கூடாதது கூடுமோவென்றபடி.

பிறர்க்காகச் சிறையிருக்கை - பெரியகோன்மை யென்று கருத்து. புள்ளாலே யுயர்த்தப்பட்டவ ரென்னவுமாம். இவ்விடத்தில் நாரைதொடக்கமானவற்றைத்தூதாகச்சொல்லிற்று-கடகருடைய கார்யதேஶிகத்வ ஸூசநார்த்தமாக. சிறகைக்கொண்டாடிற்று - ஜ்ஞாநப்ரேமரூப பக்ஷத்வயாந்வயத்தாலே. பேடும்சேவலுமானசேர்த்தி - கடகருடைய பரஸ்பர ஶேஷஶேஷிபாவஸூசகம்......................*

---

## ஈடு - முதற்பாட்டு.

தன்பரிஸரத்திலே வர்த்திப்பதொரு நாரையைப்பார்த்து, "என்றும் சேவலைக் கார்யங்கொள்ளுவார் பேடையை முன்னாகக் காரியங்கொள்ளவேணும்" என்றிருக்கும் தம்வாஸனையாலே பேடையை முன்னிட்டுச்சேவலைப்பற்றி, நீயென்தசையை யறிவித் தென்னையுமவனையுஞ் சேர்க்கவேணுமென்கிறாள்.

(அஞ்சிறைய) ப்ரஜை, தாயினுடைய வவயவங்களெல்லாங்கிடக்க, முலையிலே வாய்வைக்குமாபோலே கமந ஸாதநமான சிறகிலேயாயிற்று முற்படக்கண்வைத்தது. நீர்பாய்ந்த பயிர்போலே பரஸ்பரஸம்ஶ்லேஷத்தால் பிறந்த ஹர்ஷம் வடிவிலே தொடைகொள்ளலாம்படியிரா நின்றது. சிறையென்று - சிறகு. ஆசார்யன் ஜ்ஞாநத்தையநுமித்து ஶிஷ்யனுபஸத்தி பண்ணுமாபோலே சிறகிலே கண்வைக்கிறாள். (மட) எவிக் கார்யங்கொள்ளலாம்படி பவ்யதைதோற்றவிருந்தது. ஸம்ஶ்லேஷத்

தாலே துவண்டு தூதுபோகைக்கு யோக்யமாம்படியிருக்கை. நாண், மடம், அச்சமென்று - ஸ்த்ரீத்வமாய், பிரிவில்வ்யஸநமறியும் தன்னினமான பேடையைப்பார்த்துச் சொல்லுகிருளென்றுமாம். ( நாராய் ) " அம்மே !" என்னுமாபோலே.

( அளியத்தாய் ) அவன் பொகட்டுப்போன ஸமயத்திலே ஆற்ருமையறிவிக்கலாம்படிவந்து முகங்காட்டின வுன்னநுக்ரஹஶீலதை யிருந்தபடியென். அளி - க்ருபை. க்ருபைபண்ணத்தக்காயென்றபடி. " வ ஊாதீரெஹநுமதாஸஜுதஃ " ( பம்பாதீரே ஹநுமதாஸங்கதஃ ) போலே, வழிபறிப்பார்கையிலே யகப்பட்டுநிற்கத் தாய்முகத்திலேவிழித்தாற்போலே. ( நீயும் ) " ஸஹாதஸ்ரூரணௌமாஸாதிவீஸ்ரவநநஃ। ஸீதாஊவாவ " ( ஸப்ராதுஶ்சரணௌகாடம்நிபீட்யரகுநந்தநஃ । ஸீதாமுவாச ) என்கிறபடியே - என்றும் சேவலைக்கார்யங்கொள்ளுவார் பேடையை முன்னிட்டுப்போலே காணும் கார்யங்கொள்வது. ( நின்னஞ்சிறையசேவலுமாய் ) பேடையையிட்டாயிற்று சேவலின்பக்கல் ப்ரதிபத்தி, " ஶ்ரிய:பதி " என்னுமாபோலே. ( நின்னஞ்சிறையசேவலுமாய் ) " பெண்ணணைந்தவடிவு " என்று தோற்றுநின்றதாயிற்று. அதிட்டவழக்கானநீயும், நீயிட்டவழக்கான சேவலுமாய் ( ஆவாவென்று ) ஐயோ ! ஐயோ ! என்று. மிதுநமாயிருக்கிறது - தன்னார்த்தி பரிஹரிக்கைக்கென்றிருக்கிருள். ( எனக்கு ) " ஶஹிவஶ்ரீராணி " ( ஏஹிபஶ்யஶரீராணி ) என்று விரஹந்தின்றதன் வடிவைக்காட்டுகிருள். அவனோடேகலந்து பிரிந்து, " கண்ணாலேகாணப் பெறுவதுகாண் " என்னுமபேக்ஷையோடே யிருக்கிறவெனக்கு. ( அருளி ) இரப்புக்குச் செய்ததாகையன்றிக்கே யுங்கள் பேறுகவருளி. தயைபண்ணுகைக்கத்தலை குறைவற்றாற்போலேயன்றே ! தயாவிஷயமான வித்தலைகுறைவற்றபடி. பகவத்விஷயத்திலுபகரிப்பார் ப்ரத்யுபகாரத்துக்கல்ல வுபகரிப்பது, தங்கள்க்ருபையாலேயாயிற்று ; உபயவிபூதியுக்தனை யவர்களுபகரித்தால், அவனுக்கு ஸத்ருஶமாக வுபகரிக்கலாவதில்லையே ! இவனுக்கு. " விக்ராந்தஸ்த்வம்ஸமர்த்தஸ்த்வம்ப்ராஜ்ஞஸ்த்வம்வாநரோத்தம " ( விக்ராந்தஸ்த்வம்ஸமர்த்தஸ்த்வம்ப்ராஜ்ஞஸ்த்வம்வாநரோத்தம ) என்றாற்போலேயிறே யிவளிவற்றை ஶ்லாகித்தது.

எங்களை யிங்ஙன் கொண்டாடுகிறதென், உன்தலையைக் கண்டு பொகட்டுப்போனவ னெங்கள் வார்த்தைகேட்கப் புகாநின்றானோ ! இனித்தான் " நிரஞ்ஜநஃபரமம்ஸாம்யமுபைதி " ( நிரஞ்ஜநஃபரமம்ஸாம்யமுபைதி ) என்கிறபடியே அங்குள்ளார் பரமஸாம்யாபந்நராயன்றோ விருப்பது, நாங்களவனுக்கு மவர்களுக்கும் வாசியறியும்படி யென்னென்ற

ன்றே ! நாங்களிருக்கிறதென் றவற்றுக்குக் கருத்தாக மேல் வார்த்தை சொல்லுகிறாள் ( வெஞ்சிறைப்புள்ளுயர்த்தார்க்கு ) அவர்கள் பரமஸாம்யாபந்நராயிருக்கையாலே தனக்கு வ்யாவர்த்தக விசேஷணமாகப் பெரியதிருவடியை த்வஜமாகவுடையனா யிருக்கும். விரோதியைப் போக்கிக் கொண்டுவருகைக்கு அங்கேநமக்காளுண்டென்கிறாளாதல் ; நிர்த்தயமாகப் பிரித்துக்கொண்டுபோகையாலே “ க்ரூர꞉க்ரூரஹ்ருதய꞉ ” ( க்ரூரஃக்ரூரஹ்ருதயஃ ) என்னுமாபோலே சொல்லுகிறாளாதல். ( புள்ளுயர்த்தார்க்கு ) புள்ளாலே வஹிக்கப்பட்டவ ரென்னுதல், புள்ளை த்வஜமாகவுடையவரென்னுதல். ( என்விடுதூதாய் ) அவனுள்வரவிட விருக்கக்கடவனானன்றே ! விடுகிறேன். ( விடு ) “ க்ரியதாம் ” ( க்ரியதாம் ) என்கிறபடியே நானேவவன்றே நீங்கள் போகிறது. பெருமிடுக்கரான பாண்டவர்கள் க்ருஷ்ணனைத் தூதுவிட்டாற்போலேயோ !, அபலையாயத்யார்த்தையான நானேவவன்றே போகிறது. பரார்த்தமாகத் தூது போகை கிடைப்பதொன்றே. ( சென்றக்கால் ) எனக்குமுன்னே யுங்களுக்குத்தேஶ்யமன்றே ஸித்திக்கப்புகுகிறது. உங்கள்போக்கடிக்கழஞ்சுபெறுதோ !.

( வன்சிறையில் ) இவள்பாடுநின்றுஞ் சென்றவற்றைச் சிறையிட்டுவைக்கிறானன்றே, இவர்களுக்குமுகங்கொடாதே அந்யபரனுகையிறே- இவர்களைச் சிறையிட்டு வைக்கையாவது. ராஜபுத்ரர்களுக்கு ப்ராப்தகாலங்களிலே வெள்ளிலையிடாதபோது மாந்துவர்களிறே. ( என்விடுதூதாய்ச்சென்றக்கால் வன்சிறையிலவன்வைக்கில் ) நீங்களேதேனுமவனுக்குத்தூதுபோகிறிகளோ ! சிறைகட்டுதல், சிங்கவிளக்கெரித்தல், செய்யில்செய்வதென்னென்று கூசுகைக்கு, எனக்குத் தூதுபோனுரை “ பரிஷ்வங்கோ ஹநூமத꞉ ” ( பரிஷ்வங்கோஹநூமதஃ ) என்னுமாபோலே மார்பிலேயணைக்குங்காணுங்கோள். நானணைய வாசைப்படுகிற மார்வன்றோ ! உங்களுக்குப் பரிசிலாகப் புகுகிறது. ( அவன்வைக்கில் ) “ வ்யஸநேஷு மநுஷ்யாணாம் ” ( வ்யஸநேஷு மநுஷ்யாணாம் ) என்றிருக்குமவன்வைக்குமோ !, ஶிரஸாவஹியானோ!. ( வைப்புண்டாலென்செய்புமோ ) அதுபொல்லாதோ ! கிடைக்குமாகில். பரார்த்தமாகச்சிறையிருக்கக்கிடைப்பதொன்றே !. ராவணன் தேவஸ்த்ரீகளைச் சிறையிட்டுவைக்கத் தானவர்கள்காலில் விலங்கைத் தன்காலிலேகோத்துச் சிறைமீட்டவளிறே..... .....................................................*

---

ளைக் கண்டக்கால். "இப்பேர்யோகருடியோ! என்றிருந்தோம், மஹா வ்ருக்ஷத்தோபாதியோ!" என்றுகேளுங்கோள்.

(மல்குநீரித்யாதி) உன்செயல் பரார்த்தமா யிருந்ததீ!. பெருகாநின்றுள்ளநீரையுடைத்தான, நீர்நிலமுண்டு - கொடித்தோட்டம். அதிலே (இரைதேர்) பேடையின்வாய்க் கடங்குவது தேடாநின்றது. "புள்ளுப்பிள்ளைக்கிரைதேடும்" என்னக்கடவதிறே. கயலுகளாநிற்கச்செய்தேயிறே பிள்ளைவாய்க்கடங்குவது தேடுகிறது.

(வண்சிறுகுருகே) குருகு - வண்டானம். கொய்யடிநாரை. வண்மை - அழகும், ஔதார்யமும். கைப்பட்ட விரைதன்மிடற்றுக்குக் கீழிழித்ததாயிற்று. நான்உபவாஸக்ருஶையாயிருக்க நினையாதிருக்குமவனைப்போலன்றே யுன்னௌதார்யம். (சிறுகுருகே) கார்யகாலத்தில் ப்ருஷதம்ஶகமாத்ரமாகவேண்டா. தூதுபோகைக்குச்சிரமஞ்செய்திருப்பாரைப்போலேயிருந்தது உன்வடிவில் லாகவம். (மல்குநீர்க்கண்ணேற்கு) இதுவுமொருநீர்நில மிருக்கிறபடிபாராய். இரைதேடுகிற வித்தைவிட்டு இத்தைப்பார்க்குமோவென்னில்; பார்க்குமிறே, இங்கேயும் சேலுங்கயலு முண்டாகையாலே. (மல்குநீர்க்கண்ணேற்கு) தனக்குநிரூபகம் கண்ண நீர்போலேகாணும். அதாவது- கலவியிலாநந்தாஶ்ரு, பிரிவில்ஶோகாஶ்ரு. (ஓர்வாசகங்கொண்டு) நேரேயுடம்பைத் தரவேணுமென்று சொல்லமாட்டாளே!;, "மறுப்பரோ" என்னும்பயத்தாலே. மறுக்கும்வார்த்தையு மமையுமித்தலைக்கு, அவர்பக்கலுள்ள தொன்றுமத்தனையேவேண்டுவது; "தாரான்தருமென்றி ரண்டத்திலொன்றதனை" என்றிறேமற்றும் பிராட்டிமார்பாசுரம், "மெய்ம்மைசொல்லி முகம்நோக்கி விடைதான்றருமேல்மிகநன்று" என்றும், "பாவிநீயென்றொன்றுசொல்லாய்" என்றுமிறேயிருப்பது. (அருளாயே) அவைதிர்யக்குகளாகவுமாம், தான்ஜநககுலஸுந்தரியாகவுமாம், உபகரிக்கிறது பகவத்விஷயமானவிங்ஙனல்லதுசொல்லவொண்ணாது. "நம்பியேறுதிருவுடையான் தாஸர்திருநாட்டுக்கு நடந்தார்" என்றுபட்டர்க்கு விண்ணப்பஞ்செய்ய, துணுக்கென்றெழுந்திருந்து, "அவர்ஸ்ரீவைஷ்ணவர்களுடன் பரிமாறும்படிக்கு, திருநாட்டுக் கெழுந்தருளின ரென்னவேணுங்காண்" என்றருளிச்செய்தார்.............................................................................*

---

## ஜீயர் அரும்பதம்.

ஐந்தாம்பாட்டு. (நல்கித்தானித்யாதி) கீழ்ப்பாட்டிலே, நான் முடிவதற்குமுன்னே வந்துதவவேணுமென்ற வளவிலே முகங்காட்டக் காணாமையாலே, நம்முடைய ஸத்தை போனாலும்போகிறது, தம்முடைய ஸத்தைக்கும் ஒருஹாநிவாராமல் பரிஹரிக்கச்சொல்லென்று போகவிடுகிறாளென்கிறார் (எங்களைவிடீரித்யா

திவாக்யத்ரயத்தாலே ) உன்னை ரக்ஷியாவிட்டால் நம்முடைய ஸத்தைக்கு ஹாநி யோவென்ன, ஸர்வரக்ஷகனான உனக்கொன்றுகுறைந்தாலு மும்முடைய ரக்ஷகத்வத்துக்கொருவைகல்யமில்லையோவென்கிறு ளென்றருளிச்செய்கிறார் ( தம்முடையநாராயணத்வமித்யாதி ) என்ஸத்தையி லபேக்ஷையில்லையேயாகிலும், தன் ஸத்தையி லபேக்ஷையில்லையோ! என்றிவ்வாக்யத்துக்குத் தாத்பர்யம். விடீர் - த்யஜத்வம். ஒறுவாய்ப்போகாமே - விகலமாய்ப்போகாமேயென்றபடி.

“ நல்கித்தான் காத்தளிக்கும் ” இத்யஸ்யார்த்த த்வயம். பொழிலேழும் தான் நல்கிக் காத்தளிக்குமிதி ப்ரதமஸ்யாந்வய: ; தான் - அபேக்ஷா நிரபேக்ஷதயா ஸ்வயம் ப்ரயோஜநத்வேந ஸ்வயமேவ. நல்கி - ஸ்நேஹம்க்ருத்வா. காத்து-அநிஷ்டநிவ்ருத்திம்க்ருத்வா. அளிக்கும் - ஸர்வாபீஷ்டப்ரதந்நாராயணமிதிப்ரதம:. பொழிலேழுங்காத்துத் தான் நல்கியளிக்குமிதி த்விதீயஸ்யாந்வய: ஸ்ருஷ்டேரப்யயபூர்வகத்வாத், காத்து-ஸம்ஹ்ருதிஸமயே “ தம:பரே தேவஏகீபவதி ” ( தம:பரேதேவஏகீபவதி ) இதிரக்ஷித்வா, ஸ்ருஷ்டிகாலே ஸதி அபேக்ஷா நிரபேக்ஷம் ஸ்வயமேவகரண களேபராணிதத்வா, அளிக்கும் - விரோதிநிவர்த்தந பூர்வக ஸர்வாபீஷ்ட ப்ரதந்நாராயணமிதி த்விதீயார்த்த:. அஸ்மிந்நர்த்தே, நல்குதல்-கொடுத்தல். ப்ரதமேர்த்தேசலதி ( விபூதிரக்ஷணமிதி ) “ நல்கி ” இத்யஸ்யார்த்தோயம். “ நல்கி ” என்கையாலே- ( பேறுதன்னதாகக்கிடீரொன்கிறார் ) நான்மல்குநீர்க்கண்ணளாயிருக்க, தான்பொழிலேழும் நல்கிக் காத்தளியாநின்றானித்யுத்தரஞ்சபராம்ருஶந், “ தான் ” இதிஸ்வரஸூசிதம் பாவமாஹ ( என்றதுக்குத் தன் பக்கலிதி ) பொழிலென்று - லோகங்களைச் சொல்லுகிறது. “ பொழிலேசோலையுமுலகமும்புகழ்வர் ” என்னக்கடவதிறே. புகழ்வர் - சொல்லுவர். கீழும்மேலுமொன்றாக நினைத்தென்றது - பூமிக்குக் கீழும் பூமியுமொன்றாய், மேலாறுமாகவேயென்றபடி. ( ஸப்தத்வீபவதியான ) “ ஜம்பூ:ப்லக்ஷ:ஶால்மலிஶ்ச குஶ:க்ரௌஞ்சஸ்ததைவச । ஶாகஶ்சபுஷ்கரஶ்சேதி ஸப்தத்வீபா:ப்ரகீர்த்திதா: ” ( ஜம்பூ:ப்லக்ஷஶ்ஶால்மலிஶ்சகுஶ:க்ரௌஞ்சஸ்ததைவச । ஶாகஶ்சபுஷ்கரஶ்சேதி ஸப்தத்வீபா:ப்ரகீர்த்திதா: ) யத்வா - ( கீழும்மேலுமொன்றாக ) நடுவிரண்டுலோகங்களையும்பிடித்து, அத்தை யிரண்டையும் அதோலோகவர்க்கத்துக்கு முபரிலோகவர்க்கத்துக்கும் பரிகணனையில் ப்ரதமமாகப்பண்ணிக்கொண்டு, ப்ராதாந்யேந ஒன்றாக்கி, வர்க்கத்வய த்விதீயங்களையும் ஒன்றாக்கி, இப்படியே முடியக்கண்டுகொள்வது. அதவா, கீழென்று - ஸப்தபாதாளங்கள். மேலென்று - பூமி. கீழும் மேலுமொன்றாக்குகையாவது - பூவிவரங்க ளாசையாலே பாதாளங்கள், அவற்றையும் பூமியிலே யந்தர்ப்பவிப்பித்து கணநம்பண்ணுகை. இது - ப்ரதமயோஜநாவிவரணம். இரண்டாமர்த்தத்தில், “ அவனிபொழில்பாற்கடலிடம்வையம்புவனிபுவிபதவிபூமிகுவலயம்ஞாலம்தலம்தரணிகாசினிபடிதாலந்தரணிதலம் ” என்றுநிகண்டு. “ நாரணனை ” என்றத்தைக் கடாக்ஷித்து பாவம் ( ஸ்வஶரீரேத்யாதி ) ரஸோக்திஶ்ச.

நல்குதல் - கொடுத்தலாய், அதாவது - கரணகளேபர ப்ரதாநமென்றபடியாய், அத்தால் - ஸ்ருஷ்டியைச் சொல்லுகிறதென் றர்த்தாந்தரமருளிச்செய்கிறார் ( நாமரூபவிபாகாநர்ஹமாயித்யாதி ) இந்தயோஜனைக்கு, “ தான் ” என்கிறபத

த்துக்கர்த்தமருளிச்செய்கிறார் ( ஆரிருந்தபேக்ஷிக்கவென்று ) " காத்து " என்கிற பதம் - ஸம்ஹாரவாசகமென்று விவக்ஷித்து, ஸம்ஹாரம் ரக்ஷணமாமோவென்கிற ஶங்கையிலே யருளிச்செய்கிறார் ( ஶக்த்யவஸ்த்த ப்ரபைபோலேயித்யாதி ) ஶக்த்யவஸ்த்தப்ரபை - பொடிமூடுதணல். " நல்கி " என்றதுக்கு - ஸ்நேஹமும், ஸ்ருஷ்டியுமென்றுசொன்ன யோஜநாத்வயாநுகுணமாக " காத்தளிக்கும் " என்கிறபுநருக்திக் கிரண்டர்த்த மருளிச்செய்கிறார் ( காத்துக்கொடுக்கு மித்யாதிவாக்யத்வயத்தாலே ) ஸ்நேஹபக்ஷத்தில், அநிஷ்டங்கள் வாராமல் காத்து, இஷ்டங்களைக்கொடுக்குமென்கிறது. ஸ்ருஷ்டிபக்ஷத்தில், ஸம்ஹ்ருதிஸமயத்திலே தன்மேலே யேறிட்டுக்கொண்டுநோக்கி, ஸ்த்திதிகாலத்திலே ரக்ஷிக்கும் - அநிஷ்ட நிவ்ருத்திபூர்வகமாக விஷ்டங்களைக் கொடுக்குமென்றபடி.

த்விதீயநிர்வாஹத்துக்கு பாவம் ( இல்லாதவன்றித்யாதி ) ப்ரதமநிர்வாஹத்துக்கு, " பொழிலேழுமளிக்கும் " என்றத்தைக்கடாக்ஷித்து பாவம் ( ஸ்வஜநேத்யாதி ) " வினையேற்கே " என்கிற வவதாரணார்த்தம் - இது. ததேவவிஶதீகரோதி ( நாட்டுக்கிட்டவித்யாதி ) நினைப்பு - ஸங்கல்பம். காத்தளிக்கும் - நாரணனை, யித்யந்வயঃ. " பொழிலேழும் காத்தளிக்கும் நாரணனை " என்றவநந்தரம், "வினையேற்கே " என்கையாலே, ஸர்வரக்ஷகனைப் பற்றிவைத்து என்னபிமதங்கிடையாதபடியான பாபத்தைப்பண்ணினே னென்னுமர்த்தந் தோற்றுகிற தென்னுமத்தை ஸநிதர்ஶநமாக வருளிச் செய்கிறார் ( கடலிலேயித்யாதி ) தார்ஷ்டாந்திகே, தண்ணீர் ஸ்த்தாநீயம் - ஜீவநம்.

ஸமாஸார்த்தத்தையும் தந்த்ரேண வருளிச்செய்கிறார் ( ஜீவஸமூஹேத்யாதி ) இவ்விடத்திலே ப்ரகரணாநுகுணமாக, ஸ்ருஷ்டிஸ்த்திதிஸம்ஹாரங்களையுஞ்சொல்லுகிறது. " நாராஜ்ஜாதாநிதத்வாநிநாராணி " ( நாராஜ்ஜாதாநிதத்வாநிநாராணி ) என்றத்தைப்பற்ற ஸ்ருஷ்டி யவனதீநமென்கிறது ; பஹுவ்ரீஹியாலே - ஸ்த்திதியவனதீநமென்கிறது. " நாராஜ்ஜாதாநி " ( நாராஜ்ஜாதாநி ) என்று காரணத்வஞ்சொன்னபோதே லயஸ்த்தாநமே யுபாதாநகாரணமாகையாலே ஸம்ஹார மவனதீநமென்கிறது. ( ஸ்த்தித்யாதீதி ) ஆதிஶப்தத்தாலே - ப்ரவ்ருத்திநிவ்ருத்திகளைச் சொல்லுகிறது. ப்ரகாரப்ரகாரிபாவகதநத்தால் பலிதம் ( இவற்றிலேயித்யாதி ) நாரணனைக் கண்டக்கால் " வினையேற்குநல்கலாகாதோ " என்று கேளுங்கோளென்று சொல்லுகிறதுக்கு பாவம் ( இப்பேரித்யாதி ) யோகரூடியாவது - அவயவார்த்தம் புஷ்கலமாய், அந்த ஶப்தந்தானே யவனுக்கஸாதாரணமானபேராயிருக்கை. ( மஹாவ்ருக்ஷத்தோபாதியோவென்று கேளுங்கோள் ) மஹாவ்ருக்ஷத்தோபாதி கேவலரூடியே யாம்பேர்மாத்ரமோவுள்ளதென்றுகேளுங்கோளென்றபடி. மஹாவ்ருக்ஷம் - கள்ளி.

" இரைதேர் " என்கிறதிலே நோக்காகபாவம் ( உன்செயலித்யாதி ) புனற்படப்பை - நீர்நிலம். அதாவது - கொடித்தோட்டம். ஜலஸம்ருத்தியாலே மத்ஸ்யஸம்ருத்தியும் ஸித்தமாயிருக்க, தேடுகிற தென்னென்ன ( பேடையினித்யாதி ) மத்ஸ்யங்களுண்டாயிருக்கச்செய்தே பரார்த்தமாக இரைதேடுகிறதுக்கு ப்ரமாணம் ( புள்ளித்யாதி ) " பள்ளச்செறுவிற்கயலுகளப் பழனக்கழனியதனுட்போய் " என்ற முந்தினபாதத்தையுங் கூட்டிக்கொண்டெடுத்த பாசுரத்துக்கர்த்தம் ( கயலித்யாதி ) பள்ளச்செறுவிலித்யாதி - தாழ்ந்த செய்களிலே கயல்களானவை துள்

ளாநிற்கச்செய்தே, நீர்நிலையையுடைய கழனிகளினுள்ளிட்டுப்போய், புள்ளானது பிள்ளைக்கிரைதேடாநிற்கும் இதிஸப்தார்த்த:. புள்ளு - கொக்குமுதலானபக்ஷி.

இதுக்கௌதார்யமேதென்ன ( கைப்பட்டவித்யாதி ) இதினுடையவௌதார்யத்தைச் சொல்லுகிறவளுடைய ஹார்த்தபாவம் ( நாஜுபவாஸேத்யாதி ) "उपवासकृशाङ्गीनाम्" ( உபவாஸக்ருஶாங்கீநாம் ) என்னக்கடவதிறே. ( அவனைப்போலன்றே ) அவனைப்போலிருக்கும்படியன்றே. சிறுமைக்ருபாவம் ( கார்யகாலத்திலித்யாதி ) ஸுந்தரகாண்டே த்விதீயே "सूर्ये चास्तं गते रात्रौ देहं संक्षिप्य मारुतिः। पृषदंशकमात्रस्सन् बभूवाद्भुतदर्शनः" ( ஸூர்யேசாஸ்தங்கதேராத்ரௌதேஹம்ஸங்க்ஷிப்யமாருதி:। ப்ருஷதம்ஶகமாத்ரஸ்ஸந்பபூவாத்புததர்ஶந:) ப்ருஷதம்ஶக:-பூனை. சிரமஞ்செய்து-ஶ்ரமம்பண்ணி. அப்யாஸம்பண்ணி.

சேலுங்கயலுமென்றது - சாடு. "சேலேய்கண்ணியரும்," "கயலோடுமகண்கள்" என்றுசொல்லிற்றிறே. சேல் - மத்ஸ்யம். கயல் - அதிலவாந்தரபேதம். ( தனக்கித்யாதி ) தனக்கஸ்ருவேநிரூபகமென் றிருக்கிறுளென்றபடி. விவரணம் ( அதாவதித்யாதி )

ஓர்வாசகங்கொண்டருளாயே - அத்தலையிலதாக வொருவார்த்தைகொண்டு வந்தருளவேணும். ஓர்வாசகம் - அநுமதியாதல், நிஷேதமாதல். "ஓர்வாசகம்" என்றதுக்குபாவத்வயம் ( நேரேயுடம்பையித்யாதி வாக்யத்வயத்தாலே ) முந்தினபாவத்துக்கு, "வாசகம்" என்றதிலேநோக்கு. இரண்டாவதுக்கு, "ஓர்" என்றதிலேநோக்கு. நேரே - ஸாக்ஷாத். மறுக்கும் - நிஷேதிக்கும்.

மறுக்கும்வார்த்தை யுத்தேஶ்யமென்றதுக்கு ப்ரமாணத்ரயம் ( தாரானித்யாதி ) தரிலுமாம், தாராதொழியிலுமாம், இரண்டிலொன்றமையும் நமக்கு. அதாவது - தந்தானுகில் அத்தாலேதரிக்கிறேம், இல்லையாகில் முடிந்து பிழைக்கிறேமென்றபடி. ( மெய்ம்மை இத்யாதி ) ஒருநாள் மெய்சொல்லியென் முகம்பார்த்து, "எனக்குநீவேண்டாபோ" என்று நம்போக்கை யநுமதி பண்ணு மாகில் மிகவும் நல்லது. ( பாவிநீயித்யாதி ) நான்காணும்படி முன்னேவந்து, "பாவிநாண்" என்றுஒருவார்த்தை சொல்லுகிறிலே.

திர்யக்கை "அருளாய்" என்கிறதென்னென்ன ( அவையித்யாதி ) இதுக்கு ஸம்வாதமாக வோராதிஹ்யம் ( நம்பியித்யாதி ) ( ஸ்ரீவைஷ்ணவர்களுடன் பரிமாறும்படிக்கு ) ஸ்ரீவைஷ்ணவர்களிடத்திலே யுத்தேஶ்யதா ப்ரதிபத்திபண்ணி, தம்முடைய தாழ்ச்சி தோற்றவிருந்தபடிக்கு.

மல்குநீர்புனல் படப்பை யிரைதேர்வண் சிறுகுருகே, பொழிலேழுந்தான் நல்கிக் காத்தளிக்கும் நாரணனைக்கண்டக்கால், வினையேற்கே நல்கத்தானுகாதோ வென்று அவனுக்குச்சொல்லி, அவனதாக மல்குநீர் கண்ணேற்கோர் வாசகங்கொண்டருளாய், இத்யந்வய:. வினையேற்கே நல்கத்தானுகாதோ - வினையேனுன வெனக்கேயோ ஸ்நேஹித்து ரக்ஷிக்கத்தானுகாதென்றபடி. நல்கத்தானென்று - முழுச்சொல்லு. யத்வா, வினையேனுன வெனக்கேயோ தான் நல்கலாகா தென்னுதல். தேர்கை - தேடுகை.........................................................................*

## ஆறும்பாட்டு.

அருளாதநீரருளியவராவிதுவராமு
னருளாழிப்புட்கடவீரவர்வீதியொருநாளென்
றருளாழியம்மானைக்கண்டக்காலிதுசொல்லி
யருளாழிவரிவண்டேயாமுமென்பிழைத்தோமே.

## ஆறாயிரப்படி.

(அருளாதநீரருளி) எல்லாருடைய பிழைகளையும் பொறுத்து எல்லாரையும் ரக்ஷிக்கக்கடவோமாகிலு மத்யந்த விஸத்ருஸையான வவளுடைய பிழைகளைப்பொறுத்து, அவளோடே கலந்து பரிமாறும் பரிமாற்றத்தாலேவரும் காருண்யாதிகுணங்களும் வேண்டாவென்றிருந்தானாகி லவனுக்குச் சொல்லுவதென்னென்னில்.

அவளோடு கலந்து பரிமாறுகை திருவுள்ளமன்றாகிலும், உம்முடைய க்ருபைக்கும் ஸர்வேஶ்வரத்வத்துக்கும் தாழ்வுவாராமே யவளுமுஜ்ஜீவிக்கலாம்படி யவள்பக்கலிலே க்ருபைபண்ணி, அவள் முடிவதற்கு முன்னே பரமகாருணிகனான பெரியதிருவடிமேலே யேறியருளி யாஶ்ரிதபரித்ராணார்த்தமாக வெழுந்தருளும்போது, பெரிய திருவடியை யொருநாளந்தத் தெருவே கடாவியருளீரென்று சொல்லுவது. அதுவுங் கடவதன்றென்னில்; இம்மாத்ரத்தையும் செய்தருளாதொழிகைக்கு நாங்களென்னபிழை செய்தோமென்றித்தை, பரமதயாளுவான திருவாழியையேந்தி ஸர்வாத்மாக்களையும் ரக்ஷித் தருளுகிற வெம்பெருமானைக் கண்டக்கால் சொல்லவேணுமென்று வண்டுதன்னைக்கொண்டாடியிரக்கிறாள்.*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், கையும்திருவாழியுமான ஸர்வேஶ்வரனைக்கண்டு ஒருவார்த்தை சொல்லென்று, தர்ஶநீயமான புகரையுடைத்தாயிருப்பதொரு வண்டைப் பார்த்துச்சொல்லுகிறாள்.

ஆழி - வட்டமான. வரிவண்டே - வரியையுடைத்தான வண்டே. அருள் - தன்னிலுமாஶ்ரிதவிஷயத்தில் க்ருபையையுடையனான. ஆழி - திருவாழி யாழ்வானையுடைய. அம்மானை - ஸ்வாமியை. கண்டக்கால் - கண்ட வளவிலே. அருளாத நீர் - இவ்வளவில் அபராதபூயிஷ்ட்டதையாலே யருளக் கடவோமல்லோமென்றறுதியிட்டிருக்கிற நீர். அருளி - ஸங்கல்பங்குலைந் தொருக்கால் க்ருபைபண்ணி. அவர் - அவருடைய. ஆவி - ஆத்மா. துவராமுன் - நீர்மை யுலருவதற்குமுன்னே. அருளாழி - க்ருபாஸமுத்ரமான. புள் - பெரியதிருவடியை. அவர்வீதி - அவரிருக்கிறவீதியே. ஒருநாள் - ஒருநாளாகிலும். கடவீரென்று - ஸ்ரீகஜேந்த்ராதிகள்பக்கல் போவாரைப்போலே அந்யாபதேஶத்தாலே நடத்தவேணுமென்று. இதுசொல்

லியருள் - இத்தைச் சொல்லியருள். வாராததாமே யன்றியே யாமும் - நாமும். என்பிழைத்தோம் - என்தப்பச்செய்தோம்.

இத்தால் கடகருடைய ஸாரக்ராஹித்வமும், ருபஸோபையுஞ்சொற்றிற்று.*

---

## ௬ - ஆம் பாட்டு.

எங்களாற்றாமை பரிஹரித்திலராகிலும் தம்முடைய நாராயணத்வமொழிவாய்ப்போகாமே நோக்கிக்கொள்ளச் சொல்லுங்கோளென்று நின்றதுகீழ்; இதுக்கவர்க்கு மறுமாற்றம் - "நம்முடைய நாராயணத்வமுமழிய வமையுந்தரமல்லாதாருடன் கலந்து வருமவத்யத்திற்காட்டில்" என்றிறே; தமக்கவத்யம் வாராமே, எங்கள் ஸத்தையுங் கிடக்கைக்கொருவழியுண்டு - தாமழகுசெண்டேறப் புறப்படுதல், ஆனைக்கருள்செய்யப்புறப்படுதல் செய்வனசிலவுண்டிறே; அப்போதெங்கள் தெருவேபோனால் தமக்கும் ஸ்வரூபஹாநிவாராது, நாங்களும் ஜாலகரந்த்ரத்தாலே கண்டு ஜீவித்துக்கிடப்புதோம்; இப்படி அவிருத்தமாகச் செய்யலானபின்பு அத்தைச் செய்யச்சொல்லென்று ஒருவண்டையிரக்கிறாள்.

( அருளாதநீர் ) "ஏதத்வ்ரதம் மம" ( ஏதத்வ்ரதம்மம ) என்றருளுகைக்கு ஸங்கல்பித்திருக்குமாபோலே அருளாமைக்கு ஸங்கல்பித்திருக்கிறநீர். "மயர்வறமதிநலமருளினன்" என்று நெஞ்சுருகிக்கிடக்குமவர் "அருளாதநீர்" என்கிறது - என்னதஸாவிஸேஷமென்றறிகிறிலோம். "அருளாதநீர்" என்று - ஒரு திருநாமம் சாற்றுகிறாள். அன்றிக்கே, தயாவிஷயம்பெறாமையாலே தயைகுமரிருந்துதயை பண்ணாதிருக்கிற நீர் தயைக்குவிஷயம்போருமிடத்திலே தயைபண்ணியென்னவுமாம். (அருளி) அருளே நிரூபகமான ஸ்வரூபமும்மது, நிர்த்தயர்க்கும் "அய்யோ!" என்னவேண்டும் தசையிவளது; அருளாதொழியும்படியெங்ஙனே. ( அவராவிதுவாராமுன் ) பின்னையுமருளத்தவிரீரிறே, அது அஸத்ஸமமாவதற்கு முன்னே யருளப்பாரும். அவளுடைய ப்ராணன் பசையற வுலருவதற்கு முன்னே யருளப்பாரும், "ஜீவந்தீம் மாம் யதா ராமஸ் ஸம்பாவயதி கீர்த்திமாந்" ( ஜீவந்தீம்மாம்யதாராமஸ்ஸம்பாவயதிகீர்த்திமாந் ) என்னுமாபோலே. நாங்கள் சொல்லுமத்தனையேயோ வேண்டுவது, அவனருளப் புகாநின்றானேயென்ன, நீங்களறிவிக்குமத்தனையே வேண்டுவது, கொடுவருவாருமங்கேயுண்டு ( அருளாழிப்புள் ) அருட்கடலானபுள்ளது. "வெஞ்சிறைப்புள்" என்றாள் கொண்டுபோனபடியாலே, இப்போது வரவுக்குடலாகையாலே "அருளாழிப்புள்" என்கிறாள்.

( கடவீர் ) அநுகூலர் கண்டு வாழுகைக்கும் ஸங்கஸ்பர்ஸத்தாலுமாகப்போகாதே பிசுகிச் சுழியாநிற்குமிறே, அசேதநமான ரதத்தோ

பாதிவடிம்பாலே தாக்கி நடத்த வேணுமாயிற்று. எங்கேதா னென்னில் (அவர்வீதி) அவள்தெருவிலே. அங்ஙனெண்ணுமோ! ஒரு தெருவிலேபலகால் போகப்புக்கவாறே "இதுவெறுமனன்று" என்றிரார்களோ வென்னில் (ஒருநாள்) நாங்கள் ஜீவித்துக் கிடக்கைக்கு ஒருநாள்போக வமையும்.

(அருளாழியம்மானே) பெரியதிருவடியும்மிகை, தாமரையாளாகிலும் சிதகுரைக்குமேல் என்னடியாரதுசெய்யார்" என்னும்படி அருட்கடலானவனிறே. அன்றிக்கே, திருவடியொருவனுமாயிருந்ததோ!, அங்குகையாளாயுள்ளாரடையகம் பரிகரமன்றோ; அருளைநிரூபகமாகவுடையதிருவாழியைக் கையிலேயுடையவன். அருளார் திருச்சக்கரமிறே. ஸர்வேஸ்வரனுக்கும் கைக்குறியாப்பைவாங்குவ திங்கேயிறே, ஸர்வேஸ்வரன்பக்கலருள் மறுத்தாலும்அருள் கூடுகட்டிநிற்குமிடமிறே. (இதுசொல்லியருள்) இத்தனையுஞ்சொல்லி யருளவேணும். எதென்னில், "அருளாழிப்புட்கடவீரவர் வீதியொருநாள்" என்கிறவார்த்தையைச்சொல்லியருளவேணும். (ஆழிவரிவண்டே) ஶ்ரமஹரமாயழகிதானவண்டேயென்னுதல், வடிவுசிறுத்திருக்கச்செய்தே காம்பீர்யம் பெருத்திருக்கிறபடியைச்சொல்லுதல். ஆழியென்று - வட்டமாய், சுழலப்பறக்கிறவண்டேயென்னுதல். கடகருடைய ஆத்மகுணத்தோபாதி, ரூபகுணமும் முத்தேஶ்யமென்கை.

(யாமுமென்பிழைத்தோமே) நாங்களென்னதப்பு செய்தோம். த்ம்பிரிந்துதுவளவிட்டு வைத்தாற்போலே, நாங்களும்க்ரமத்திலே பெறுகிறோமென்றுறியிருந்தோமோ. திர்யக்கின்காலிலேவிழுவாரும், தூதுவிடுவாரும், தாமாயிருக்க, அத்தலையித்தலையாயும் வாராதிருக்கிறதம்மதோ! குற்றம், எங்களதோ. ..............................................*

---

## ஜீயர் அரும்பதம்.

ஆறும்பாட்டு. (அருளாதவித்யாதி) கீழ்ப்பாட்டில்ப்ரமேயாநுவாத பூர்வகமாக விப்பாட்டுக்குஸங்கதி (எங்களாற்றுமையித்யாதி) ஒறுவாய் - விகலமாய். மறுமாற்றம் - ப்ரத்யுத்தரம் - "அவர்வீதி யருளாழிப்புட்கடவீர்" என்றத்தைக்கடாக்ஷித்துஸங்கதி (தமக்கவத்யம்வாராமேயித்யாதி) அழகுசெண்டேறப் புறப்படுகையாவது - அழகுகாட்டப்புறப்படுகை. அதாவது - தானலங்கரித்துக்கொண்டு புறப்பட்டால், அந்தவழகு ஆஶ்ரிதர்நெஞ்சிலே படும்படிபுறப்படுகை. யத்வா, அழகுசெண்டேறப்புறப்படுகை - விளையாட்டுச்சாரிகைப் புறப்படுகையுமாம்.

(அருளாதநீரருளி) முந்தினவர்த்தத்தில், ஸங்கல்பத்திலேலக்ஷணை. வ்யாக்யாதாவினீடுபாடு (மயர்வறவித்யாதி) நிருபகத்வேநாபி தாநபலிதமாஹ (அருளாதநீரித்யாதி) (குமரிருந்து) அநுபவயோக்யமன்றிக்கேயிருந்து. த்விதீயார்த்தத்துக்

குச்சேரபாவம் ( அருளேநிருபகமித்யாதி ) ". நீர்" என்கிறபதத்திலே தயாநிருப்கத்வந் தோற்றுகிறதென்றுகருத்து.

"அவராவிதுவராமுன்னருளி" என்றந்வயித்து, "அருளாதநீர்" என்றதின் முந்தினவர்த்தத்துக்குச் சேரஸங்கதி ( பின்னையுமித்யாத ) ஸப்தார்த்தம் ( அவளுடையவித்யாதி ) முன்னேயருள வேணுமென்றதுக்கு ஸம்வாதம் ( ஜீவந்தீமித்யாதி ) ஸுந்தரகாண்டேஏகோநசத்வாரிம்ஸேஹநூமந்தம்ப்ரதிஸீதா. "𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑌯𑌾 𑌹𑌨𑍂𑌮𑌨𑍍 𑌵𑌾𑌚𑍍𑌯𑍋 𑌵𑌾𑌚𑌾 𑌧𑌰𑍍𑌮𑌮𑌵𑌾𑌪𑍍𑌨𑍁𑌹𑌿" (தத்த்வயாஹநுமந்வாச்யோவாசாதர்மமவாப்நுஹி) இத்யுத்தரார்த்தம். "𑌸𑌕𑍃𑌦𑍇𑌵 𑌪𑍍𑌰𑌪𑌨𑍍𑌨𑌾𑌯 𑌤𑌵𑌾𑌸𑍍𑌮𑍀𑌤𑌿 𑌚 𑌯𑌾𑌚𑌤𑍇 । 𑌅𑌭𑌯𑌂 𑌸𑌰𑍍𑌵𑌭𑍂𑌤𑍇𑌭𑍍𑌯𑍋 𑌦𑌦𑌾𑌮𑍍𑌯𑍇𑌤𑌦𑍍𑌵𑍍𑌰𑌤𑌂 𑌮𑌮" ( ஸக்ருதேவப்ரபந்நாயதவாஸ்மீதிசயாசதே । அபயம்ஸர்வபூதேப்யோததாம்யேதத்வ்ரதம்மம ) இதியுத்தகாண்டேஅஷ்டாதஸே.

"அருளாழிப்புள்" என்றதுக்கவதாரிகை ( நாங்களித்யாதி ) ஆழி - கடல். கீழே, "வெஞ்சிறைப்புள்" என்றுவைத்து, "அருளாழிப்புள்" என்றால்வ்யாஹதமன்றோவென்ன ( வெஞ்சிறையித்யாதி ) "தேர்கடவி" என்னுமாபோலேய சேதநஸமாதியாலே சொல்லுவானென்னென்ன ( அநுகூலரித்யாதி ) பிசுகிச்சுழிகை-மந்தமாகவளையவருகை. ( அசேதநமானவித்யாதி ) ஹுங்காராஸ்ப்பாலநாங்க்ரிப்ரஹதிகள் விவக்ஷிதங்கள். வடிம்பாலேதாக்கி - கனிமரத்தாலேகுத்தி. அங்ஙனுண்ணுமோ - அப்படியுக்தமோ. இதுவெறுமனன்று - இதுவெறுமேயன்று. ஒருநாளமையுமோவென்ன ( நாங்களித்யாதி )

அருளாழியம்மானை - க்ருபாஸமுத்ரமான ஸ்வாமியை. மிகை - அதிகம். புருஷகாரபூதையான திருவடியும்மிகையாம்படி க்ருபையுடையனாயிருக்குமோவென்ன ( தாமரையாளாகிலுமித்யாதி ) பெரியபிராட்டியாரேயாகிலும் குற்றஞ்சொன்னாளாகில், என்னடியார் தற்றஞ்செய்யார் என்றுசொல்லும்படி, கையாளாயுள்ளார்-பரிகரமாயுளளார். கையிலேயிருக்கிறவர்களென்றுமாம். இரண்டாமர்த்தம் ( அருளைநிருபகமாகவித்யாதி ) அப்படியருளேநிருபகமாயிருக்குமோவென்ன ( அருளாரித்யாதி ) ": ஆர்" என்றதுக்கர்த்தம் ( ஸர்வேஶ்வரனுக்குமித்யாதி ) கைக்குறியாப்பைவாங்குகை - அகப்பையாலே கடன்வாங்குகை. "கைக்குறி,ஆப்பைக்குறி" என்று-லௌகிகபரிபாஷை. அதாவது - ஒருபதார்த்தம்கடன்வாங்குமவர்கள் "கைக்குறியாகத்தாருங்கோள், ஆப்பைக்குறியாகத்தாருங்கோள்" என்றுசொல். இவர்கள்' குறி - அளவு. விவரணம் ( ஸர்வேஶ்வரனித்யாதி ) யத்வா, ரஸோக்தி ( ஸர்வேஶ்வரன்பக்கலித்யாதி ) அருள்மறுத்தாலும் - தயையில்லாமற்போனாலும். அருள்கூடுகட்டி-க்ருபாஸ்வரூபம் ரத்நாங்க்யாதிகளைப்போலே யவனிடத்திலிருக்குமென்று ப்ரதாநார்த்தம். தாங்யாதிகோஶவத் க்ருபாகோஶ ஸ்த்தாநம்என்று த்வநிக்கிறது.

ஆழியென்றது - ஸமுத்ரமென்றுவிவக்ஷித்து, ( ஶ்ரமஹரமாயித்யாதி ) ஆழியென்று - ஆழமாய், அத்தாலே - காம்பீர்யம்விவக்ஷித்து ( வடிவித்யாதி ) வண்டாகையாலே, வடிவுசிறுத்திருக்குமென்று - அர்த்தாத்ஸித்தம். ஆழியென்று-வட்டமாய், அத்தாலே - சுழலுதலைச் சொல்லுகிறதென்கிறார் ( ஆழியென்றித்யா

தி ) இம்மூன்றுபொருளுக்கும் வரியென்று - அழகு. இரண்டாமர்த்தத்திலே, இது க்குகாம்பீர்யமாவது - சொன்னகார்யத்துக்கு மவ்வருகேசில செய்யும்படியானவ ளவுடைமை. காம்பீர்யம் - ஆத்மகுணமாகவுமாம். ஸ்வாபதேஸம் ( கடகருடைய வித்யாதி )

" யாமும் " என்றசஸப்தார்த்தம் ( தாம்பிரிந்தித்யாதி ) துவளவிட்டு - துக்கப்படவிட்டு. அறியிராதே செய்ததேதென்ன ( திர்யக்கினித்யாதி ) திர்யக்கி ன்காலிலே - " ஸுக்ரீவஞாதமிச்சதி " ( ஸுக்ரீவந்நாதமிச்சதி )

ஆழிவரிவண்டே, அருளாழியம்மானைக்கண்டக்கால், அருளாதநீர் அவராவி நவா முன்னருளி, அவர்வீதியொருநாள் அருளாழிப்புட்கடவீர் என்றிதுசொல்லியருள்; தங்கள் குற்றம்பாராதே வரச்சொல்லுகிறேன், மாட்டோமென்னில்; யாமுமெ ன்பிழைத்தோமேயென்று சொல்லியருள். அதாவது-இத்தனையுஞ்சொல்லி யருள வேணும், இத்யர்வயஃ. ......................................................... *

---

# ஏழாம்பாட்டு.

---

என்பிழைகோப்பதுபோலப்பனிவாடையீர்கின்ற
வென்பிழையேநினைந்தருளியருளாததிருமாலார்க்
கென்பிழைத்தாடிருவடியின்றகவினுக்கென்றொருவாய்சொல்
லென்பிழைக்குமிளங்கிளியேயான்வளர்த்தநீயலையே.

## ஆறுயிரப்படி.

( என்பிழை ) தம்மைப்பிரிந்துபடுகிற வ்யஸநத்தின்மேலே யெ லும்பிலே யிழைகோத்தாற்போலே என்னைப்பனிவாடை யீராநிற்கச்செ ய்தேயும், தன்க்ருபையையொன்றும் நினையாதேயென்பிழையே நினைந்த ருளியருளாதிருக்கிறவருக்கு, நானேதேனும்பிழைசெய்தால்தம்முடைய க்ருபைக்கு விஷயமல்லாததொரு பிழையுமுண்டோ? என்றொருவார்த் தைசொல்லவேணும். உன்னுடையநிறத்தைக்காட்டியுமவனுடையதிருநா மத்தைச்சொல்லியுமென்னுடையவெலும்பை யிழைக்கிறவிளங்கிளியே, அவருக்குச்சொல்லுமிடத்தில்அவர், வார்த்தையைமறுத்தருளிலும் பி ராட்டிதிருமுன்பேவைத்துச் சொல்லவேணுமென் றித்தனைக்கு முறவு போராதோவென்கிறாள். ........................... ...................... *

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், அவளும்முடைய அநவதிகக்ருபைக்குச்செய்ததொரு தப்புண் டோவென்றுசொல்லென்று, தான்வளர்த்ததொரு கிளியைப்பார்த்து வார்த்தை சொல்லுகிறாள்.

என்பிழைக்குமிளங்கிளியே - உன்னுடையரூபசோபையாலும் வடிவிளமையாலும் ஸ்மாரகமாய்க்கொண்டு என்னெலும்பைச்செதுக்குகிற கிளியே. யான் வளர்த்தநீயல்லையே - பருவத்துக்குமிளமைக்குமீடாக நானவளர்த்துப்போந்த நீயல்லையோ என்கிலேசமிருந்தபடி. என்பு - எலும்பிலே. இழை - நூலிழையை. கோப்பதுபோல - கோக்குமாபோலே. பனிவாடை - குளிர்ந்தவாடை. ஈர்கின்ற - ஈராநின்றது. இவ்வளவிலே. என்பிழையேநினைந்தருளி - என்பக்கலபராதத்தைநினைந்தருளி, தம்முடையதப்புப்பாராமல். அருளாத - என்பக்கலருளாதே. திருமாலார்க்கு - அருளுவிக்குமவளுக்குநல்லராயிருக்கிறவவர்க்கு. திருவடியின் - ஸ்வாமியானவும்முடைய. தகவினுக்கு - ஸ்வாபாவிகக்ருபாகுணத்துக்கு. என் - என்ன. பிழைத்தாளென்று - தப்புசெய்தாளென்று. ஒருவாய் - ஒருவார்த்தை. சொல் - சொல்லவேணும்.

வாய் - வார்த்தை. என்பிழைத்தாள் - உம்மைப்பெறுகைக்கு, தான்யத்நம்பண்ணினளோவென்றுகருத்து. ஒருவார்த்தைசொன்னலென்ன பிழையுண்டாமென்றுமாம். "ஈர்கின்றது" என்றும்பாடம். இதில் - கடகருடையஅவயவசோபாதிகளும், கிஞ்சித்காரப்ரதிஸம்பந்தித்வாதிகளால் வந்தபவ்யதையுந் தோற்றுகிறது.........................................................*

---

ஈடு-ஏழாம்பாட்டு.

தந்தாமுடைய அபராதத்தைப்பாராதே, "அருளாழிப்புள் கடவீரவர்வீதி" என்றுசொல்லுமித்தனையோ வேண்டுவதென்று அவர்க்குக்கருத்தாக; எங்கள்குற்றமொன்றுமேயோ! பார்ப்பது, தம்முடைய அபராதஸஹத்வம் பார்க்கக்கடவதன்றோவென்று சொலலென்று தன்கிளியையிரக்கிறாள்.

(என்பிழைகோப்பதுபோல) எலும்பும்நரம்புமேயாம்படிசரீரந்தான்போரக்ருசமாயிற்று. எலும்பைத்தொளைத்து, அதிலேமூர்த்தமாயிருப்பதொன்றை வ்யாபரிப்பித்தாற்போலேயாயிற்று பனிவாடையீர்கின்றது. நஞ்சூட்டினவாடையானதிருக்கிறபடி. "[பம்போபவநமாருதம்]" (பம்போபவநமாருதம்) என்றுநாயகனுக்கிருக்குமாபோலே யிராநின்றது காணுமிவ்வாடையிவளுக்கு. [பத்மஸௌகந்திகவஹம்] (பத்மஸௌகந்திகவஹம்) கலம்பகஞ்சூடுவாரைப்போலே தாமரையோடைசெங்கழுநீரோடைகளிலேசென்றுபுக்கு, "பூவிலிழியிலதில்வெக்கைதட்டும்" என்று, மேலெழநின்று, அரிமிதியான பரிமளத்தைக்கொய்துகொண்டு வாராநின்றது. [ஶிவம்] (ஶிவம்) கலப்பற்றுப்பசுந்தென்றலாயிராநின்றது. அதாவது - புறம்பேசிலர்க்குடம்புகொடுத்துச் சுணங்கழியாதே தாய்த்தலைத்தென்றலாயிருக்கை. [ஶோகவிநாஶநம்] (ஶோகவிநாஶநம்) நம்மையினிப்ராணனோடேவைத்து நலியாதுபோலேயிருந்தது. [யந்த்ராঃ]

(தங்யா:) காற்றுவாராநின்றதென்றால், ஏகாந்தஸ்த்தலந்தேடிப்படுக்கை படுக்கிறவர்களுஞ்சிலரே. [ லக்ஷ்மணஸேவந்தே ] ( லக்ஷ்மணஸேவந்தே ) இதெப்போதோ வருவதென்றிருப்பர்கள். [ பம்போபவநமாருதம் ] ( பம்போபவநமாருதம் ) "ஆகரத்தில்நெருப்பு" என்னுமாபோலே.

இப்படிமஹிஷியானவள் வாடைக்கிடைந்துநோவுபடாநிற்க, இத்தைப்பரிஹரிக்கைக்கவர், கடலடைப்பது படைதிரட்டுவதாகிறபடி. நாயகநாயகிகளொருவரையொருவர்பிரிந்தவாறே அந்தராஜாதிகாலிலே துகையுண்பதே! யிப்படி. ( அந்தரத்திலேஜாதமானது - அந்தரஜாதி. ஆகாஶாத்வாயுவிறே. கால் - காற்று ) ( என்பிழையேநினைந்தருளி ) நான்படுகிறக்லேஶம் போராதென்று கிழாண்மைச்சிகை வாசியாநின்றார். அவிஜ்ஞாதாவாகைதவிர்ந்து "ஸஹஸ்ராம்ஶு:" ( ஸஹஸ்ராம்ஶு: ) என்கிறபடியே இப்போதுதோஷத்தில் ஸர்வஜ்ஞராயாயிற்றிருக்கிறது. ( அருளாத திருமாலார்க்கு ) "நகஶ்சிந்நாபராத்யதி யென்பாருமருகேயிருக்க, எங்கள்குற்றம்பார்த்து அவள்பக்கல் முகம்பெறவிருக்கிறாரே!" என்றுநஞ்சீயாருளிச்செய்யும்படி. "நானிப்படி நோவுபடவேண்டுகிறது - அவனுக்கவள் முகங்கொடுத்து அங்கேதுவக்குகை யிறேயென்றின்றாதாகிறாள்" என்றுபிள்ளான்பணிக்கும்படி. உறவுள்ளவிடத்திலேயிறே வெறுப்புள்ளதும்.

அருளாதொழிகிறதென்னென்றால், தந்தாங்குற்றம்பாராதே அருளச்சொல்லுமித்தனையோ! வேண்டுவதென்று சொல்லநினைத்தாராகில் நீங்கள்தானிங்ஙனேசொல்லுங்கோள் - என்பிழைத்தாள் திருவடியின் தகவினுக்கென்னுங்கோள். என்குற்றத்தைப்பார்த்து தமிக்கநினைத்தாராகில் தம்பொறையாகிறநேர் தரவைக்காட்டுங்கோள். ஸ்வாமிகளான தம் பொறை வயிறுநிறையவெங்களால் குற்றஞ்செய்யப்போமோ வென்னுங்கோள். ஆஶ்ரயத்துக்குத்தக்கபடியன்றோவெல்லாம்; நாங்கள்குற்றஞ்செய்வது மெங்களளவிலே, தாம்பொறுப்பதும் தம்மளவிலே யன்றோ!. "( திருவடியின்தகவினுக்கென்பிழைத்தாள் ) தேவரீர்க்ருபைக்குத் தண்ணீர்துரும்பாக ஏதேனும் ப்ரதக்ஷிணநமஸ்காராதிகள்பண்ணிற்றுண்டோ" என்றுநம்பிள்ளை யருளிச்செய்யும்படி.

( தகவினுக்கு ) "ஆந்ருஶம்ஸ்யம்பரோதர்ம:" ( ஆந்ருஶம்ஸ்யம்பரோதர்ம: ) என்றுசொல்லும்படியிருக்கும் நிலைக்கென்பிழைத்தாள்- என்னதப்புசெய்தாள் [ கிங்கோபமூலம் ] ( கிங்கோபமூலம் ) என்றாளிறேதாரை. ராஜபுத்ரர்களை நாலுமாஸம் மின்னுக்கு மிடிக்குமினாயாக்கிதாங்கள் போகப்ரவணராயிருந்தவற்றை யொன்றையும்புத்திபண்ணாதே, உம்முடையகோபத்துக் கடியென்னென்றாளிறே யவர்கள்பொறையைநினை

த்திருந்தகனத்தாலே. [ ஊந-ஜெநு-வ--சு ] (மநுஜேந்த்ரபுத்ர) அறு பதினயிரமாண்டு, செய்தார் செய்தகுற்றங்களைப் பொறுத்துச்சேரவிட் டாண்டுகொண்டு போந்தானுங்கள் தமப்பனர்; அவன் வயிற்றிலே பிறந்து குற்றஞ் செய்தோமென்று தலையறுக்கவந்து நின்றீர்நீர், அழகிதாயிருந்த தும்முடையபோக்கு. [ கஃஷெநஸநிஷ திவாஜிஜெஶெ ] ( கஸ்தேநஸந் திஷ்ட்டதிவாங்நிதேஶே) ஶாஸ்த்ரவஶ்யமன்றிக்கே கண்டதிலேகடுகசாப லத்தைப்பண்ணிமீளமாட்டாத திர்யக்குகளைநீரே " இழந்தபோகங்களை புஜிப்பது" என்றுசேர்த்துவிட்டு, நீர்சொல்லிற்றுசெய்தனவென்று தலை யறுக்கவந்துநின்றீர். இப்படிசொல்லலாம்படியிறேயிவர் பொறையிருப்ப து. ( ஒருவாய்சொல் ) " ஒருவாய் " என்றது - ஒருவார்த்தையென்றப டி. " சொல் " என்றது - சொல்லுஎன்ருய், ஒருவார்த்தைசொல்லு என் றபடி.

( என்பிழைக்குமிளங்கிளியே ) மௌக்த்யத்தாலும் ஸ்நிக்தமா ன பணிதியாலும், வடிவில் பசுமையாலும், வாயில்பழுப்பாலும், நாயக னுக்கு ஸ்மாரகமாய், எலும்பையிழைக்கிற கிளியென்னுதல்; என்பிழை க்கும் - என்தசையை யறிவித்தாலென்ன தப்புண்டாமென்னுதல். ( யா ன்வளர்த்தநீயலையே ) ஶ்ரியஃபதியாய்த்தான்ருேன்றியா யிருப்பார்செய் வதைவயிற்றில் பிறந்தாரும்செய்வரோ. கலந்துபிரிந்தார் செய்வதை வளர்த்தவர்களுஞ் செய்வர்களோ. ( யான்வளர்த்தநீயலையே ) அவன்தா னிப்படிசெய்யவேண்டிச்செய்தானே; , என்னேட்டைஸம்பந்தமன்ருே! அவனிப்படிசெய்தது; அப்படி, என்னேட்டை ஸம்பந்தமுனக்கு முண் டானபின்பு, நீநலியச்சொல்லவேணுமோ. ( யான்வளர்த்தநீயலையே ) எ னக்குத்தக்காற்போலேயன்ருே! நீயுமிருப்பது, உனக்குக்குறையோ!....

---

## ஜீயர் அரும்பதம்.

ஏழாம்பாட்டு ( என்பிழையித்யாதி ) கீழிற்பாட்டிலே, " என்பிழைத்தோ ம் " என்றுபிழையை அநப்யுபகம்யவாதத்தாலே யருளிச்செய்து, இப்பாட்டில், அ ப்யுபகம்யவாதத்தாலே யருளிச்செய்கிருர்.

உடம்பென்னுதே, " என்பு " என்றதுக்குபாவம் ( எலும்பித்யாதி ) மூர்த்த மாயிருப்பதொன்றை யென்கையாலே-" இழை " என்று - கர்க்கஶமான ரஜ்வாதி களுக்குமுபலக்ஷணமென்றபடி. கோப்பதுதொளையிலேயாகையாலே, தொளைத்தெ ன்றது-அர்த்தஸித்தம். " பனி " என்றுவிஶேஷித்ததுக்குபாவம் ( நஞ்சூட்டினவித் யாதி ) பனிவாடை யென்றதுக்குத்ருஷ்டாந்தம் ( பம்போபவநேத்யாதி )

இஶ்லோகத்துக்கு வ்யாக்யாநம்பண்ணுவதாக ப்ரதீகோபாதாநம் ( பத்மே த்யாதி ) கிஷ்கிந்தாகாண்டேப்ரதமே, " வஜுஸஉஹநிகவஹஂஶிவஂஶொாக

விநாஶநம் । யத்ரௌகஸ்ஸுரஸௌகந்திகஸம்ஶ்ரயஸௌகவிநாஶநம்" (பத்ம ஸௌகந்திகவஹம்ஶிவம் ஶோகவிநாஶநம் । தயாலக்ஷ்மணஸேவந்தேபம்போபவநமாருதம்) ஸௌகந்திகம் - செங்கழுநீர். பக்ஷப்புதவயஹநத்துக்கு த்ருஷ்டாந்தம் (கலம்பகமித்யாதி) கலம்பகம் - நாநாபுஷ்பங்கள்தொடுத்த நாநாவர்ணமாலை. ஓடை - ஸரஸ்ஸு - பத்மஸௌகந்திகஶப்தங்கள் - தத்கந்தலக்ஷகங்களென்று திருவுள்ளம்பற்றி யருளிச்செய்கிறார் (பூவிலிழியிலித்யாதி) அரிமிதியானவென்றது - சாடு. அரியாலே - வண்டாலேமிதிக்கப்பட்ட பரிமளமென்று ஸ்வபாவார்த்தம். அரிமிதித்தசெல்லென்று - சாடு. அதுபோலேஶ்லாக்யமான பரிமளமென்றபடி. கொய்துகொண்டு-சுற்றிக்கொண்டு, ஶ்வம்-ஶாத்தம். சுணங்கழியாதே - தன்னதிஶயங்குன்றாதே. (தாய்த்தலைத்தென்றல்) தாய் - ப்ரதமத்திலேயுண்டாம், தலைத்தென்றல்-ஶ்லாக்யமானதென்றலென்றபடி. ஶோகவிநாஶகத்வம்-ப்ராணவிநாஶத்வாராவென்றவாறு. வர்த்தமாநத்தாத்பர்த்தம் (இதெப்போதோவித்யாதி) இதுக்கு-ஶேஷிதாம்ஶத்தில பர்யாப்தியில்நோக்கு. ஆகாரத்தில்நெருப்புபடபாநலம். "ஆகாரத்தில்நெருப்பு" இத்யாதிவாக்யாநந்தரத்திலே. "நாயகநாயகிகள்" இத்யாதிவாக்யமநுஸந்தேயம்.

மேலுக்கவதாரிகை (இப்படிமஹிஷியானவளித்யாதி) இது - வ்யதிரேகலக்ஷணை. (அந்தரஜாதிகாலிலே) அந்தரத்திலே - ஆகாஶத்திலே. ஜாதியை - ஜந்மத்தையுடைய. காலிலே - காற்றிலேயென்றபடி. "ஆகாஶாத்வாயு:" (ஆகாஶாத்வாயு:) இறே, ஹீநஜாதிகாலிலே பெண்ணாக்வதி: இத்தைப்பரிஹரிக்கைக்கவர் கடலடைப்பது படைதிரட்டிவதாகிறபடியென்று - வ்யதிரேகலக்ஷணையோக்தமர்த்தம் ஸ்பஷ்டயதி (நான்படுகிறக்லேஶமித்யாதி) கீழாண்டைச்சிறை - பழங்கணக்குகளிலே நிற்கிறநிலைவ. "பிழையே" என்கிற ஏவகாரார்த்தம் (அவிஜ்ஞாதாவித்யாதி) ஸ்ரீஸஹஸ்ரநாமதி, "அவிஜ்ஞாதாஸஹஸ்ராம்ஶுர்விதாதாக்ருதலக்ஷண:" (அவிஜ்ஞாதாஸஹஸ்ராம்ஶுர்விதாதாக்ருதலக்ஷண:) பூர்வமாஶ்ரித தோஷவிஷயத்திலே யவிஜ்ஞாதாவாய், குணவிஷயத்திலே ஸஹஸ்ராம்ஶுவாய் - ஸர்வஜ்ஞராய்ப்போந்தவரிப்போதந்த வாசாரத்தைவிட்டு, தோஷகத்ருக்காஞரொன்றபடி.

"திருமாலார்க்கு" என்றதுக்கு - திருவினிடத்திலே மாலார்க்கென்றுஜீயர் நிர்வாஹம்; திருவின்மாலுக்கு விஷயபூதனென்று பிள்ளான்நிர்வாஹம். எனக்கருளாமையாலே, இவர்திருவினிடத்திலே மாலாய்ப்போருகிறநித்தனைபோக்கி. அவள் முகங்கொடாளென்று ஜீயர்நிர்வாஹத்துக்கர்த்தம். அருளாதொழிகைக்குஹேது - அவனுக்கவள்வ்யாமுக்தையாய், தன்வ்யாமோஹத்துக்கு விஷயமாக்கி முகங்கொடுத்துக்கொண்டிருக்கையிறேயென்றபிராட்டியை இன்னாதாகிறாளென்றுபிள்ளான் நிர்வாஹத்துக்கர்த்தம். மால் - வ்யாமோஹம். யுத்தகாண்டேமாருதிம்ப்ரதிஸீதா, "பாபாநாம்வாஶுபாநாம்வா வதார்ஹாணாம்ப்லவங்கம । கார்யம்கருணமார்யேண நகஶ்சிந்நாபராத்யதி." (பாபாநாம்வாஶுபாநாம்வா வதார்ஹாணாம்ப்லவங்கம । கார்யம்கருணமார்யேண நகஶ்சிந்நாபராத்யதி.) இன்னாதாகிறாள் - வெறுக்கிறாள். ஸ்வாமினியைவெறுக்கலாமோவென்ன (உறவுள்ளவிடத்திலேயித்யாதி) ஹநிஷ்யாமிஸபாந்தவமிறே.

"தகவு" என்றதுக்கு - பொறையாகவர்த்தம் (என்குற்றத்தையித்யாதி) தமிக்க - தண்டிக்க. நேர்தரவு - விஶுத்தியோலே. "திருவடியின் தகவினுக்கு" என்றுகூட்டி பாவாந்தரம் (ஸ்வாமிகளித்யாதி) செய்யப்போகாதபடியென்னென்ன (ஆஶ்ரயத்துக்கித்யாதி) விபுத்வாணுத்வ ரூபாஶ்ரயத்துக்கென்றபடி. விவரணம் (நாங்களித்யாதி) இந்தபக்ஷத்திலே பிழை - அக்ருத்யகரணதி.

"தகவு" என்றது - க்ருபாபரமாக வர்த்தாந்தரம் (தேவரீரித்யாதி) இந்தபக்ஷத்திலே, பிழை - உபாயாந்தராந்வயம். விவரணம் (ஆந்ருஶம்ஸ்யமித்யாதி) ஸுந்தரகாண்டே மாருதிம்ப்ரதிஸீதா, "ஸகுரு‌ஷ்வம‌ஹோத்ஸாஹக்ருபாம்மயிநரர்ஷப। ஆந்ருஶம்ஸ்யம்பரோதர்மஸ்த்வத்தஏவமயாஶ்ருதஃ" (ஸகுருஷ்வமஹோத்ஸாஹக்ருபாம்மயிநரர்ஷப। ஆந்ருஶம்ஸ்யம்பரோதர்ம ஸ்த்வத்தஏவமயாஶ்ருதஃ)

பொறையென்றவர்த்தத்திலே யுதாஹரணம் (கிங்கோபமூலமித்யாதி) கிஷ்கிந்தாகாண்டே த்ரயஸ்த்ரிம்ஶே லக்ஷ்மணம்ப்ரதிதாரா, "கிங்கோபமூலம்மநுஜேந்த்ரபுத்ரகஸ்தேநஸந்திஷ்டதிவாங்நிதேஶே। கஶ்ஶுஷ்கவ்ருக்ஷம்வநமாபதந்தம்தவாக்நிமாஸீதநிர்விஶங்கஃ." (கிங்கோபமூலம்மநுஜேந்த்ரபுத்ரகஸ்தேநஸந்திஷ்டதிவாங்நிதேஶே। கஶ்ஶுஷ்கவ்ருக்ஷம்வநமாபதந்தம்தவாக்நிமாஸீதநிர்விஶங்கஃ.) இதுக்கர்த்தம் (ராஜபுத்ரர்களித்யாதி) ஆண்டுகொண்டு-ரக்ஷித்துக்கொண்டு. போக்கு - வ்யாபாரம். ப்ரத்யுத, ப்ரீதிமூலமேயுள்ளதென்கிறீர் - (கஸ்தேஇத்யாதி) ப்ரதிஜ்ஞாதகாலாதி க்ரமத்திலும் "கஸ்தேநஸந்திஷ்டதிவாங்நிதேஶே" (கஸ்தேநஸந்திஷ்டதிவாங்நிதேஶே) என்றதுக்கு கருத்தென்னென்ன (ஶாஸ்த்ரவஶ்யமித்யாதி) காலாதிக்ரமம் - உம்முடையநியமநத்தாலேவந்ததென்றபடி.

என்பிழைக்கும் - எலும்புகளைச் சிதைக்குமென்று முதலர்த்தம். என் - என்ன. பிழைக்கும் - பிழையாம். தப்புண்டாமென்றபடியென்றிரண்டாமர்த்தம்.

"யான்வளர்த்தநீயலையே" என்றதுக்கு - "ஒருவாய்சொல்" என்றவாறே, அது செருக்கடித்தநாதரித்திருக்க, சொல்லுகிறானென் றவதாரிகை யநுஸந்தேயம். "திருமால்" என்றத்தைப்பற்ற (ஶ்ரிய:பதியாயென்றது) தான்றோன்றியென்றது - "திருவடி" என்றத்தைப்பற்ற. ஸ்வதந்த்ரனென்றபடி. விவரணம் (கலந்தித்யாதி) தாத்பர்யாந்தரம் (அவன்தானித்யாதி) விவரணம் (எனக்குத்தக்காற்போலேயித்யாதி) மூன்றும் தாத்பர்யமாதல். "என்பிழைக்கும்" என்றதின் ப்ரதமத்விதீயார்த்தாநுகுணமாக, "யான்வளர்த்த" என்றதுக்கு தாத்பர்யத்வயமென்றுகண்டுகொள்வது. ஶ்ரிய:பதியாயித்யாதி வாக்யத்வயத்துக்கு - "வளர்த்த" என்றதிலேநோக்கு. அவன்தானித்யாதி வாக்யத்துக்கு - "நீயலையே" என்றதிலேநோக்கு.

என்பிழைக்குமிளங்கிளியே, என்பிழைகோப்பதுபோலப் பனிவாடையீர்கின்றவென்னிடத்திலும், என்பிழையே நினைந்தருளி யருளாததிருமாலார்க்கு, திருவடியின்தகவினுக் கென்பிழைத்தாளென்றொரு வாய்சொல்; பின்னையும் அதந்யபரமாயிருக்க, யான்வளர்த்தநீயலையேயிதி, இத்யந்வயஃ..............................*

## எட்டாம்பாட்டு.

நீயலையேசிறுபூவாய்நெடுமாலார்க்கென்றூதாய்
நோயெனதுநுவலென்னநுவலாதேயிருந்தொழிந்தாய்
சாயலொடுமணிமாமைதளர்ந்தேனினியுனது
வாயலகிலின்னடிசில்வைப்பாரைநாடாயே.

### ஆறாயிரப்படி.

( நீயலையே ) தன்னுடைய வவஸாதத்தைக்கண்டு அவஸந்நமாகிற பூவையைநோக்கி, எனக்கரியனுகையே தனக்கு ஸ்வரூபமாயிருக்கிறவர்க்கு நோயெனது நுவலென்னநுவலாதேயிருந்தொழிந்தாய்நீயலையோ; என்னுயிரானது முடிந்ததுகிடாய், உனக்கு ரக்ஷகரைத் தேடாயென்று சொல்லுகிறாள்.................................................*

### பன்னீராயிரப்படி.

அநந்தரம், ஆச்ரிதவத்ஸலனானவன் பக்கலிலேபோய் என்னுடையயறிவித்திலையென்று, தான்வளர்த்ததொரு முக்தமானபூவையைப் பார்த்துச்சொல்லுகிறாள்.

சிறுபூவாய் - பால்யத்தாலேசிறுபூவாய். நெடுமாலார்க்கு - ஆச்ரிதவிஷயத்தில் ஆச்ரிதவாத்ஸல்யத்தாலே பெரும்பிச்சரானவர்க்கு. என்றூதாய் - என்னுடையதூதாய்ச்சென்று. எனது-என்னுடைய. நோய் - விரஹவ்யாதியை. நுவலென்ன - சொல்லென்ன. நுவலாதே - சொல்லாதே. இருந்தொழிந்தாய் - செருக்கடித்திருந்துவிட்டாய். நீயலையே - நீயல்லையோ. நான் - நான். சாயலொடு - ஒளியோடுகூடின. மணி - ச்லாக்யமான். மாமை - நிறத்தை. தளர்ந்தேன் - இழந்தேன். இனி - இப்படியீடுபட்டபின்பு. உனது - உன்னுடையதான. வாயலகில் - வாயலகுக்குள்ளேபுக. இன் - மதுரமான. அடிசில் - அடிசிலை. வைப்பாரை - ஊட்டுவாரை. நாடாய் - புறம்பேபோயாராயவேணுங்காண்.

இத்தால் - கடகரிஞ்சித்காரம்பண்ணுததுதன்னிழவென்று தோற்றிற்று. சிறுபூவாயென்று - கடகருடையபருவச்சிறுமையு முத்தேச்யமென்று தோற்றுகிறது. ................................................................*

---

### ஈடு-எட்டாம்பாட்டு.

முன்பிவள்வார்த்தை சொல்லிக்கொண்டாடுகையாலே தரித்திருந்தபூவையானது இவளுருவப்புக்கவாறே தானுமுருவப் புக்கது; அத்தைப்பார்த்து, முன்பே யென்தசையை யறிவியென்னச் செருக்கடித்திருந்தாய், நானோ, முடியாநின்றேன், இனியுன்னை ரக்ஷிப்பாரைத் தேடப்பாராயென்கிறாள். பூவையென்பது - நாகணவாய்ப்புள். அதாவது ஒரு பக்ஷிவிசேஷம்.

( நீயலையே ) என்தலைமையை யறிவிக்க வேணுமென்ன, அறிவியாதேயிருந்தவுன்னாலே வந்ததன்றோவிது. அறிவித்தால் வாராதே யிருந்தானாகிலிறே யவனுக்குக்குறையாவது. பகவல்லாபம் சேர்ப்பாராலேயென்றிருக்கிறாள் ; அவ்யவதாநேஸம்பந்த மெம்பெருமானோடேயாயிருக்க, ஆசார்யனை விரும்புகிறது - பண்ணின வுபகாரத்தைப்பற்றவிறே; "ஆதநீதயதோஜ்ஞாநம்தம்பூர்வமபிவாதயேத்" ( ஆதநீதயதோஜ்ஞாநம்தம்பூர்வமபிவாதயேத் ) என்னாநின்றதிறே. ( சிறுபூவாய் ) உன் பருவம்நிரம்பாமையிறே நம்கார்யத்தைக்கெடுத்தது. ( நெடுமாலார்க்கு ) அவர்க்கு வ்யாமோஹத்தையுண்டாக்கிக் கொடுவரவேணுமென் றிருந்தாயல்லையே. ( என்தூதாய் ) எனக்கவர்பக்கல் வ்யாமோஹந்தா னில்லாமையிருந்தாயுமன்றே, ( வயிற்றில்பிறந்த வுங்களைக்கொண்டு அபிமதம் சேர்க்கவேண்டும்படியன்றோ ! எனக்குண்டானவாசை. )

( நோயெனது ) ஸ்ரீபரதாழ்வான் "நோய்" என்றால் சாதுர்த்திகமாயிராதே. [ ஜடிலம் ] ( ஜடிலம் ) நல்லமாலைவந்தால் "பிள்ளைபரதன்மயிருக்காயிருந்தது" என்றாயிற்று சக்ரவர்த்தி வாய்விடுவது ; அவனாயிற்று சடைபுனைந்திருக்கிறான். [ சீரவஸநம் ] ( சீரவஸநம் ). நல்லபரிவட்டங்கண்டால் "இதுபிள்ளைக்காம்" என்று வாய்விடுவர்கள் ; அவனன்றோ ! மரவுரியுடுத்திருக்கிறான். [ ப்ராஞ்ஜலிம் ] ( ப்ராஞ்ஜலிம் ) அவர்க ளிரந்துகொடுக்கப் பெறுமவன், தன்னபிமதத்துக்குத் தானிரப்பாளனாயிருந்தான். [ பதிதம்புவி ] ( பதிதம்புவி ) "அங்கேபரதமாரோப்ய" ( அங்கேபரதமாரோப்ய ) என்னும் நிலைபெற்றதில்லை. "படுக்கையுறுத்தும்" என்றுமடியிலே கண்வளருமவனாயிற்று தரைக்கிடைகிடக்கிறான். [ ததர்ஸராமோ துர்த்தர்ஸம் ] ( ததர்ஸராமோ துர்த்தர்ஸம் ) வைத்தகண்வாங்காதே கண்டுகொண்டிருக்கும் பெருமாளுக்கும் கண்வைக்கவொண்ணாதபடி யிருக்கிறவனை. [ யுகாந்தேபாஸ்கரம்யதா ] ( யுகாந்தேபாஸ்கரம்யதா ) பெருமாளொருவர்க்கும் கண்வைக்கவொண்ணாமையேயன்றிக்கே, "ஜகதுபஸம்ஹாரம் பிறக்கப் புகுகிறதோ !" என்னும்படியிருந்தான். ( நோயெனதுநுவலென்ன ) என்தலைமையை யங்கே சென்று சொல்லென்ன, சொல்லாதே யிருந்தொழிந்தாய். நுவலாதேயிருந்தாயென்னுதல், நுவலாதே யொழிந்தாயென்னுதல் செய்யவமையாதோ !, இரட்டிப்பென்னென்னில் ; "வந்தொழிந்தான், போயொழிந்தான்" என்னக்கடவதிறே ; வழக்கச்சொல்லிருக்கிறபடி. இரண்டுதர்மியையு மொருவுக்திமாத்ரத்தாலே நோக்கலாயிருக்கவன்றோ ! நீயாறியிருந்தது.

அதுக்கிப்போதுவந்ததென்னென்ன ( சாயலொடுமணிமாமை தளர்ந்தேன்நான் ) ஸமுதாயஶோபையோடே நிறத்தில் ப்ளஷ்கல்ய முமிழந்தேன்.

“ இனிப்போயறிவிக்கிறேன் ” என்று த்வரிக்கப்புக்கது ; கதே ஜலே ஸேதுபந்தம்போலே இனியறிவித்தா லென்னலாபமுண்டு ( இனியுனதித்யாதி ) இனியுனக்கு ரக்ஷகனைத் தேடப்பாராய். அவன்வந்தாலும்போனநிறத்தை மீட்கப்போகாதென்கிறாள். பெரியதிருமலைநம்பி, தம்முடைய அந்திமதசையிலே, தமக்கொரு வெண்ணெய்க்காடும் பிள்ளையாயிற்று திருவாராதநம், அவர் திருமுன்பில் திருத்திரையைவாங்கச் சொல்லி, “ சாயலொடுமணிமாமை தளர்ந்தேனினியுனது வாயலகி லின்னடிகில் வைப்பாரைநாடாயே ” என்றாராம்.... ...... ..............*

---

## ஜீயர் அரும்பதம்.

எட்டாம்பாட்டு ( நீயலையேயித்யாதி ) “ நுவலென்னநுவலாதே யிருந்தொழிந்தாய் ” என்றிப்போதுசொல்லுகையாலே, “ என்தனையையறிவி ” என்றுசொன்னதுசித்தம்.

“ எனதுநோய்நுவலென்னநுவலாதே யிருந்தொழிந்தாய் நீயலையே ” என்றந்வயித்தருளிச்செய்கிறார் ( என்தனையையித்யாதி ) இது - தளருகை. என்னலேயென்கிறதென், வாராதிருந்தவவனதன்றோ குற்றமென்ன ( அறிவித்தாலித்யாதி )

ஸ்வாபதேஶம் ( பகவல்லாபமித்யாதி ) ப்ரஸங்காதுபகாரகத்வ நிபந்தநோத்தேஶ்யதையை யருளிச்செய்கிறார் ( அவ்யவதாநேநேத்யாதி ) அவ்யவதாநேந - ஸாக்ஷாத். ஆசார்யனை யாதரிக்கையிலே ப்ரமாணம ( ஆததிதேத்யாதி ) “ லௌகிகம்வைதிகம்வாபி ததாத்யாத்மிகமேவவா ” ( லௌகிகம்வைதிகம்வாபி ததாத்யாத்மிகமேவவா ) இதிபூர்வார்த்தம். இதம்மாநவஸ்ம்ருதௌ. லௌகிகம் - வ்யவஹாரஜ்ஞத்யுபயோகி. வைதிகம்-ஸ்வர்க்காதி புருஷார்த்தோபயோகி. ஆத்யாத்மிகம்-மோக்ஷோபயோகி.

“ சிறு ” என்றதுக்குபாவம் ( உன்பருவமித்யாதி ) நெடுமால் - மிக்கவ்யாமோஹம். ( அவர்க்கித்யாதி ) முன்பேயவர் நெடுமாலரன்றோ வென்றுகருத்து. எனக்கவர்பக்கலித்யாதிக்குக்கருத்து -வயிற்றிற்பிறந்த வுன்னைத்தூதுவிடும்படியன்றோ என்வ்யாமோஹமென்று.

“ எனதுநோய் ” என்கையாலே - லோகவ்யாவ்ருத்தியை ஸித்தவத் கரித்து த்ருஷ்டாந்தம் ( ஸ்ரீபரதாழ்வானித்யாதி ) ( கண்வைக்கவொண்ணாமையேயன்றிக்கே ) கண்வைக்கப்போகாமை மாத்ரமன்றிக்கே. என்னும்படி - என்றுஶங்கிக்கும்படி. யுகாந்தேபுவிபதிதம்பாஸ்கரம் யதாஜகதுபஸம்ஹாரஸூசகதயாஜாநாதி, ததாததர்ஶேத்யர்த்தஃ. “ பெருமாளொருவர்க்கும் ” என்கிறவிடத்திலே - நாட்டார்க்கும் கண்வைக்கப்போகாதவனாய் இத்யத்யாஹார்யம். ஜகதுபஸம்ஹாரம் பிறக்

கையாவது - இவன் தஸையைக் கண்டால் பெருமாளும் கிடையாது, பின்னை விபூதியுமில்லையாமென்றபடி. நுவலுகை - சொல்லுகை.

தடஸ்த்த ஶங்கையை யநுவதித்து பரிஹரிக்கிறார் ( நுவலாதேயித்யாதி ) வழக்கச்சொல் - வ்யவஹாரப்ரஸித்தமானசொல். திசைச்சொல், செய்யுட்சொல், வழக்கச்சொல், என்று த்ரிவிதமிறேஶப்தம். “ நுவலாதேயிருந்தொழிந்தாய்” என்றதுக்கு பாவம் ( இரண்டுதர்மியையுமித்யாதி ) இரண்டுதர்மியையுமென்றது- நாயகனையும் தன்னையுமாதல், தன்னையும் பூவையையுமாதல்.

சாயல் - சாயை. ஸமுதாயஶோபை. மாமை - நிறம். அவயவஶோபை. மணியென்று - ஶ்லாக்யதையாய், பௌஷ்கல்யஞ்சொல்லுகிறது.

மேலுக்கவதாரிகை ( இனிப்போயித்யாதி ) வாக்யதாத்பர்யம் ( இனியுனக்கித்யாதி ) “ ஹடேதஜலெ ” ( கதேஜலே ) இத்யாதிவாக்யவிவரணம் ( அவன்வந்தாலுமித்யாதி ) ப்ராஸங்கிகம் ( பெரியதிருமலைநம்பியித்யாதி )

சிறுபூவாய், நெடுமாலார்க்கென்தூதாய் எனதுநோய் நுவலென்ன நுவலாதே யிருந்தொழிந்தாய் நீயலையே, நான் சாயலொடு மணிமாமைதளர்ந்தேன், இனியுனது வாயலகி லின்னடிசில் வைப்பாரைநாடாயே இத்யந்வய:..............*

---

# ஒன்பதாம்பாட்டு.

நாடாதமலர்நாடிநாடோறுநாரணன்றன்
வாடாதமலரடிக்கீழ்வைக்கவேவகுக்கின்று
வீடாடிவீற்றிருத்தல்வினையற்றதென்செய்வதோ
ஊடாடுபனிவாடாயுரைத்தீராயெனதுடலே.

## ஆறாயிரப்படி.

( நாடாதமலர் ) ஒருவாடைவந்து தன்னையிரப்புக், அது எம்பெருமானுடைய நியோகத்தாலே வந்திருக்கிறதாகக்கொண் டத்தைக் குறித்து, ஸர்வஸ்வாமியான தன்திருவடிகளிலே அபர்யந்த கந்தபுஷ்பாதிஸர்வபரிசர்யோப கரணங்களைக்கொண்டு ஸர்வகாலமும் ஸர்வஶேஷ வ்ருத்தியும்பண்ணுகைக்காகவன்றே ! என்னுடைய ஸ்வரூபம் பரிக்லப்தமாயிற்று ; ஆனபின்பு இப்படி ஶேஷைகஸ்வபாவையான நான் தன்னைவிஶ்லேஷித்து, விஶ்லேஷத்திலே யபிஷிக்தையா யிருக்கு மிப்பொல்லாவிருப்பென்செய்வதோவென் றெம்பெருமானுக்கு விண்ணப்பஞ் செய்தாலவனுபேக்ஷித்திருந்தானாகில் பின்னைவந்தீரவேணுமென்கிறாள்... ......*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், முன்புபோலன்றியே முடிப்பதாக வவன்பக்கல் நின்றும் வந்ததொருவாடையைப்பார்த்து, நிருபாதிகபந்துவானவருக் கொருவார்த்தைசொல்லிவந்து பின்னை நலியாயென்கிறாள்.

ஊடு - அவர்க்குமெனக்கும்நடுவே. ஆடு - நடையாடித்திரிகிற. பனிவாடாய் - குளிர்ந்தவாடாய். நாடாத - ஆதராநுரூபமாகத்தேடவரிய. மலர் - பூக்களை. நாடி - தேடி. நாடோறும் - நித்யமாக. நாரணன்றன் - நிருபாதிக ஸம்பந்தத்தையுடைய ஸ்வாமியான நாராயணனுடைய. வாடாதமலர் - செவ்வித்தாமரைப்பூப்போலே போக்யமான. அடிக்கீழ் - திருவடிகளிலே. வைக்கவே - ஸமர்ப்பிக்கவே. வகுக்கின்று - கரணங்களை வகுக்கிறதாயிருக்க. வீடு - விஶ்லேஷத்திலே. ஆடி - வர்த்தித்து. வீற்றிருத்தல் - தனியிருத்தலாகிற. வினையற்றது - பாக்யஹீநக்ருத்யம். என்செய்வதோ - என்னப்ரயோஜநம் தருவதோவென்று. உரைத்து - அவனுக்குரைத்து. அநுகூலோத்தரம் பெற்றிலையாகில். எனதுடல் - என்ஶரீரம். ஈராய் - இராதபடி யீர்ந்துபொகடு.

வீடு - பிரிவு. இத்தால் - கடகரவஸ்த்தாவிஶேஷத்தாலே பாதகராகிலுமதில் தாத்பர்யமில்லை, கார்யகரராகி லுத்தேஶ்யரென்றுகருத்து....................*

---

## ஈடு _ ஒன்பதாம்பாட்டு.

“ சாயலொடுமணிமாமை தளர்ந்தேன்நான் ” என்றிருக்கிறஸமயத்திலே ஒருவாடைவந்து உடம்பிலேபட்டது, இதினுடையதோற்றரவிருந்தபடியாலே வெறுமனன்று; மஹாராஜருடைய மிடற்றோசையில்தெளிவைக் கேட்டுத்தாரை, “ பூர்வக்ஷணத்திலே வாலிகையாலே நெருக்குண்டுபோனவரிப்போதிப்படி தெளிந்துவந்தறை கூறுகிறவிது வெறுமனல்ல, இதுக்கோரடியுண்டு” என்றாற்போலே, இவளும்இவ்வாடைக்கோரடி யுண்டாகவேணும் என்றுபார்த்து, ராஜாக்கள் ராஜத்ரோஹம் செய்தவர்களைநலிகைக்கு வேற்காரரை வரவிடுமாபோலே நம்மைநலிகைக்காக ஸர்வேஸ்வரனிவ்வாடையை வரவிட்டானாக வேணுமென்றுபார்த்து, வேற்காரர்கொடுபோய் நலியப்புக்கவாறே “ நிதியுண்டு ” என்பாரைப்போலே, நான்சொல்லுகிறவார்த்தையை நீயங்கேசென்றறிவித்தால் “ அத்தலையால்வரும் நன்மையும்வேண்டா” என்றிருந்தானாகில், அவஶ்யம் வந்தென்னை முடிக்கவேணுமென்றவ்வாடையையிரக்கிறாள்.

( நாடாதமலர்நாடி ) “ ஆத்மபுஷ்பத்தைச்சொல்லுகிறது ” என்பாருமுண்டு, அங்ஙனன்றிக்கே, ஜீயர், “ எண்டிசையுமுள்ள பூக்கொண்டு” என்கிறபடியே. “தேடவரியபுஷ்பங்களெல்லாம்தேடி” என்றருளிச்செய்வர். இதுதானொருநாள் தேடிவிடுகையன்றிக்கே ( நாடோறும் ) விச்சேதியாதபடி. கிஞ்சித்கரித்து ஸ்வரூபம்பெறும் வஸ்துவுக்கு விச்சேதம் ஸ்வரூபஹாநியிறே. ( நாரணன் ) நித்யபரிசர்யைபண்ணவேண்டும்படி ஸர்வஸ்வாமியானவன். ( வாடாதமலரடிக்கீழ் ) செவ்விமாறாதபூப்போலே யிருக்கிற திருவடிகளின்கீழே. ஸ்வரூப ஹாநியானாலும் விடவொண்ணாதபடி நிரதிஶய போக்யமுமான திருவடிகள். ( வைக்கவே ) சேர்க்கவே.

(வருக்கின்று) உண்டாக்கிற்று. ஸ்ருஷ்டஸ்த்வம் வநவாஸாய போலே. இப்படி வருத்ததுமாய் ஸுலபமாய் நிரதிஶயபோக்யமுமான திருவடிகளிலே ஸர்வவிதகைங்கர்யங்களையும் பண்ணவாயிற்று இத்தை யுண்டாக்கிற்று. ஶேஷபூதனுக்கு கிஞ்சித்கரித்து ஸ்வரூப ஸித்தியானாற்போலே ஶேஷிக்கும் கிஞ்சித்கரிப்பித்துக்கொண்டிறே ஸ்வரூபஸித்தி. இப்படியிருக்க (வீடாடிவீற்றிருத்தல் வினையற்றதென்செய்வதோ) வீடென்று - விடுகை. அதாவது - விஶ்லேஷிக்கை. ஆடுகை - அவகாஹிக்கை. வீற்றிருக்கையாவது - விஶ்லேஷத்திலே மூர்த்தாபிஷிக்தையாயிருக்கை. வினையறுகை யாவது - நல்வினையறுகை. இப்படி பாக்ய ஹாநியாலே விஶ்லேஷத்திலே அபிஷேகம்பண்ணித் தம்மைப்பிரிந்திருக்கிற விப்பொல்லாதவிருப்புண்டு, இதென்செய்யக்கடவதோவென்னுதல்; அன்றிக்கே, தம்மையும்பிரிந்து, தம்மோடொரு ஸம்பந்தத்தையிட்டு பந்துக்களும்கைவிட, அவர்களையும்விட்டு, வேறுபட்டிருக்கிற விவ்வஸ்து, என்செய்யக்கடவதோவென்னுதல். "எமராலும்பழிப்புண்டிங்கென்றம்மாலிழிப்புண்டு" என்னக்கடவதிறே.

(ஊடாடுபனிவாடாய்) வேற்காரர் அங்குத்தைவார்த்தையை யிங்கேசொல்லி, இங்குத்தைவார்த்தையை யங்கேசொல்லித்திரியுமாபோலே, அங்கோடிங்கோடாய்த் திரியாநின்றதாயிற்று. ஊடென்று - உள்ளாய், ஆடுகை - ஸஞ்சரிக்கையாய், அங்கே அந்தரங்கமாகஸஞ்சரிக்கை. அன்றிக்கே, ஸம்ஶ்லேஷஸமயத்திலே கிட்டி வர்த்தித்துப்போந்த நீயென்னுதல். (உரைத்து) நித்யகைங்கர்யத்துக்கிட்டுப் பிறந்தவஸ்து இப்படியிருக்கக்கடவதோ! என்றறிவித்தால், "அத்தலையால்வரும் கைங்கர்யமும் நமக்குவேண்டா" என்றிருந்தானாகில், அவஶ்யம்வந்து அவனோட்டைப் பிரிவுக்குச்சிளையாத வென்னுடலை முடித்துவிடவேணுமென்று காலைப்பிடித்து வேண்டிக்கொள்ளுகிறாள்....................................*

---

## ஜீயர் அரும்பதம்.

ஒன்பதாம்பாட்டு (நாடாதவித்யாதி) "ஈராய்" என்கையாலே - வாடைபாதகமென்றும், "உரைத்து" என்று - அவனுக்குச்சொல்லி யென்னைமுடியென்கையாலே-அவன்வரவிட்டானென்றும், தோன்றுகையாலே யிவ்விரண்டுக்கு மநுகுணமாகவவதாரிகை (சாயலொடித்யாதி) "ஊடாடுபனிவாடாய்" என்றத்தைப்பற்ற (இதினுடையவித்யாதி) என்றாற்போலேயிவளும் - இதினுடைய தோற்றரவிருந்தபடியாலே வெறுமனன்று - இவ்வாடைக்கோரடி யுண்டாகவேணுமென்று பார்த்துளென்றந்வயம். தோற்றரவு - ப்ராதுர்ப்பாவம். மிடற்றோசையில் தெளிவென்றது - "தெந நாஒெடநஊஹ தா" (தேநநாதேநமஹதா) என்றத்தைப்

பற்ற. “ த்வயாதஸ்யநிரஸ்தஸ்ய பீடிதஸ்யவிஶேஷத꞉ । இஹைதத்
ஸநராஹ்வா நம்ஸங்க்³ராம்ஜநயதீவமே ” ( த்வயாதஸ்யநிரஸ்தஸ்யபீடிதஸ்யவி
ஶேஷஃ । இஹைதத்யபுநராஹ்வாநம்ஸங்காம்ஜநயதீவமே ) என்றத்தைப்பற்ற ( பூ
ர்வக்ஷணத்திலேயித்யாதி ) அறைகூறுகை - யுத்தத்துக்கழைக்கை. ஜயத்வநியும்.
ஓரடி - ஓரவஷ்டம்பம். ஓரடியுண்டாகவேணும் - ஈஶ்வரனடியாக வுண்டாகவே
ணும். “ உரைத்திராய் ” என்றத்தைப்பற்ற ( ராஜாக்களித்யாதி ) வேற்கரரை - ஆ
யுதவான்களை. நிதியுண்டென் பாரைப்போலேயென்றது - “ வைக்கவேவகுக்கின்
று ” என்றத்தைப்பற்ற. தார்ஷ்டாந்திகே, நிதிஸ்த்தாநீயம் - கைங்கர்யம்.

நாடாத - தேடவரிய. மலராகில் தேடப்போகாததொன்றில்லையிறே. ஆகை
யாலேதேடவரியது - ஆத்மபுஷ்பமிறேயென்றுகருத்து. இத்தைமலரென்கிறது - ஆ
த்மாவைத்திருத்தி ஸமர்ப்பிக்கையு மீஶ்வரனுக்கு புஷ்பஸமர்ப்பண வத்போக்ய
மாகையாலே. இங்கே “ யஇத³ம் பரமம் கு³ஹ்யம் மத்³ப⁴க்தேஷ்வபி⁴தா⁴ஸ்யதி । ப⁴க்திம்
மயி பராம் க்ருத்வா மாமேவைஷ்யத்யஸம்ஶய꞉। நச தஸ்மாந்மநுஷ்யேஷு
கஶ்சிந்மே ப்ரியக்ருத்தம꞉ । ப⁴விதா நச மே தஸ்மாத³ந்ய꞉ ப்ரியதரோ பு⁴வி ”
( யஏதத்பரமங்குஹ்யம் மத்பக்தேஷ்வபிதாஸ்யதி । பக்திம்மயிபராங்க்ருத்வா மா
மேவைஷ்யத்யஸம்ஶய꞉ । நசதஸ்மாந்மனுஷ்யேஷு கஶ்சிந்மேப்ரியக்ருத்தம꞉ ।
பவிதாநசமேதஸ்மா தந்ய꞉ப்ரியதரோபுவி ) என்றதநுஸந்தேயம்.

அஞ்ஜலிஸாத்யவிஷயத்திலே நாடோறும்வேணுமோவென்ன ( கிஞ்சித்கரி
த்தித்யாதி ) விச்சேதம் - ஸ்வரூபஹாநியாகைக்கு, ஸ்வரூபந்தானிருக்கும்படி யெ
ங்ஙனேயென்ன ( நித்யபரிசர்யையித்யாதி ) திருவடிகளின் போக்யதையுரப்பை
யருளிச்செய்கிறார் ( ஸ்வரூபஹாநியித்யாதி ) ஸ்வரூபஹாநியானாலும் - நாரணனத
ல்லாவிட்டாலும்.

உக்தார்த்தநிகமநம் ( இப்படியித்யாதி ) ஸமாஸத்வயாபிப்ராயேண ( வகு
த்ததுமாய் ஸுலபமுமாயென்றது ) அயோத்யாகாண்டே லக்ஷ்மணம்ப்ரதிஸுமி
த்ரா, “ ஸ்ருஷ்டஸ்த்வம் வநவாஸாய ஸ்வநுரக்த꞉ ஸுஹ்ருஜ்ஜநே । ராமே ப்ரமாத³ம்
மாகார்ஷீ꞉ புத்ர ப்⁴ராதரி க³ச்ச²தி. ” ( ஸ்ருஷ்டஸ்த்வம்வநவாஸாய ஸ்வநுர
க்தஸுஹ்ருஜ்ஜநே । ராமேப்ரமாதம்மாகார்ஷீ꞉புத்ரப்ராதரிகச்சதி. ” கைங்கர்யத்
தாலிவனுக்கு ஸ்வரூபலாபமொழிய வீஶ்வரனுக்கு ப்ரயோஜநமில்லையே, ஆகையா
லே அவதாரிகையிற்சொன்ன கைங்கர்யநிதித்ருஷ்டாந்தம்சேராதேயென்ன ( ஶே
ஷபூதனுக்கித்யாதி ) “ வாடாத ” என்கிற விஶேஷணத்துக்கு - மலரடிக்கிழ்வை
யாதபோது மலரடிவாடுமென்று கருத்து.

“ வினையற்றதாலே வீடாடி வீற்றிருத்தலென்செய்வதோ ” என்றந்வயி
த்தர்த்தம் ( இப்படி பாக்யஹாநியாலேயித்யாதி ) என்செய்யக் கடவதோ - ஸம்
ஶ்லேஷாந்தமாகிறதோ,? நாஶாந்தமாகிறதோவென்றபடி. வீடாடியிருப்பதாய்
வீற்றிருத்தலையுடைத்தா யிருக்கிற வினையற்றது - பாக்யஹீநமான விந்தசேதநவஸ்
துவென்று த்விதியநிர்வாஹார்த்தம். த்விதீயார்த்தத்துக்கு வீற்றிருத்தல் - வேறுப
டவிருக்கை. வீடாடியென்று - பந்துவிஶ்லேஷத்துக்கு முபலக்ஷணம். “ வீற்றிரு
த்தல், வினையற்றது ” என்கிற பதத்வயத்துக்கு மர்த்தத்வயம். “ வினையற்றதென்

செய்வதோ " என்றவநந்தரம், என்று இத்யத்யாஹாரః. இவ்வஸ்துவென்றது - ஸ்வஸ்வரூபத்தை. அவனைப்பிரிந்திருக்கிற தசையிலே யவனோட்டைஸம்பந்தமே ஹேதுவாக பந்துக்களும் கைவிடுவர்களென்கைக் குதாஹரணம் ( எமராலுமித்யாதி ) என்னோடநுபந்தமுடையராலும் பழிக்கப்பட்டு. தம்மாலு முபேக்ஷிக்கப்பட்டு, இவ்வுத்தை யிருப்புக்கென்ன ப்ரயோஜநமுண்டு.

ஊடென்று - நடுவாதல், அந்தரங்கமாதல். அந்தரங்கமென்றபக்ஷத்தில் - அவனுக்கந்தரங்கமென்னுதல், எனக்கந்தரங்கமென்னுதல். நடுவென்றவர்த்தத்தைக்காட்டுகிறார் ( வேறகாரரித்யாதி ) அந்தரங்கமென்றபக்ஷத்தில் அர்த்தத்வயத்தையுமருளிச்செய்கிறார் ( ஊடென்றுள்ளாயித்யாதியாலும், ஸம்ஶ்லேஷேத்யாதியாலும் ) இந்தயோஜனைக்கும், ஊடென்று - உள்ளு. ஆடுகை - வர்த்திக்கை. சினையாத - சலியாத. காலைப்பிடித்தென்றது - சாடு. கால் - காற்றும், பாதமும்.

ஊடாடுபனிவாடாய், நாடோறும் நாடாதமலர்நாடி நாரணன்றன் வாடாதமலரடிக்கீழ்வைக்கவே வகுக்கின்று - உண்டாக்கிற்று. இப்படியிருக்க, வினையற்றது - வினையறுகையாலே வீடாடிவீற்றிருத்தலென் செய்வதோவென்றுரைத்து, அவன் வேண்டாவென்றானாகில், எனதுடலையீராய் இத்யந்வயః. ....................*

# பத்தாம்பாட்டு.

உடலாழிப்பிறப்புவீடுயிர்முதலாய்முற்றுமாய்க்
கடலாழிநீர்தோற்றியதனுள்ளேகண்வளரு
மடலாழியம்மானைக்கண்டக்காலிதுசொல்லி
விடலாழிமடநெஞ்சேவினையோமொன்றாமளவே.

## ஆறாயிரப்படி.

( உடலாழி ) ஸர்வ ஜகத்ஸ்ருஷ்டியையும் பண்ணி, ஸ்ருஷ்டமான ஜகத்தினுடையரக்ஷணார்த்தமாகத்திருப்பாற்கடலிலே திருவாழிதொடக்கமாகவுள்ள திவ்யாயுதங்களையு மேந்திக்கொண்டு கண்வளர்ந்தருளுகிற பரமகாருணிகனான வெம்பெருமானைக் கண்டக்கால், " நாடாதமலர்நாடி " இத்யாதி, " வினையற்றதென்செய்வதோ " என்றிதுசொல்லி, அவன் நம்முடைய வபேக்ஷிதம் செய்தருளுமளவு மென்னை நீ தரித்துக்கொண்டிருவென்று தன் திருவுள்ளத்தைக்குறித்துச் சொல்லுகிறாள். *

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், கீழ்ச்சொன்னவைபோ லன்றியே க்ஷீரார்ணவத்திலே அநுரவர்த்தியானவன் பக்கலிலேதானே போகிற நெஞ்சைக்குறித்து கார்யநிஷ்கர்ஷம் பண்ணிவிடுகிறாள்.

ஆழி - அகாதமாய். மடநெஞ்சே - எனக்கு பவ்யமான நெஞ்சே. உடல் - உடலிலே. ஆழி - சக்ராகாரமாக. பிறப்பு - மாறிமாறிப்பிறக்கிற ஸம்ஸாரஸ்த்தலமும். வீடு - ஏதந்நிவ்ருத்திபூர்வகமாக ப்ராப்யமான மோக்ஷமும். உயிர் - இப்போகமோக்ஷங்களுக் கவஸ்த்தா பேதத்தாலே போக்தாவான ஆத்மாவும். முதலாய் -

முதலானவற்றுக்கு நிர்வாஹகனாய். முற்றுமாய் - மற்றும் போக்யபோகோப கரணாதிகளெல்லாம் ஸ்வப்ரகாரமாம்படி ப்ரகாரியாய். ரக்ஷணார்த்தமாக ஆழிநீர்-அகாதஜலமான. கடல் - க்ஷீரார்ணவத்திலே. தோற்றி - ஸந்நிஹிதனாய். அதனுள்ளே - அதற்குள்ளே. கண்வளரும் - கண்வளர்ந்தருளாநிற்குமவனாய். அடல் - ஆஶ்ரிதவிரோதிவிஷய யுத்தத்தையுடைய. ஆழி - திருவாழியாழ்வானையுடையனான. அம்மானை - ஸ்வாமியை. கண்டக்கால் - கண்டக்கால். இது - வர்த்தமானமான விந்தஆர்த்தியை. சொல்லி - அவனுக்குச்சொல்லி. வினையோம் - பிரிவுக் கடியான பாபத்தை யுடையோமான நாம். ஒன்றுமளவு - அவனோடொன்றுமளவும். விடல் - விடாதேகொள்.

"என்னைவிடாதேகொள்" என்றுஞ் சொல்லுவர். "ஆழிமடநெஞ்சே-சுழன்றுவருகிற பேதைநெஞ்சே" என்றுஞ் சொல்லுவர். இத்தால் - கடகராவார் அந்தரங்க பூதரென்று கருத்து. ..........................................................*

---

ஈடு-பத்தாம்பாட்டு.

"அல்லாதவற்றையெல்லாம்விட்டு, நெஞ்சைத்தூதுவிடுகிறாள்" என்பாருமுண்டு. அப்போது, விடலென்றது - அவனை விடாதேகொள்ளென்கை. அன்றிக்கே, கீழ்ப்பாட்டில், "வைக்கவேவகுக்கின்று" என்று - கைங்கர்யம் ப்ரஸ்துத மானவாறே, தாய்முலையை நினைத்த கன்றுபோலே திருவுள்ளம்பதறி ஶரீரத்தைவிட்டுப் போகப்புக்கது, நங்கார்யமோராறுதிபிறக்குமளவும் நீயென்னைவிடாதே கொள்ளென்னுதல்.

( உடலாழிப்பிறப்பு ) உயிரினுடைய உடலாழிப்பிறப்பு ( ஆத்மாவினுடைய ஸஹஜமானபிறப்பு. ) வீடுமுதலாமுற்றுமாகைக்காக - மோக்ஷாதி புருஷார்த்தங்களைப் பெறுகைக்காக. ஶரீரத்தினுடைய வட்டமானபிறப்பு. அன்றிக்கே, ஆழியென்று - கடலாய், அத்தால் - காம்பீர்யமாய், அஸங்க்யேயமான ஜந்மமென்னுதல். வீடு - மோக்ஷம். ஸ்ருஷ்டிக்கு ப்ரயோஜநம் - மோக்ஷமாகையாலேசொல்லுகிறது. அன்றிக்கே, (வீடுயிர் ) ஜந்மங்கள்தோறுமுண்டானஶரீரஸ்த்தமான ஆத்மாக்கள். உயிர் தொடக்கமாகமற்றுமுண்டானகார்யஜாதத்தையுண்டாக்குகைக்காக. ( ஆய்) "஬ஹு஬ஸ்யாம்" ( பஹுஸ்யாம் ) என்கிறபடியே, தன்விகாஸமேயாகையாலே. ( கடலாழிநீர்தோற்றி ) ஆழிநீர் - ஆழியநீர். "அப ஏவ ஸஸர்ஜாதௌ" ( அபஏவஸஸர்ஜாதௌ ) என்கிறபடியே மிக்க ஜலத்தையுடைத்தான ஏகார்ணவத்தை யுண்டாக்கி, இவ்வருகுண்டான ஸ்ருஷ்ட்யாதிகளுக்காக அங்கேவந்து கண்வளர்ந்தருளும். ( அடலாழியம்மானை ) ஸ்ருஜ்யபதார்த்தங்களுக்கு விரோதிகளாயிருப்பாரை யழியச்செய்கைக்காக ஆசிலேவைத்தகையுந் தானுமாயிற்று கண்வளர்ந் தருளுவது. ( கண்டக்கால் ) என்னிலுமுனக்கன்றோ பேறுமுற்பட்டிருக்கிறது. சந்த்ரேத்ருஷ்டிஸமாகமஃபோலே கண்டாரைக்காணுமித்தனையிறேதனக்கு. ( இதுசொல்லி ) "வைக்கவேவகுக்கின்று" என்கிற வார்த்தையைச்

சொல்லி யென்னுதல் ; ஸ்ருஷ்டிக்கு ப்ரயோஜநம் - "விசித்ராதேஹ ஸம்பத்திரீச்வராய நிவேதிதும்" (விசித்ராதேஹஸம்பத்தி ரீஸ்வராயநி வேதிதும்) என்கிறபடியே, தேவர்திருவடிகளிலே ஸர்வ கைங்கர்யங்க ளையும்பண்ணுகையன்றோவென்கை. விடல் என்கிறபதம் - மேலேயந்வ யிக்கிறது. (ஆழிமடநெஞ்சே) அளவுடையையாய் பவ்யமானநெஞ்சே யென்னுதல், சுழன்றுவருகிற பேதைநெஞ்சே யென்னுதல்.

(வினையோமொன்றுமளவும்விடல்) ஸ்ருஷ்டிக்குப்ரயோஜநம்- அங்கே யவரைக்கிட்டி யடிமைசெய்கையாயிருக்க, பிரிகைக்கீடான பா பத்தைப்பண்ணின நாம் அவரோடே சேருமளவும் நீயவரை விடாதே யொழியவேணும்..........................................................*

---

## ஜீயர் அரும்பதம்.

பத்தாம்பாட்டு. (உடலாழியித்யாதி) (விட்டுப்போகப்புக்கது) அத்தை க்குறித்து என்றத்யாஹாரம். அறுதி - நிர்ணயம். விடாதே கொள்ளென்னுதல்-வி டாதே கொள்ளென்கிறுளென்றபடி.

அந்வயம் (உயிரினுடையவித்யாதி) அதாவது - ஆத்மாவினுடைய ஶரீரத் தினுடைய வட்டமானபிறப்பினுடைய வீடுண்டு - மோக்ஷம். அதுமுதலான வெல் லா புருஷார்த்தங்களையும் பெறுகைக்காக வென்றபடி. ஆய் - ஆகைக்காக. பெறு கைக்காகவென்றபடி. "ஆழி" என்றமாத்ரத்துக் கர்த்தாந்தரம் (அன்றிக்கேயா ழியித்யாதி) அடைவேசொல்லாதே தர்மார்த்தகாமங்களுக்குமுன்னே மோக்ஷத் தைச்சொல்லுவானென்னென்ன (ஸ்ருஷ்டிக்கித்யாதி) "உடலாழி" இத்யாதி க்கர்த்தாந்தரம் (அன்றிக்கே வீடுயிரித்யாதி) இந்தபக்ஷத்தில், ஶரீரத்தினுடைய வஸங்க்யாதமான பிறப்புக்கள்தோறுமுண்டான ஶரீரஸ்த்தாத்மாக்கள்முதலான தேவாதிகார்யஜாதத்தை யுண்டாக்குகைக்காக வென்றபடி. வீடுயிர் - ஶரீரஸ்த்த ங்களான ஆத்மாக்கள். ஆய் - ஆக்குகைக்காக. உண்டாக்குகைக்காக வென்றபடி. இப்பக்ஷத்தில், ஆக்குகைக்காகவென்னுதே "ஆய்" என்பானென்னென்ன (ப ஹுஸ்யாமித்யாதி)

"கடலாழிநீர்தோற்றி" என்று - ஸமஷ்டி ஸ்ருஷ்டியைச்சொல்லுகிறது. ஆழிநீர்க்கடல் இத்யந்வய:. மாநவே தர்மஶாஸ்த்ரே, "அப ஏவ ஸஸர்ஜாதௌ தாஸு வீர்யமபாஸ்ருஜத் । ததண்டமபவத்தைமம் ஸஹஸ்ராம்ஶுஸமப்ரபம்" (அபஏவஸஸர்ஜாதௌதாஸுவீர்யமபாஸ்ருஜத் | ததண்டமபவத்தைமம்ஸ ஹஸ்ராம்ஶுஸமப்ரபம்.) (அபஏவஸஸர்ஜாதௌ என்கிறபடியே) ஸ்ருஷ்டி க்ர மவாக்யங்களின்படியேயென்றபடி. அபஏவஸஸர்ஜாதௌ என்றது - ஸமஷ்டி ஸ் ருஷ்டிபரமிறே. "கடலாழிநீர்" என்று விஶேஷிக்கையாலே (ஏகார்ணவத்தை யென்கிறது) "அதனுள்ளே" என்று - தஜ்ஜாதீயமான கடலைப் பராமர்ஶிக்கிற து. ஆக, முன்னே ஸ்ருஷ்டியைப்பண்ணி, அதிலே ஸங்கல்பரூபவீர்யத்தைவிட்டு, அதிலே யண்டத்தையுண்டாக்கி, அதிலே மஹார்ணவத்தையுண்டாக்கி, அதிலேக ண்வளர்ந்து சதுர்முகனையுத்பாதித்து, இவ்வருகுண்டான ஸ்ருஷ்டி ஸ்த்திதிகளுக் காக க்ஷீரார்ணவத்திலே யநிருத்தரூபியாய்க் கண்வளர்ந்தருளுமென்றபடி.

